# சங்க இலக்கியத்தில் தாய் - சேய் உறவு - ஓர் உளவியல் நோக்கு

சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக
அளிக்கப்பெற்ற ஆய்வேடு

**சு.கோகிலவாணி** எம்.ஏ., எம்.ஃபில்.,
ஆய்வாளர்,

தமிழ்த்துறை,
பச்சையப்பன் கல்லூரி,
சென்னை - 600 030.

ஏப்ரல் 1997

டாக்டர் வெ.தெ. மாணிக்கம், எம்.ஏ.,பிஎச்.டி.,
முதுகலைப் பேராசிரியர்-தலைவர் ( ஓய்வு ),
தமிழ்த்துறை, பச்சையப்பன் கல்லூரி,
சென்னை - 600 030.

## மேற்பார்வையாளர் சான்றிதழ்

"சங்க இலக்கியத்தில் தாய்-சேய் உறவு - ஓர் உளவியல் நோக்கு" என்னும் தலைப்பில் உள்ள இந்த ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகத்தில் முனைவர் ( பிஎச்.டி., ) பட்டம் பெறுவதற்காக என் மேற்பார்வையில் செல்வி. சு. கோகிலவாணி, எம்.ஏ.,எம்.ஃபில்., என்பவர் 1991 ஜுன் முதல் 1997 ஏப்ரல் வரை சென்னை பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த்துறையில் ஆய்வு செய்து உருவாக்கியதாகும். இந்த ஆய்வேடு இதற்குமுன் வேறு பட்டத்திற்கோ, ஆய்வு அரங்கிற்கோ அனுப்பப்படவில்லை என்பதற்கும் இந்த ஆய்வேடு அவருடைய சொந்த முயற்சியால் உருவானது என்பதற்கும் இதன்வழிச் சான்று வழங்குகிறேன்.

வெ.தெ. மாணிக்கம்.

சென்னை 600 030,
நாள் : 11 .4.1997.

( வெ. தெ. மாணிக்கம் )
மேற்பார்வையாளர்

செல்வி. சு. கோசிலவாணி, எம்.ஏ.,எம்.ஃபில்.,
ஆய்வாளர்,
தமிழ்த்துறை, பச்சையப்பன் கல்லூரி,
சென்னை 600 030.
(தேர்வுநிலை தமிழ் விரிவுரையாளர்,
சேலம் சௌடேசுவரி கல்லூரி,
சேலம் - 636 010.)

## ஆய்வாளர் உறுதிமொழி

"சங்க இலக்கியத்தில் தாய்-சேய் உறவு - ஓர் உளவியல் நோக்கு" என்னும் தலைப்பில் முனைவர் ( பிஎச்.டி.,) பட்டத்திற்காகச் சென்னை பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த்துறையில் 1991 ஜூன் முதல் 1997 ஏப்ரல் வரை டாக்டர் வெ. தெ. மாணிக்கம் அவர்களின் மேற்பார்வையில் ஆய்வு நிகழ்த்தி என்னால் உருவாக்கப் பெற்றுள்ள இந்த ஆய்வேடு, என் சொந்த முயற்சியால் உருவானது என்றும், இதற்குமுன் இந்த ஆய்வேடு வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் ஆய்வரங்கிற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் இதற்காக வேறு எந்தப் பட்டமும் அளிக்கப்பெறவில்லை என்றும் நான் உறுதி அளிக்கிறேன்.

சு. கோசிலவாணி
11.4.97

சென்னை 600 030,
நாள் : 11.4.1997.

( சு. கோசிலவாணி )
ஆய்வாளர்

## நன்றியுரை

சேலம் சௌடேசுவரி கல்லூரி என்னும் அரசு உதவி பெறும் தனியார் கல்லூரியில் பணியாற்றி வரும் எனக்கு, முனைவர் பட்டத்திற்கு ஆய்வுசெய்ய இசைவு அளித்த சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு என் நன்றி.

ஆய்வுப் பணிக்களமாக அமைந்த பச்சையப்பன் கல்லூரியில் நான் ஆய்வினை மேற்கொள்ள அன்புடன் இசைந்த முன்னாள் முதல்வர் டாக்டர் மா.சி. தசரதன் அவர்களை நன்றியுடன் நினைவுகூர்கிறேன். இந்நாள் முதல்வர் டாக்டர் ஆர்.எஸ். ராகவன் அவர்களுக்கு என் நன்றியைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

சங்க இலக்கியத்தில் தனித்த ஈடுபாடுகாட்டித் தமிழாய்வில் முதன்மையாக விளங்கும் பச்சையப்பன் கல்லூரியில் பிஎச்.டி. மாணவியாக வேண்டும் என்பது என் தணியாத ஆர்வமாக இருந்தது. எனது குறிக்கோள் வெல்ல ஆதரவு காட்டிய பெருந்தகை, நுண்மாண் நுழைபுலம் மிக்க டாக்டர் வெ.தெ. மாணிக்கம், எம்.ஏ., பிஎச்.டி., அவர்கள் என் வழிகாட்டியாக அமைந்தது என் நற்பேறு. அவர்தம் மேற்பார்வையில் நான்நிகழ்த்திய ஆய்வுக் காலத்தில் பல தடைகள் ஏற்பட்டபோதும் எனக்குப் பெரிதும் ஊக்கம் அளித்து, தேவையான கருத்துகளைக் கூறி ஆய்வை நன்முறையில் நிறைவு பெற வைத்த அச்சான்றோர்க்கு என் மனமார்ந்த நன்றி.

ஆய்வு அணுகுமுறைகளை நெறிப்படுத்தி, ஆய்வேட்டின் அமைப்பு செம்மையாக அமைய, பல கருத்துகளை நவின்று ஆற்றுப்படுத்திய டாக்டர் இராம.தட்சிணாமூர்த்தி அவர்களுக்கு என் தனி நன்றி.

உளவியல் தொடர்பான கருத்துகளைக் கூறி உதவிய டாக்டர் செந்தில் அதிபன், ஆய்வு தொடர்பான நூல்களை ஈந்து ஆய்வு தொடர்ந்து நடத்த

எல்லாவகையிலும் துணையாய் நின்ற, சேலம் சௌடேசுவரி கல்லூரி நூலகர் திரு. ஜி. வெங்கட்டராசன் ஆகியோர்க்கு என் நன்றி.

ஆய்வு செய்ய அனுமதி அளித்த சௌடேசுவரி கல்லூரி நிர்வாகத்திற்கும், பல்கலைக்கழக ஆசிரியர் சங்கம் சார்ந்த சேலம் சௌடேஸ்வரி கல்லூரி, பச்சையப்பன் கல்லூரியைச் சார்ந்த பேராசிரியர்கள் அனைவர்க்கும் என் நன்றி.

ஆய்வுக் கருப்பொருளாக, நடமாடும் உயிரோவியமாக விளங்கி, நான் தளரும்போது எல்லாம் தாங்கி நின்று என்னை மேன்மேலும் ஊக்குவித்து ஆய்வு முழுமை அடைய வைத்த என் நற்றாய் திருமதி கமலாம்பாள் சுப்பிரமணியம் அவர்களுக்கும், என் செவிலித்தாயாக விளங்கும் திருமதி சரோஜா ராமசாமி அவர்களுக்கும் இந்தச் சேயின் இதயங்கனிந்த நன்றி என்றும் உரியது.

செம்மையான முறையில் தட்டச்சு செய்து ஆய்வேடு தொடர்பான அமைப்பு முறையில் அனைத்து உதவிகளும் செய்த திரு. எஸ்.சி. மணி அவர்களுக்கும் மற்றும் ஆய்வுப் பணி சிறக்க உதவிய அனைத்து உள்ளங்களுக்கும் என் நன்றி.

சு. கோகிலவாணி
11.4.97

( சு. கோகிலவாணி )

## சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம், அகநா. | – | அகநானூறு |
| இளம். | – | இளம்பூரணர் உரை |
| உ.வே.சா. | – | உ.வே. சாமிநாதையர் |
| ஐங். ஐங்குறு. | – | ஐங்குறுநூறு |
| கலி. | – | கலித்தொகை |
| கழகம். | – | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |
| குறிஞ்சிப். | – | குறிஞ்சிப்பாட்டு |
| குறு. குறுந். | – | குறுந்தொகை |
| சிறு. சிறுபாண். | – | சிறுபாணாற்றுப்படை |
| தொல். | – | தொல்காப்பியம் |
| தொல். பொருள். அகத். | – | பொருளதிகாரம் அகத்திணை இயல் |
| தொல். பொருள். புறத். | – | பொருளதிகாரம் புறத்திணை இயல் |
| நச்சி. | – | நச்சினார்க்கினியர் |
| நெடுநல். | – | நெடுநல்வாடை |
| ப. பக். | – | பக்கம், பக்கங்கள் |
| பதி. ப.ஆ. | – | பதிப்பு, பதிப்பாசிரியர் |
| பதிற். | – | பதிற்றுப்பத்து |

| | | |
|---|---|---|
| பட். | – | பட்டினப்பாலை |
| பரி. | – | பரிபாடல் |
| புறம். புறநா. | – | புறநானூறு |
| பெரும். பெரும்பாண். | – | பெரும்பாணாற்றுப்படை |
| பேரா. | – | பேராசிரியர் |
| பொருநர். | – | பொருநராற்றுப்படை |
| மதுரைக். | – | மதுரைக்காஞ்சி |
| மலைபடு. | – | மலைபடுகடாம் |
| முருகு. திருமுருகு. | – | திருமுருகாற்றுப்படை |
| முல்லைப். | – | முல்லைப்பாட்டு |
| மே.ப. | – | மேற்படி |
| Ed., | – | Edition |
| p. pp. | – | page, pages. |

*****

"சங்க இலக்கியத்தில் தாய்-சேய் உறவு - ஓர் உளவியல் நோக்கு"

## பொருளடக்கம்



*****

## முன்னுரை

சமூகம், சமுதாயம் என்கிற பரந்த அமைப்பில் அடிப்படைக்கூறாக விளங்குபவன் மனிதன். தனிமனிதனின் செயல்கள், பழக்கவழக்கங்கள் அவனோடும், அவன் குடும்பத்தாரோடும் மட்டும் நின்றுவிடாமல் அவன் சார்ந்திருக்கும் சமூகத்தோடும் பின்னிப்பிணைந்துள்ளது. அவனது மனநலமோ, அவன் குடும்பத்தின் உந்துவிக்கும் ஊக்குவிக்கும் ஆற்றலைச் சார்ந்திருக்கின்றது. தனி மனித மனநலம், குடும்பமனநலம் இவற்றைப் பற்றிய ஆய்வுகளில் தற்கால மருத்துவ இயலார் அதிகம் கவனம் செலுத்துகின்றனர். சில குறிப்பிட்ட குழந்தை மன நோய்கள், கணவன் மனைவி உறவு விதிகள், இவற்றால் இல்லறத்தில் தோன்றும் விரிசல்கள் குறித்தும், பெற்றோர் மற்றும் குழந்தைகளின் கடமைகள் குறித்தும் உலகெங்கும் விரிவான ஆய்வுகள் நிகழ்கின்றன. சமூக அறிவியல் துறைகளில் ஒன்றான உளவியல் துறையின் தாக்கம் இலக்கியங்களிலும் இருப்பதை ஆய்ந்தோர் அறிவர். முன்னோர் வழிநின்று சங்க இலக்கியத்தில் உறவு குறித்த உளவியல் ஆய்வை மேற்கொள்ள விரும்பினேன்.

மாநிலக்கல்லூரியில் டாக்டர் மெ. சுந்தரம் அவர்களிடம் சங்க இலக்கியத்தைச் சிறப்புப்பாடமாகப் பயின்றேன். அவ்விலக்கியத்தில் எத்தனையோ ஆய்வுகள் - அவற்றில் சில உளவியல் குறித்தும் - செய்யப்பட்டுள்ளன. உளவியல் குறித்த நூல்கள் மட்டுமே பயின்றநான் அறிந்தவரை இலக்கியச் சான்றுகளுடன் அவற்றைப் பொருத்திப் பார்க்க விழைந்ததால் எழுந்த முயற்சியே இந்த ஆய்வு ஆகும்.

இல்லறத்தில் தனிமனிதர் விரும்பும் அனைத்துப் பண்புகளையும் ஏற்றுக் கொள்ளக் கூடிய குடும்ப வாழ்வு நெறிமுறைகள் என்று குறிப்பிட்டுக்கூற இயலாது.

ஒவ்வொரு குடும்பம் தனக்குச் சிறந்ததாகத் தோன்றும் சில பண்புகளைப் பரம்பரையாகக் கொள்கிறது. அதில் மாற்றம் நேரின் உடனடியாக ஏற்கத் தயங்கும் மனநிலை பரவலாகக் காணப்படுகிறது. காதலும் வீரமும் உயர்கொள்கைகளாகப் பாடுபொருளாகக் கொண்டது சங்கச் சமுதாயம். இற்றைநாள் சமுதாயமோ காதலைக் கதைகளிலும் திரைப்படங்களிலும் மட்டுமே ஆதரிக்கும், தமக்கென நேரின் எதிர்க்கும் குடும்பங்களைக் கொண்டது. இன்றைய பெற்றோரின் காதல் எதிர்ப்பு மனநிலை சங்கச்சமுதாயத்திலும் மகள் காதல் உறவு கொண்டபோது எழுந்துள்ளது ஆய்வுக்குரிய ஒன்றாக அமைந்தது. இதை மையமாகக் கொண்டபோது, தாயும்சேயும் கொண்ட உறவில் உளவியலின் தாக்கம் அடிப்படையிலிருந்து ஆய்வு செய்யக்கூடிய வகையில் அமைந்ததும் புலப்பட்டது.

எனவே, சங்க இலக்கியத்தில் தாய் சேய் உறவை உளவியல் கண்ணோட்டம் கொண்டு ஆய்வது என் நோக்கம் ஆயிற்று. சங்க இலக்கியத்தில் பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் மூலநூல்களாகவும், மற்ற தமிழிலக்கியங்களும் உளவியல், அறிவியல் தொடர்பான ஆய்வு நூல்களும் துணை நூல்களாகவும் இவ்வாய்வுக்கு எடுத்துக்கொள்ளப் பெற்றன.

ஆய்வு ஐந்து இயல்களாக அமைந்துள்ளது.

<u>இயல் – ஒன்று : சங்க இலக்கியம்</u>

சங்க இலக்கியத்தின் பொதுவான தன்மையான அகம், புறம் என்னும் வைப்பு முறை, தொல்காப்பியத்தில் தாய் சேய் பற்றிய செய்திகள், சங்க இலக்கியத்தில் இடம்பெறும் தாய்–சேய் குறித்த பெயர்கள் என்னும் மூன்று உட்பிரிவுகளைக் கொண்டு இவ்வியல் அமைகிறது.

## இயல் - இரண்டு : சேய் - சிறப்புச் செய்திகள்

குழவிப்பருவம், இளமைப்பருவம், விளையாட்டுகளும், தொழில்களும் எனும் மூவகை உட்பிரிவுகளைக் கொண்டு செய்திகள் தொகுக்கப்பெற்ற இவ்வியலில் குழந்தையின் பல்வேறு பருவ காலத்திய நிகழ்வுகள் குறிப்பிடப்படுகின்றன. குடும்பத்தில் குழந்தையின் இன்றியமையாத் தேவை குறித்தும், விளையாட்டும் தொழிலும் வேறுபாடின்றி ஏற்றுக்கொள்ளப்பட்டது குறித்தும் சங்க இலக்கியம் பல சான்றுகள் தருகிறது.

## இயல் - மூன்று : தாயும் மகனும்

அகம், புறம் எனப் பிரிக்கப்பெற்ற சங்க இலக்கியங்களில் அவற்றின் தனித் தன்மைக்கேற்பவே,

1. அக இலக்கியங்களில் தாயும் மகனும்
2. புற இலக்கியங்களில் தாயும் மகனும்
3. தாயின் தவறிலைச் செயல்கள்

என்ற தலைப்புகளில் செய்திகள் இடம்பெறுகின்றன. குழந்தைக்காக மறுமணம் நடந்தது என்பதைப் 'பெரும்பொருள் வதுவை' என்னும் சொல்லால் குறிப்பிட்டுக் கூறும் அரிய செய்தியை ஐங்குறுநூறு தருகிறது.

"தம் பொருள் என்ப தம் மக்கள்"

என்றவாறு மக்கள் பிறவாதபோது அதைப் பெரும்பொருள் எனக்கருதி அதைப் பெறவே ஒரு வதுவை நடத்தப்பட்டது. அம்மகவைப் பெறாத தலைவியின் நிலைமையை உளவியல் வழி உரை அப்பாடல் சான்றளிக்கிறது.

## இயல் – நான்கு : தாயும் மகளும்

மகளது களவு வாழ்வு, உடன்போக்கு, கற்பு வாழ்வில் தாயின் இடம் ஆகிய உட்பிரிவுகளில் ஆய்வுச் செய்திகள் இவ்வியலில் இடம் பெறுகின்றன.

பெற்றோர்க்கு மகளும் அருமையான பொருளே! அன்னை ஓம்பிய ஆய்நலத்துடன் வளரும் மகள் தாயுடன் இளமைப் பருவம் வரை நெருக்கமாய் இருக்கிறாள். தனக்கு உரியவனாய் ஒரு தலைவனைத் தேர்ந்த பிறகு நாணமும் அச்சமும் கொண்டு தாய்க்கு மறைக்கும் இயல்பு மகளிடம் காணப்படுகிறது. களவு, எக்காலத்தும் உடனே தாயால் வரவேற்கப்பட்டதில்லை என்பதைச் சங்க இலக்கியம் காட்டுகிறது. கற்புக்கடம் பூண்ட செய்தி, அறத்தொடு நின்றபின்னரே தாய்க்கு வெளிப்படுத்தப்படுகிறது. அதன் பின்னர் தானும் ஏற்றுத் தன் குடும்பத்தில் பிறரையும் ஏற்க வைப்பது தாயின் பொறுப்பு ஆகிறது. களவு கொண்ட மகளின் நிலையை உணர்ந்து இற்செறிக்கும் அன்னை அலரால் மனம் நொந்து மகளை அலைக்கவும் செய்கிறாள். அப்போது மகளும் தாயும் இரு துருவங்கள் ஆகின்றனர். அன்புமிக்க தாயும், ஆர்வமிக்க மகளும் காதலை நோக்கும் விதத்தில் மாறுபாடு காணப்படுவதைக் குறித்த செய்திகளால் இவ்வியல் சற்று நீண்டதாக அமைகிறது.

அன்னையை எதிர்க்கும் ஆயுதம் என உடன்போக்கு மேற்கொள்ளும் மகள் அதை விடுதலையாக எண்ணி மகிழ்ச்சியுடன் தலைவனோடு செல்கிறாள். தாயோ, அதனால் விளையவிருக்கும் நிகழ்வுகளை எண்ணியும், தன்னை மதியாது சென்ற மகளின் அன்பின்மை கண்டும் அதிர்ந்து கலங்குகிறாள்.

தன் மகள் வதுவை நிகழ்ந்து கற்பு வாழ்வில் மகப்பெற்றுப் பொலிதலைக் கண்டு தாய் மகிழ்கிறாள்.

## இயல் – ஐந்து : உளவியல் கண்ணோட்டத்தில் தாய்–சேய் உறவு

தாய்மையின் சிறப்பியல்புகள், தாயும் மகனும், தாயும் மகளும், தாய் தந்தையரும் சேயும், சேயின் உள்ளம் ஆகிய ஐந்து உட்பிரிவுகளில் தாய் சேய் உறவு பற்றிய கருத்துகள் உளவியல் கண்ணோட்டத்தில் இவ்வியலில் ஆய்வு செய்யப் பெறுகின்றது.

பல அறிவியல் வல்லுநர்களும், உளவியல் நிபுணர்களும் ஆய்ந்து தொகுத்த கருத்துகள், சங்க இலக்கியத்தில் தாய்சேய் உறவுக்குப் பொருந்துமாறு இருப்பனவற்றைத் தேர்ந்து அவற்றைமட்டும் ஆய்வு நோக்கில் புலப்பட வைத்துள்ளேன். இதற்குப் பின்புலமாக உளவியல்சார் நூல்களே உறுதுணையாயின.

நிறைவுரையில் ஆய்வு முடிவுகள் தொகுத்தளிக்கப் பெற்றுள்ளன. சங்ககால இலக்கியத்தில் தாய்சேய் உறவு பொறுத்தவரை, பெரும்பான்மையும் உளவியல் சிந்தனைகள் பயின்று வந்திருப்பதை ஆய்வு புலப்படுத்துகின்றது.

தாய்–சேய் பற்றிய பெயர்கள் பின்னிணைப்பில் இடம்பெற்றுள்ளன. உளவியல் குறித்த சில கலைச்சொற்களும் இணைப்பில் சேர்க்கப்பட்டுள்ளன.

*****

1. சங்க இலக்கியம்

1.1 அகம் புறம் வைப்பு முறை

1.2 தொல்காப்பியம் தரும் தாய்-சேய் பற்றிய கருத்துக்கள்.

1.3 தாய்-சேய் பற்றிய பெயர்கள்

***

## 1.1 அகம் புறம் வைப்புமுறை

உயர்தனிச் செம்மொழியாய் விளங்கும் தமிழின் சிறப்புக்கு முதன்மைச் சான்றாய் இலங்குவன சங்க இலக்கியங்களேயாம். எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்னும் இவ்விலக்கியங்கள் ஈராயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட சங்ககாலத்தவை. பாடுபொருள், செய்யுள் அமைப்பு, அடி அளவு இவற்றை நோக்கித் தொகுக்கப்பட்ட இவை அகத்தையும் புறத்தையும் பாடுவன. அகம், புறம் இவை அமைக்கப்பட்ட முறை குறித்து அறிஞர் பலவாறு கருத்துக் கூறியுள்ளனர்.

> "தொல்காப்பியத்திலேயே அகம், புறம் என்னும் பாகுபாடு அமைந்துள்ளதால் அதற்குப்பின் தோன்றிய சங்கப்பாடல்களில் அப்பாகுபாடு தெளிவாகப் பின்பற்றப்பட்டது எனலாம்"[1]

என்கிறார் நா. செயராமன்.

> "உணர்ச்சிகளுக்குப் பிறப்பிடம் மனம் என்பதும் அதில் பிறக்கும் உணர்ச்சிகளில் எல்லாம் காதல் உணர்ச்சியே மிகச் சிறந்தது என்பதும், அது மனிதகுலம் முழுவதற்கும், மற்றச் சேதன வாழ்விற்கும் பொதுவானது என்பதும், இதில் விளையும் இன்பத்தை நுகர்வதும் அதே மனம்தான் என்பதும்தான் அகப்பொருள் தத்துவத்தின் சிறப்பியல். மனம் பெறக்கூடிய சுயானுபவத்திற்கு எல்லை கிடையாது. இந்த அனுபவத்தை ஆங்கிலத்தில் Subjective experience (தற்சார்பு அனுபவம்) என்றும், அதற்குப் புறம்பாகப் பிற பொருள்களின் தொடர்பு மூலம் புலன்கள் வழியாய் மனம் பெறும் எல்லா அனுபவங்களையும் Objective experience (புறச்சார்பு அனுபவம்) என்றும் கூறுவர். அகம், புறம் என்ற பாகுபாடு இந்த முறையைத் தழுவியிருப்பதாகக் கூறலாம்."[2]

என்கிறார் ஆய்வறிஞர் டாக்டர் ச. சாம்பசிவனார்.

"பழந்தமிழர் இலக்கியத்தினை அகம், புறம் என இரு பிரிவுகளாகப் பகுத்தனர். ஒத்த தலைமகனும் தலைமகளும் உள்ளம் கலந்து ஒன்று கூடி வாழும் வாழ்க்கையைக் கூறும் பாடல்கள் அகம் எனப்பட்டன. போர், கொடை, வென்றிச் சிறப்பு முதலியவற்றைக் கூறும் பகுதிகள் புறம் எனப்பட்டன. அகவாழ்வு வீட்டு இன்பத்திற்கும் புறவாழ்வு நாட்டுச் சிறப்புக்கும் உரமூட்டின"[3]

என்கிறார் டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்.

"பொருளிலக்கணப் பாகுபாடு தமிழர்க்கே உரியது. அவ்வுரிமைச் செல்வத்துள் அகத்திணை தமிழர் புகழின் கொடுமுடி. அறத்தொடு நிற்றல் உயிர்ப்புடையதாகும்; களவொழுக்கம் தமிழ்ப் பண்பாட்டின் உயர்நடையாகும்"[4]

என்கிறார் டாக்டர் மா.ரா.போ. குருசாமி.

காட்சிப் பொருளாயும், கருத்துப் பொருளாயும் அமையும் புறம், அகம் சார்ந்தவற்றைப் படிப்பவர் கண்முன்னே தோன்றினாற்போலச் செய்யும் ஆற்றல் சங்கப் பாடல்களைப் பாடிய பெருங்கவிஞர்க்கு இருந்துள்ளது. ஆற்றல் மிக்க அவர்தம் பாடல்கள் உயிரின் இயற்கைப் பண்பாகிய இன்பத்தையும் அவ்வின்பத்திற்குக் கருவி மாத்திரையாய், உயிர்க்குப் புறம்பாக உள்ள பொருளையும் குறிக்கும் வகையில் அகம், புறம் என்ற வைப்பில் தொகுக்கப்பட்டன.

திணை, அகம், புறம் என்ற சொற்களின் பொருளைத் தொல்காப்பியர் கூறவில்லை. அவர் காலத்தில் அவை நன்கு அறியப்பட்டமையே அதற்குக் காரணமாய் இருக்கலாம். 'திணை' என்ற சொல் நலம், குடி, ஒழுக்கம் என்ற பல பொருள்களைத் தருகிறது. இதனால் மக்கள் வாழ்க்கையையே

'திணை' என்ற சொல் குறிக்கிறது என உணரலாம். திணையின் - மக்கள் வாழ்க்கையின் இரு கூறுகளை அகம், புறம் என்ற இரு சொற்களும் உணர்த்துகின்றன.

மக்கள் ஆணும் பெண்ணுமாகக் கூடியே வாழவேண்டும் என்பது உலகப் படைப்பின் அமைப்பு ஆகும். இருவரையும் அவ்வாற் பிணித்துப் பொருள், இன்பங்களை நுகர்வதும், இனத்தைப் பெருக்குவதும் குடும்பவாழ்வின் அடிப்படையான செய்வினைகளாகும். இதனை நன்கு தெளிந்த பண்டைத்தமிழ்ச் சான்றோர் மக்கட் சமுதாயத்தின் அடிப்படையாகிய குடும்ப வாழ்வினை, இலக்கணத்தில் 'பொருள்' என்றனர். பொருள் என்றாலே பெரும்பாலும் அகத்தையே குறித்தது எனலாம். குடும்பங்களால் இயன்ற மக்கட் சமுதாயம், தூ யநினைவும், தூ ய செய்கையும் கொண்டு அறவழியில் பொருளீட்டி, இன்பநுகர்ச்சியால் மண்ணக வாழ்வை விண்ணுலகப் பேரின்பநிலை பெறச்செய்யும் அவ்வாழ்வை அகப்பொருள் என்றும், குடும்பத்தவர் புறத்தே சென்று கல்வியும், தொழிலும் கற்றுப் பொருள் செய்து இம்மையிற் புகழும், இன்பமும் பெறும் புறவாழ்வைப் புறப்பொருள் என்றும் வகுத்தனர். மக்கள் வாழ்க்கையில் பெறக்கூடிய இன்பத்துக்கும் பொருட்கும் ஏதுவாக அமையும் அகமும், புறமுமாகிய நிகழ்ச்சிகள், புலவர்தம் பாடலில் அகமும், புறமுமாக மலர்ந்தன.

அருளில்லார்க்கு அவ்வுலகமும், பொருள் இல்லார்க்கு இவ்வுலகமும் இல்லை என்ற கருத்துள்ள தமிழர் தம் குழந்தைகளையும் பொருளாகக் கருதினர்.

"தம்பொருள் என்ப தம்மக்கள்" (குறள். 63)

என்ற வகையில் மக்களுடன் பிணைந்தது தமிழர் வாழ்வு. மகவுக்கு முதல் உறவாக, தலைமைத் தொடர்பாக அமைவது தாயின் உறவு. அச்சேயால் அகவாழ்விலும் புறவாழ்விலும் தாய் அடையும் மாற்றங்களை ஆராய்வதாக இவ்வாய்வு அமைகிறது.

## 1.2 தொல்காப்பியம் தரும் தாய்-சேய் பற்றிய கருத்துகள்

பழந்தமிழர் கண்ட இலக்கியக் கொள்கைகளைத் தொகுத்து வைத்த கருவூலம், சங்க இலக்கியத்தின் இலக்கணம் எனப் போற்றப்படுவது தொல்காப்பியம். இதன் பொருளதிகாரம் வழி தாய், சேய் பற்றிய கருத்துகளை அறியலாம்.

### புதல்வன் பிறப்பு

தொல்காப்பியம் காட்டும் குடும்பம் தந்தைவழி சார்ந்தது.

"பெருமையும் உரனும் ஆடூஉ மேன"[5]

என்றபடி ஆண் குடும்பத் தலைவனாக ஆட்சி புரிகிறான். அச்சமும் அடக்கமும் நிறைந்த தன் துணைவியுடன் தலைவன் நடத்தும் இல்லறத்தின் நிறைவான பயன் மக்கட்பேறு. பிள்ளைப்பேற்றின் இன்றியமையாமையைச் சமுதாயம் உணர்ந்து இருந்தது என்பதைப்,

"பூப்பின் புறப்பா டீராறு நாளும்
நீத்தகன் றுறையார் என்மனார் புலவர்
பரத்தையிற் பிரிந்த காலை யான"[6]

என்னும் நூற்பாவால் உணரலாம்.

ஆண் குழந்தைப் பிறப்பு சிறப்பாகப் பேசப்படுகிறது. 'சிறந்த புதல்வன், இன்னகைப் புதல்வன், இன்னிழைப் புதல்வன், மகன் தாய்' என்பன அதை விளக்கி நிற்கின்றன.[7]

"புதல்வற் பயந்த புனிறுசேர் பொழுதின்
நெய்யணி மயக்கம் புரிந்தோ ணோக்கி
ஐயர் பாங்கினு மமரர்ச் சுட்டியுஞ்
செய்பெருஞ் சிறப்பொடு சேர்தற் கண்ணும்"[8] என்றபடி

புதல்வன் ஈன்ற மனைவி நெய்யாடும் திருநாள் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

## தாயும் பரத்தையரும்

மருதத் திணையில் பரத்தையற் பிரிவு ஒப்புக்கொள்ளப்பட்ட நடைமுறையாக இருந்தது. மனைவிக்குச் சமமான உரிமையைக் காமக்கிழத்தி பெற்று இருந்ததைக் காண முடிகிறது. ஆடவர் முதல் மனைவி இருக்கும்போதே பிற மகளிரைத் திருமணம் செய்துள்ளனர். முதல் மனைவி 'தொன்முறை மனைவி' என்றும் அடுத்தவள் 'பின்முறை வதுவை' என்றும் அழைக்கப்பெற்றனர். தலைவன் காமக்கிழத்தியின் இல்லத்திலேயே தங்கிவிட்டால், மகன் வளர்ப்பைக் கருதித் தாய் தன்னையே தாழ்த்திக் கொண்டு, அவள் இல்லம் செல்கிறாள். இன்னிழைப் புதல்வனையே, கணவனைக் காணும் வாயிலாகக் கொள்ளும் தாயின் செயல், தன்நிலை தாழினும் தாயின் கடமை தவறாத பண்பினைச் சுட்டுகிறது.

சங்க இலக்கியம் காட்டும் காதற் பரத்தை, இற்பரத்தை, சேரிப் பரத்தை ஆகிய பிரிவுகளும் இருந்ததாகத் தொல்காப்பியம் சான்றளிக்கவில்லை. தந்தை பரத்தையர் தொடர்பு உடையவனாய் இருப்பின், அவன் தன் மகனை வெளியே அழைத்துச் செல்வதைத் தாய் தடுக்கிறாள். மீறிச் சென்று மீளும் குழந்தை, பரத்தையால் அணி செய்யப்பட்டு வந்தாலும், பரத்தை அவனோடு விளையாடிய செய்தி அறிந்தாலும் கணவனோடு ஊடும் தாயின் செயல், மகனை ஒழுக்க உணர்வோடு வளர்க்கும் பொறுப்பைக் காட்டுகிறது.

## குழந்தைக்காக மறுமணம் செய்தல்

மகப்பேறு வாய்க்காத நிலையில் கணவன், குழந்தைக்காகவே இன்னொரு மனைவியை மணம் செய்வதும், அதை முதல் மனைவி ஏற்று அவளை வரவேற்பதும் நடந்துள்ளன. தலைவன் குற்றங்குறைகளை நினைந்து, ஊடல் கொண்டிருப்பினும்,

அவனை மன்னித்து ஏற்றுக்கொள்ளும் தாய்மைப் பண்பினைக் கிழத்தி கொண்டிருக்க வேண்டும்.

"பின்முறை யாக்கிய பெரும்பொருள் வதுவைத்
தொன்முறை மனைவி எதிர்ப்பா டாயினும்"[9]

"தாய்போற் கழறித் தழீஇக் கோடல்
ஆய்மனைக் கிழத்திக்கும் உரித்தென மொழிப"[10]

என்னும் நூற்பாக்கள் அவற்றை உணர்த்துவன.

பரத்தையிற் பிரிந்தபோதும் கணவனை வழிபட்டு எழுதலும், அவன் மனக்கவலையை மாற்றுவதற்காகத் தாய்போல் அன்பு கொண்டு பேசுவதும் மனைவியின் கடமைகள். தலைவனுக்கு இழுக்கு வராமல் காப்பதற்காக, மகன் தாயாகிய மாற்றாளை, தன்னொடு ஒப்ப உயர்ந்தாளாகக் கொண்டு ஒழுக வேண்டும் என்பது செல்வன் பணித்த மொழி.[11] தன் தலைவன் பணித்ததைத் தலைவி ஏற்றுக்கொள்கிறாள்.

சேய், தாய்க்குப் பெருமை தருதல்

தாய், தன் முழுக்கவனத்தையும் செலுத்தி வளர்க்கும் மகன், வீரத்தின் விளைநிலமாய்ப் போர்க்களஞ் செல்கிறான். பெருஞ்சிறப்பெய்தி, விழுப்புண்பட்ட மகனை, மாய்ந்த நிலையில் காணும் தாய் துக்கம் தாங்காது அழுதலும்,

"மாய்பெருஞ் சிறப்பிற் புதல்வன் பெயரத்
தாய்தப வரூஉம் தலைப்பெய னிலையும்"[12]

என்றபடி இறந்துபோதலும் தாயர் இயல்பாகக் குறிக்கப்படுகின்றன. பெருமைப்படும் வகையில் விழுப்புண்பட்டு மாய்ந்த மகனின் தாய், அவனது இறப்பை நினைந்து வருந்தாமல் மனை மீண்டல் உண்டு. மகன் புறங்கொடுத்தான்

எனில் ஈன்ற வயிற்றை நோதலும், வஞ்சினம் மொழிதலும் தாயின் இயல்பு ஆக உள்ளது.

மகள் வளர்ப்பில் தாய்

பெண் குழந்தை பிறப்பு குறித்து ஏதும் குறிக்கப்படவில்லை எனினும், பெண் மக்களைப் பெரிதும் போற்றிப் பாதுகாத்த பழந்தமிழ்ப் பண்பாடு தொல்காப்பியத்தில் புலப்படுத்தப்படுகிறது. களவில் ஈடுபடும் மகளின் மெய்வழி வேறுபாடு காணும் தாய் அவளைக் கண்காணிக்கிறாள்; அலர் கண்டு எச்சரிக்கிறாள்; மகள் உற்ற நோய்க்குக் காரணம் யாதென கட்டு, கழங்கில் குறிபார்த்து, வெறியாட்டு எடுக்கிறாள்; தோழியையும் வினவுகிறாள்.

"எளித்தல் ஏத்தல் வேட்கை யுரைத்தல்
கூறுத லுசாதல் ஏதீடு தலைப்பா
டுண்மை செப்புங் கிளவியொடு தொகைஇ
அவ்வெழு வகைய என்மனார் புலவர்"[13]

என்றபடி அறத்தொடு நிற்கும் தோழியால் மகளின் களவைத் தாய் அறிந்து கொள்கிறாள்.

"தோழியை வினவலும் தெய்வம் வாழ்த்தலும்"[14]

"கிழவோன் அறியா வறிவினள் இவளென
மையறு சிறப்பின் உயர்ந்தோர் பாங்கின்
ஐயக் கிளவி யறிதலும் உரித்தே"[15]

என்றபடி மகள் களவு, கற்பில் முடிந்து மகிழத் தாய் வேண்டுகிறாள்.

## உடன்போக்கில் தாய்-மகள் உறவு

அன்னை வரைவுக்கு ஆவன செய்வாள் எனும் நம்பிக்கையற்ற மகள் தலைவனுடன் செல்கிறாள். மகள் உடன் போவதை அறிந்ததாய் தன்னையும், மகளின் காதலனையும், மகளையும் சுட்டிப் புலம்புகிறாள். சேரியும், சுரத்தும் தேடிப்போகிறாள், உடன்போக்கு அறநெறியே என்று அறிவரால் உணர்த்தப்பட்டு மனை மீள்கிறாள். மகள் மீண்டும் தன்மனைக்கு வரவிரும்பி எதிர்நோக்கி நிற்கிறாள். தலைவன், தலைவி இருவருடைய குடிப்பெருமை குன்றாது காக்கப்பட வேண்டும் என்பதில் கருத்தாக இருக்கிறாள்.

களவு, பெற்றோர் இசைவுடனோ, உடன்போக்கிலோ, வரைவில் முடிந்து கற்பாக மாறுகிறது. காலப்போக்கில் திருமணம் நடக்காது பிழை நேர்ந்தபோது 'கரணம்' எனும் சடங்கு தோன்றியது என்பதை,

> "பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
> ஐயர் யாத்தனர் கரணம் என்ப"[16]

என்னும் நூற்பா தெளிவுபடுத்துகிறது.

சிலம்பு கழி நோன்பு, தாலி கட்டுதல் பற்றிய தனிக் குறிப்புகள் தொல்காப்பியத்தில் சுட்டப்பெறவில்லை. கரணம் என்னும் சடங்கில் அவை அடங்கியிருக்கலாம்.

## குடும்ப வாழ்வில் தாயும் மகளும்

தலைவனுடன் மகள் நடத்தும் குடும்ப வாழ்வு கண்டு மகிழும் தாயை மனைமருட்சி, மனை மருண்டு உவந்து கூறுதல் என்னும் துறைகள் காட்டுகின்றன.

"கழிவினும் வரவினும் நிகழ்வினும் வழிகொள
நல்லவை யுரைத்தலும் அல்லவை கடிதலும்
செவிலிக் குரிய வாகு மென்ப"[17]

என்னும் நூற்பா தாய் மகளுக்கு மூன்று காலத்தும் நல்லன கற்பித்து அல்லன கடிந்து அறம் கூறும் இயல்புடையவள் என்பதைத் தெரிவிக்கிறது.

நற்றாயும் செவிலித்தாயும்

நற்றாயைப் போலவே செவிலித்தாயும் மகளின் நலத்தில் பெரும்பங்கு கொள்வதால்,

"ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்
தாயெனப் படுவோள் செவிலி யாகும்"[18]

எனச் சிறப்பிக்கப்படுகிறாள். களவில் மகளின் நன்மையைப் பெரிதும் நாடிக் கண்காணிப்பதிலும் உடன்போக்கில் தேடிச்சென்று வருந்துவதிலும் உற்ற தாயாகிறாள் செவிலி.

"தாய்க்கும் வரையார் உணர்வுடம் படினே"[19]

என்னும் நூற்பாவும் உணர்வால் இருவரும் ஒருவர் போலவே செயல்படுதலைக் காட்டும்.

முதுமை நிலையில் தாயும் சேயும்

தாய், இல்லறத்தில் நன் மக்களைப் பெற்றுத் தலைவனுடன் முதுமை நிலையிலும் சிறப்பான வாழ்வு வாழ்கிறாள். தான், தன் மக்கள் என்ற அன்பு விரிந்து, குடும்பம் பெருக, எல்லாச் சுற்றத்தினருடனும் அறம்புரிந்து பெருமை அடைகிறாள். இல்லறத்தின் பயனான விருந்தோம்பல் முதலிய சிறந்த அறங்கள்

செய்யும் தாய் தந்தையர் செயல்களுக்கு ஏமஞ்சான்ற மக்கள் என்றும் துணையாய் அமைகின்றனர்.

> "காமஞ் சான்ற கடைக்கோட் காலை
> ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
> அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ்
> சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"[20]

என்னும் நூற்பா நிறைவாழ்வு வாழும் தாயின் குடும்பப் பெருமையை எடுத்துரைக்கிறது.

தொல்காப்பியம் குறிப்பிடும் தாய் குடிப்பெருமையும், செல்வ வளமும் மிக்கவள்; தாய்மைப் பண்பும், தவிப்பும் உடையவள்; சமுதாயக் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டவள்; தலைமையிடத்து விளங்கும் தந்தையின் சிறப்புக்குக் குறைவராது காக்கும் பண்பு நிறைந்தவள். தாய்மையைப் பெரிதும் மதிக்கும் சமுதாயத்தில் சிலர் அதை மதியாது பரத்தையை நாடும்பொழுதும், குழந்தைக்காகச் செய்யும் இரண்டாம் மணமும், காமக்கிழத்தியர் தொடர்பும் தாய்க்கு நிறைவு அற்ற சூழலை உருவாக்குகிறது. தலைவனால் ஏற்படும் குறையை நீக்கும் வழியறியாத தாய்க்கு மக்கள் ஆறுதலாக அமைகின்றனர். தான் ஈன்ற குழந்தைகளிடத்தில் அவள் பெரிதும் அன்பையும் நம்பிக்கையும் வைத்து வளர்க்கிறாள். அவர்களும் பெற்ற தாய்க்கு உற்ற துணையாய் இருந்து குடிப்பெருமை காத்து, ஈன்ற பொழுதின் பெரிதுவக்கச் செய்தனர் என்பதைத் தொல்காப்பியம் வழி அறிய முடிகிறது.

## 1.3 தாய், சேய் பற்றிய பெயர்கள்

### தாயரில் வகைப்பாடு

சேயைப்பயந்த தாய் "நற்றாய்" எனப் பெயர் பெறுகிறாள். சேயை வளர்க்கும் தாயர் பலராவர். அவரை அபிதான சிந்தாமணி,

> "பாராட்டும்தாய், ஊட்டும்தாய், முலைத்தாய், கைத்தாய், செவிலித்தாய் அன்றியும் அரசன்தேவி, குருவின்தேவி, அண்ணன் தேவி, தன்தேவியை ஈன்றாள், தன்னை ஈன்றாள்"[21]

என்ற பத்துப் பெயர்களால் குறிப்பிடுகிறது.

நா. கதிரைவேற் பிள்ளையின் தமிழ்மொழி அகராதியில் 'தாய்' என்னும் பெயருக்கு,

> "அண்ணன் தேவி, அரசன்தேவி, ஊட்டுந்தாய் குருவின்தேவி, கைத்தாய், செவிலித்தாய், தன்தேவியை ஈன்றாள், நற்றாய், பாராட்டும்தாய், மாதாவின் சகோதரி"[22]

என்னும் பொருளுடைய சொற்கள் இடம் பெறுகின்றன.

> "தாயர் ஐவகைய ரென்பர் பெரியர். ஐவரும் முலைத்தாய், ஊட்டுந்தாய், கைத்தாய், பாராட்டும்தாய் செவிலித்தாய் ஆகிய இவரேயாம். வேறுவகையாலும் ஐந்தாயர் கூறுவதுண்டு. அன்னார் தன்னை ஈன்றாள், தன்தேவியை ஈன்றாள். அண்ணன் தேவி, குருவின்தேவி, அரசன்தேவி ஆவர்."[23]

என்பர் பூர்ணலிங்கம் பிள்ளை.

தொல்காப்பியர் நற்றாயையும் செவிலித்தாயையும் குறிப்பிடுவர். இளம்பூரணர் ஏமப்பேரூர்ச் சேரியும் சுரத்தும் தேடிச்செல்லும் தாயராகக் 'கைத்தாயர்' என்பவரைக் குறிப்பிடுகிறார்.[24]

சங்க இலக்கியத்தில் தாய், சேய் பற்றிக் குறிப்பிடப் பல பெயர்கள் உள்ளன. தற்காலத்தில் இலக்கிய வழக்கிலும் பேச்சுவழக்கிலும் பெரிதும் வழங்கப்பெறும் 'அம்மா' என்பதும், 'குழந்தை' என்பதும் சங்க இலக்கியத்தில் வழங்கப்பெறவில்லை. 'அன்னை', 'குழவி', 'மகவு' என்பனவே பெரு-வழக்கினதாக வழங்கப்பட்டுள்ளன.

தாய் - வழங்கிவரும் பெயர்கள்

அன்னை, ஆய், ஞாய், யாய், தாய், ஈன்றாள், ஈன்றவள், ஈன்றோள், ஈன்பிணவு, பயந்தோள் என்பன தாயைக் குறிக்கும் பெயர்களாக இருந்துள்ளன.[25]

செவிலித்தாய், ஈனாத்தாய், காவற்பெண்டு என்ற பெயர்கள் வளர்ப்புத் தாயைக் குறித்தன. அன்னையின் திரிபாக 'அஞ்ஞை' வழங்கப்பட்டது.[26]

தாயைக்குறித்து வரும் 'அம்மா' என்னும் பிற்காலச்சொல் முதலில் 'அம்ம' என்பதன் அசைச்சொல் நீட்டமாகவும், விளிப்பெயராகவும் பிறகு முறைப்பெயர் ஆகவும் மாறியிருக்கலாம் என்பதை,

> "அம்ம என்னும் அசைச்சொல் நீட்டம்
> அம்முறைப் பெயரொடு சிவணா தாயினும்
> விளியொடு கொள்ப தெளியு மோரே"[27]

என்னும் தொல்காப்பிய நூற்பாவால் அறியலாம்.

குழந்தை பெற்றவள் ஈன்றாள் எனப்படுதல் போலப் பெறாதவள் ஈனாள் எனப்பட்டாள்;[28] பெற்றவள், பெற்றவன் என்பதும் பிற்கால வழக்கே. திருமணத்தில் மனைவியைப் பெறும் கணவனே 'பெற்றோன்' என அகநானூறு,

> "பெற்றோன் பெட்கும் பிணையை ஆக"[29]

என்ற வரியில் குறிப்பிடுகிறது.

ஆய் என்பது தாய்த்தன்மை கொண்ட அரசனுக்கும் வழங்கியிருந்தமையை ஆய் அண்டிரன், ஆய் எயினன் போன்ற பெயர்களால் அறியலாம். இச்சொல் பிற்காலத்தில் ஆயா, ஆயாள், ஆயி, ஆய்ச்சி, ஆச்சி, ஆச்சாள், ஆத்தாள் என பலவாறு பிரிந்திருக்கலாம்.[30]

ஐயை என்னும் சங்ககாலக் கொற்றவை தெய்வத்தின் பெயர், அகநானூற்றில் மகளையும்,[31] பிங்கலந்தை நிகண்டில் சிவை, காளி, மகள், தலைவி, ஆசான் மனைவி ஆகியோரையும் குறிப்பிடுவதாக அமைகிறது. இப்பெயர் சங்ககாலத்தில் தாயைக் குறிப்பிடவில்லை எனினும் ஐயன் என்று தந்தையைக் குறிப்பிட்டு வந்துள்ளது. மகடூஉ என்னும்சொல் சில இடங்களில் மகவைப் பெற்ற தாயைக் குறித்து வழங்குகிறது.[32] குடிக்கு விளக்காகும் மகவைப் பெற்ற தாய் 'நன்னராட்டி'.[33] என்றும் பாராட்டப் பெறுகின்றாள்.

தற்காலப் பெயர்களில் தாய், 'அம்மா' என்ற பெயரில் முதன்மையாக அழைக்கப் பெறுகிறாள். அன்னை, அம்மை, அவ்வை, அம்மாள், அம்மாய், அம்மாச்சி, அம்மன், என்பனவும் வட்டார மொழிகளில் ஆய், ஆயி, ஈன்றாள், சனனி, தல்லி, தௌவை, மாதா[34] என்பனவும் பிள்ளையைத் தாங்கி நிற்பதால் 'பிள்ளைத்தாய்ச்சி' என்ற பெயரும் தாயைக் குறிக்கும் பிற பெயர்களாம்.

பொதுவாகத் தாய்க்கு வழங்கும் பெயர்கள் சங்க இலக்கியத்திலும் தற்காலத்திலும் அதிகவேற்றுமையின்றி ஒன்றுபடவே விளங்குகின்றன எனலாம். சங்கப் பாடல்களில் பெரிதும் சிறப்புப் பெற்ற தாயர் நற்றாயும், செவிலித்தாயுமே. இருவரும் தாம் ஈன்று, வளர்த்த மக்களை நேசிப்பதில் இணையானவர் என்பதால் வேற்றுமை சுட்டாது இருவரையும் ஒன்று போலவே சங்கப்பாடல்கள் குறிப்பிடுகின்றன.

சேய் – ஆண் குழந்தைப் பெயர்கள்

சேயைக் குறிக்கும் பெயர்களில் இளங்குழந்தையைக் குறிக்கக் 'குழவி', 'மகவு' என்னும் பெயர்கள் இருந்தன. இருபாற் குழவிகளையும் குழவி, மக, மகவு, மகார், மக்கள், குறுமக்கள் என்றழைத்திருக்கின்றனர்.

ஆண் குழந்தைப் பெயர்களில் 'புதல்வன்' முதலிடம் பெறுகிறது. ஒருமைப் பெயராகக் காதலன், சிறுவன், செல்வன், சேய், புதல்வன்,

பெயரன், மகன், மைந்தன் என்பனவும், பன்மைப் பெயராக இளைஞர், இளையர், இளையோர், குறுமக்கள், சிறார், சிறியர், சிறுவர், சிறுகுறுமாக்கள், செல்வர், புதல்வர், மக்கள், மைந்தர் என்பனவும் அமைந்துள்ளன.[35]

சங்க இலக்கியத்தில் மிக அருகி வழங்கப்பட்ட குழந்தைப் பெயர் 'சேய்' ஆகும். பொதுவாகச் சேய் என்பதற்கு,

"இளமை, குமரன், குழந்தை, செம்மை, செவ்வாய்,
தூரம், தொலை, நீளம், பிள்ளை, மகன், மனை,
முருகன், மூங்கில்"[36]

என்னும் பொருள்கள் உள்ளனவாக அகராதி விளம்புகிறது. சங்ககாலத்தில் 'சேய்' என்பது முருகனுக்கே உரிய சிறப்புப் பெயராக விளங்கியபோது,

"நன்னன் சேய் நன்னன்"[37]

"பேயனையம் யாம் சேய்பயந் தனமே"[38]

"ஞாயிற்றோர் நிறத்தகை நளினத்துப் பிறவிய
காஅய் கடவுள் சேஎய் செவ்வேள்"[39]

என்ற மூன்று இடங்களில் மட்டும் 'சேய்', குழந்தையைக் குறித்து வழங்கிய பெயராக அமைகிறது.

'பெயரன்' என்ற சொல்லும், அது போன்றே,

"எந்தை பெயரன்" எனக் கலித்தொகையிலும்

"சிறந்தோன் பெயரன்" என நற்றிணையிலும்

"தந்தை பெயரன்" என ஐங்குறுநூற்றிலும்

ஆக மூவிடங்களில் மட்டும் இடம் பெறுவது குறிப்பிடத்தக்கது.[40]

## ஆண் – பிற பெயர்கள்

ஆண் மக்கள் வளர்ந்த நிலையில் அண்ணல், ஆடவன், உம்பல், ஐயன், காளை, குமரன், குருசில், செம்மல், தோன்றல், தலைவன், நெடுந்தகை, பெருந்தகை, பெருமகன், பெருவிறல், மகன் (மனிதன்), மள்ளன், மறவன், மீளி, முன்பன், விடலை, விறலவன் என்றழைக்கப்பட்டுள்ளனர்.

நிலத்தைச் சார்ந்து ஊரன், கானவன், கிழவோன், சிலம்பன், சேர்ப்பன், துறைவன், நாடன், பரப்பன், புலம்பன், மகிழ்நன், வெற்பன் என்ற பெயர்களும் இருந்தன. மணமான தலைமகன்,

கணவன், காதலன், கொண்கன், கொழுநன்,
கேள்வன், துணைவன், பெற்றோன்

என்னும் பெயர்களால் குறிப்பிடப்பட்டுள்ளான்.

பெயர்சுட்டும் அளவிற்குத் தகுதியான செயல் செய்யாதபோது, அவன் என்றும், அறனிலாளன், ஏதிலன், ஏதிலாளன், சிறியோன், சிறுபட்டி, நொதுமலாளன், வன்கணாளன் எனவும் பெயர் சூட்டப்பட்டிருக்கிறான்.

தந்தையான நிலையில் அத்தன், எந்தை, என்னை, ஐயன், சிறந்தார், தந்தார், தந்தை, தாதை, நுந்தை, நம்முன், பெற்றார் என்னும் பெயர்கள் ஆடவனுக்கு வழங்கப்பட்டிருக்கின்றன. உடன்பிறப்பைக் குறிக்கும் வகையில் ஐயன், எம்முன், என்ஐயர், தம்பி, தன்னையர் என்ற பெயர்களும் இருந்துள்ளன. அண்ணன் என்ற பெயர் இல்லை.

தலைவன் அரசனாக இருப்பின், அரசன், இறை, காவலன், கொற்றவன், கோ, பொறையன், மன்னன், வேந்தன் என்பன அவன் பெயராக விளங்குகின்றன. ஆயர், இடையர், உமணர், உழவர், கானவர், குறவர், கோவலர், பரதவர், பொருநர், மக்கள், மழவர், மள்ளர், மறவர், மாக்கள், மாந்தர், வயவர்,

வேட்டுவர் எனப் பொதுவாக அழைக்கப்பெற்ற ஆண் மக்கள் வயதான நிலையில் கிழவர், முதியர், முன்னோர், முதாளர் எனப் பெயர் பெற்றனர்.[41]

தற்காலத்தில் ஆண் குழந்தைப் பெயராக, இளவல், இளைஞன், எச்சம், காதலன், குட்டன், குமரன், குமாரன், சந்ததி, சிறுவன், சுதன், செம்மல், செல்வன், தனயன், தோன்றல், நந்தனன், பாலன், புதல்வன், புத்திரன், பிள்ளை, பையன், மகன், மதலை, மருகன், மைந்தன், வழித்தோன்றல், வாரிசு, வாலிபன் என்பன வழங்கப்படுகின்றன.[42]

<u>சேய் - பெண் குழந்தைப் பெயர்கள்</u>

சங்க இலக்கியத்தில் பெண் குழந்தைப் பெயராக 'மகள்' என்பதே அதிகம் பயின்றுள்ளது. 'பெண்' என்பது,

"ஈன்றாட் கொருபெண் இவள்"[43]

என்னும் பரிபாடலில் மட்டுமே 'மகள்' என்னும் பொருளில் வழங்கியுள்ளது. பெண், பெண்டு, என்னும் பெயர்கள் பெண் தன்மை, இளம்பெண், ஒருவனின் மனைவி என்பதைக் குறிக்கும் பொதுப் பெயர்களாய் நிற்கின்றன. புதல்வனுக்கு இணையான 'புதல்வி' என்ற பெயர் இல்லை. அதுபோல் செல்வியும் அரசன் மனைவிக்கும், காடுகெழு செல்வியான உமைக்கும் உரிய பெயராய்மட்டும் அமைகிறது.

வளர்ந்து மணப்பருவம் எய்திய இளம்பெண்கள் அரிவை, இளையோள், கன்னி, காதலி, குமரி, குறுமகள், சிறுமி, தையல், பாவை, பெதும்பை, பேதை, மடந்தை, மடமகள், மடவரல், மாதர் என்றழைக்கப்பட்டனர்.

<u>பெண் - பிற பெயர்கள்</u>

மணமான பெண்கள் அரிவை, ஆன்றோள், காதலி, காரிகை, குறுமகள், தலைவி, துணை, துணைவி, தெரிவை, தையல், நங்கை, நாரிகை, மகடூஉ,

மங்கை, மடந்தை, மடவோள், மனையோள், மனைவி, மாதராள் என்ற பெயருக்குரியராயினர்.

பொதுவாகப் பெண்கள் இளையர், இளையோர், நல்லார், பாவையர், பெண்டிர், மகளிர், மடநல்லார், மங்கையர், மாதர், மாதரார் என்னும் பெயர்களை உடையவராயினர்.

மகள் என்னும் பெயர் ஒருவரைச் சுட்டி வரும்போது என்மகள், நும்மகள், குறவன்மகள், கானவன்மகள், நாடன்மகள், பரதவர் மகள் என உறவு குறித்தும், அகவன்மகள், ஆடுமகள், ஆய்மகள், கிணைமகள், கோமகள், பொய்தலமகள், வெறியாடுமகள், என நிலம், தன்மை, தொழில் சார்ந்தும் வழங்கப்பட்டுள்ளது. இதுபோன்றே மகளிர் என்ற பெயரும்,

அரமகளிர், ஏவல்மகளிர், ஒரைமகளிர், கழிகலமகளிர், கலந்தொடா மகளிர், குமரிமகளிர், கைம்மைமகளிர், கொண்டிமகளிர், சூரரமகளிர், சூள் மகளிர், பாடல்மகளிர், பார்ப்பனமகளிர், பாரிமகளிர், மங்கலமகளிர், வதுவைமகளிர், வானரமகளிர், விறலியர், எனப் பலவாறு சார்ந்து வழங்கப்பட்டிருக்கின்றது. தங்கை, நுவ்வை என்ற உடன் பிறப்புப் பெயரும், இகுளை, தோழி என்ற பெயர்களும் இடம்பெறும் சங்க இலக்கியத்தில் பெயர் சுட்டா நிலையில் அயலிலாட்டி, து விலாட்டி, நொதுமலாட்டி எனவும் பெண்கள் குறிக்கப்பட்டிருந்தனர். வயதுசென்ற நிலையில் கிழவி, செம்முதுபெண்டு, பாட்டி, பேரிளம் பெண்டிர், முதியோள், முதுபெண்டிர், முதிற்பெண்டிர், முதிர்மகளிர் என்ற பெயர்கள் அவருக்குரியவாயின.[44]

தற்காலத்தில் வழங்கும் பெண்குழந்தைப் பெயர்கள் ஐயை, கன்னி, காதலி, சிறுமி, செல்வி, சுதை, தனயை, பந்தனை, புதல்வி, புத்திரி, பிள்ளை, பெண், மகள் என்பனவாம்.[45] பெண் குழந்தையைத் 'தாயி' என்றழைக்கும் தென்மாவட்ட வழக்கு, 'தாய்' ஆகும் பெண்ணைச் சிறப்பித்து

அழைப்பதாகும். கொங்கு வழக்காக வழங்கும் 'அம்மணி' என்ற பெயரும் அம்மனை, அம்மை என்பதன் திரிபாக இருக்கலாம்.

மருத்துவ இயல், உளவியல், மானிடவியல் பெயர்கள்

தற்கால மருத்துவ இயலார் தாய், சேய் பற்றிய பெயரைக் குறிப்பிடும்போது, அன்னை, தாய் என்றும்,

1. பிறந்த குழவி (பிறந்து இரண்டு வாரம்-New Born)
2. இளங்குழவி (இரண்டு வாரம் முதல் ஓராண்டு வரை- Infancy)
3. குழந்தை (14 ஆண்டுகள் வரை-Child)
4. குமரன் (14 ஆண்டு முதல் 25, 30 ஆண்டு வரை- Adolescent)

இதற்கு மேல் முதிர்ந்தோர் ( Matured ) வயதுவந்தோர் ( Adult ), வயதான மனிதர் ( Old aged ) என்றும் குறிப்பிடுவதால் 30 வயது வரை குழந்தை நிலையை ஏற்கின்றனர்.[46]

உளவியலறிஞரான டாக்டர் தா. ஏ. சண்முகம் மனித வாழ்க்கையின் பல பருவங்களை,

1. தாயின் வயிற்றில் வளர்ச்சி பெறும் காலம் ( Prenatal stage)
2. பிறவிக் குழவிப் பருவம் ( Post Natal )
3. குழவிப் பருவம் ( Infancy )
4. குழந்தைப் பருவம் ( Childhood )
5. குமரப் பருவம் ( Adolescence )
6. முதிர்ச்சிப் பருவம் ( Adulthood )

7. முதுமைப் பருவம் ( Old Age )

எனப் பிரிக்கப்பட்டிருப்பதாகக் கருதுகிறார்.[47] மானிட இயலார் சிசு ( Infant ), குழந்தை ( Child ), மகன் ( Son), மகள்(Daughter) என்றும், தாய், அன்னை என்றும் குறிப்பிடுகின்றனர்.[48]

பிள்ளை - ஒரு குறிப்பு

தற்காலத்தில் குழந்தைக்கு வழங்கும் பிள்ளை என்ற பெயர் அஃறிணை உயிர்க்கு உரியது என்று எடுத்துக்காட்டும் பொழுது உயர்திணை மக்களுக்கும் ஆண் பிள்ளை, பெண் பிள்ளை எனவரும் என்றார் தொல்காப்பியர். ஆயின் சங்க இலக்கியத்தில் பிள்ளை எனும் பெயர் குழந்தையைக் குறித்து வரவில்லை. சிறந்த வீரத்தைக் களத்தில் நிறுவும் வீரனின் செயல்களைப் பிள்ளையாட்டு, பிள்ளைநிலை எனப் போற்றும் இடத்தில் மட்டுமே அப்பெயர் உயர்திணையில் வருகிறது.[49]

அஃறிணைப் பெயர்கள்

அஃறிணை உயிர்களிலும் தாய், சேய் குறித்த கருத்துக்கள் குறிப்பிடப் படுகின்றன. தாய், யாய் எனக் குறிக்கப்பெறும் அஃறிணை உயிர்களின் குழந்தைப் பெயராகத் தொல்காப்பியர் குறிப்பிடும் அனைத்துப் பெயர்களும் சங்க இலக்கியத்தில் கன்று, குட்டி, குருளை, குழவி, பறழ், பார்ப்பு, பிள்ளை, போத்து, மகவு, மறி என இடம் பெறுகின்றன.[50]

***

## அடிக்குறிப்புகள்

1. நா. செயராமன், சங்கத்தமிழ்ச் செய்யுள்கோவை, ப. 10.
2. ச. சாம்பசிவனார், மலர்களிலே சில இதழ்கள், 'தொல்காப்பியமும், காமத்துப்பாலும்', ப. 2.
3. சி. பாலசுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.31.
4. ம. ரா.போ. குருசாமி, சங்ககாலம், ப. 66.
5. தொல். பொருள். (நச்சி) நூற்பா, 98, ப. 11.
6. மே.ப. நூற்பா, 187, ப. 270.
7. மே.ப. நூற்பா. 150:12; 151:9; 172:3; 174:2; பக். 218, 233, 260, 262.
8. மே.ப.நூற்பா. 146:27-30; ப. 169.
9. மே.ப.நூற்பா. 172:1-2; ப. 260.
10. மே.ப. நூற்பா. 173:1-2; ப. 261.
11. மே.ப. நூற்பா. 160; ப. 250; 174; ப. 262.
12. மே.ப. நூற்பா. 79:32-33; ப. 237.
13. மே.ப. நூற்பா. 207; ப. 293.
14. மே.ப. நூற்பா. 115:7; ப. 136.
15. மே.ப.நூற்பா., 117; ப. 145.
16. மே.ப. நூற்பா. 145;ப. 166.
17. மே.ப. நூற்பா. 153; ப. 243.

18. தொல். பொருள். நூற்பா. 124; ப. 150.

19. மே.ப. நூற்பா. 116; ப. 145.

20. மே.ப. நூற்பா. 192; ப. 275.

21. ஆ. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப. 805.

22. நா. கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப.492.

23. எம்.எஸ். பூரணலிங்கம் பிள்ளை, 'தாய்' செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு-4, ப. 300.

24. தொல். பொருள். இளம்பூரணர் உரை-நூற்பா.40; பக்.38-39.

25. பின்னிணைப்பு.

26. அகநானூறு, 145:22; குறுந்தொகை 15:8.

27. தொல். சொல். விளி. 36.

28. புறநானூறு,348:7.

29. அகநானூறு, 86:16.

30. ப. அருளி, 'பெற்றோரைப்பற்றி', பக். 69-73.

31. அகநானூறு, 6:3-4.

32. சிறுபாண். 192; பெரும்பாண்.58, 304.

33. அகநானூறு, 184.

34. நா. கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப. 110.

35. பின்னிணைப்பு.

36. கழகத்தமிழ் அகராதி, ப. 491.

37. மலைபடுகடாம், வரி. 64.

38. ஐங்குறுநூறு, 70.

39. பரிபாடல், 5 : 12-13.

40. கலித். 81:35; நற். 40:12; ஐங்குறு. 403:3.

41. பின்னிணைப்பு.

42. நா. கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப. 139.

43. பரிபாடல், 8:58.

44. பின்னிணைப்பு.

45. நா. கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப. 139.

46. Helie - Wood - Comstock. All about the Baby, p. 24.

47. தா. ஏ. சண்முகம், உளவியல் உண்மைகளும் குழந்தைக் கல்வியும், கஸ்தூரிபா நிகேதன் ஆண்டு மலர், ப. 87.

48. சு. சக்திவேல், மானிடவியல் கலைச்சொல் அகராதி, பக். 26, 36, 39, 47.

49. தொல். மரபியல். 23; புறத்திணையியல், 5:15-18.

50. தொல். மரபியல், 1:41; கழகம், பக். 433, 453.

***

2. சேய்-சிறப்புச் செய்திகள்

2.1 குழவிப்பருவம்

2.2 இளமைப்பருவம்

2.3 விளையாட்டும் தொழிலும்

***

## 2.1 குழவிப்பருவம்

குழந்தைப்பேறு புனிதமானது; பெருமைக்குரியது.

"மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு"[1]

என்றபடி பெற்றோரைப் பேரின்பத்திற்குரியராக்குவது குழந்தை. இம்மையில் புகழும், மறுமையில் வீடுபேறும் அடையச் செய்வது மக்கட்பேறு என்ற கருத்து சங்ககாலத்தில் மிக உறுதியாக விளங்கியது. பிற்காலப் பிள்ளைத்தமிழுக்கு அடிப்படையாய் அமைந்த பாடல்கள் அன்னைப் பாசத்தின் அருமையையும், பிள்ளையின் பெருமையையும் உணர்த்துகின்றன.

### கருவுலக வாழ்வு

குழவிப்பருவம் என்பது கரு என்னும் அரும்பு மலர்ந்த நிலையில் தொடங்குகிறது என்றும் குழவிப்பருவத்திற்கு முந்தைய கருவுலக வாழ்க்கையும் ஆய்வுக்குட்பட்டது என்பதும் உளவியலார் கருத்து.[2] பிறந்தபின் தொடங்கப் போகும் வாழ்வுக்கு முன்னேற்பாடாகச் சூலின் இயக்கங்கள் அமைகின்றன. தாயின் வயிற்றில் இருக்கும்போதே தனித்திறன் பெற்றவராகப் பிரகலாதன், அபிமன்யு போன்ற புராண நாயகர்கள் குறிக்கப் பெறுகின்றனர். சங்க இலக்கியம் கரிகாலனை அவ்வாறு போற்றுகிறது. மிகச் சிறந்த அறிஞர்களைக் கருவில் திருவுடையார் என்பது தமிழ் வழக்கு.

"முருகற் சீற்றத் துருகெழு குருசில்
தாய்வயிற் றிருந்து தாய மெய்தி"  ( 131-32 )

என்பது பொருநராற்றுப்படை.

களவுப்புணர்ச்சி

அனைவரும் போற்றும் மக்கட்பேறு திருமணத்தால் இணைந்த தலைமக்கட்கு ஏற்படுவதே இயல்பு. சங்ககாலத்தில் களவு வாழ்வு இருந்ததால் உள்ளப்-புணர்ச்சியோடு மெய்யுறு புணர்ச்சியும் இருந்திருக்கலாம் என்பது அறிஞர் கருத்து.

தலைமைசான்ற தலைமக்களுக்கிடையே அன்புடை நெஞ்சம் கலந்திருக்குமே அன்றி மகப்பேறு காரணமான மெய்யுறுபுணர்ச்சி ஏற்பட்டிருக்காது என்னும் ஔவை. சு. துரைசாமிப்பிள்ளையின்[3] கருத்தை மறுக்கிறார் வ.சுப.மாணிக்கம்.

> "களவுக் காலத்து மெய்யின்பம் துய்த்தமை பற்றிய
> அகப்பாடல்கள் பல உள. மெய்யுறும் செய்கை
> இன்றாயின் இரவுக்குறி முதலான எத்துணையோ
> துறைகள் சிறந்த பயனிலவாய் ஒழியும்"[4]

என்பது அவர் கூற்று.

தலைவியும் தோழியும் களவைத் தாயிடம் வெளிப்படுத்த அஞ்சுவதும், அயலார் வரைவு நேரின் உயிர் துறக்கத் துணிவதும், களவுத்தலைவன் மணம் பேசிவரத் தமர்மறுக்கும்போது கற்புக்கடம் பூண்ட தன்மையைக் கூறி அறத்தொடு நிற்பதும், மறை வெளிப்படுவதற்கு முன்னரே மணம் நடந்துவிட வேண்டும் எனத் தலைவனை வரைவு முடுக்குவதும் மெய்யுறுபுணர்ச்சி உண்டு என்பதன் சான்றுகளாம்.

> "களவினுள் தவிர்ச்சி வரைவின் ஈட்டம்
> திங்கள் இரண்டின் அகமென மொழிப"[5]

என்று களவிற்கு இரண்டு திங்கள் என இறையனார் அகப்பொருள் ஆசிரியர் வரையறுப்பதும் மகப்பேறு குறித்த அச்சத்தால் என உய்த்துணரலாம்.

தலைவன், தலைவியைப் பிரியாதிருக்கச் சூள் உரைத்திருப்பினும், பொய்த்து விடுவானோ என்ற அச்சம் பெண்ணுக்கு நிகழ்வது இயல்பு.

"யாருமில்லைத் தானே கள்வன்
தானது பொய்ப்பின் யானெவன் செய்கோ"[6]

என்ற குறுந்தொகைத் தலைவிபோலப் பிற தலைவியரும் அஞ்சினர். இன்பத்திற்கேதுவான மகவு களவில் வெளிப்பட நாணிய பெண்கள் மகப்பெறுவதற்காகவேனும் விரைந்து மணம் செய்யத் தலைவனை வேண்டினர்.

"சிறுநனி வரைந்தனை கொண்மோ"[7]

"நயவா யாயினும் வரைந்தனை சென்மோ
கன்முகை வேங்கை மலரு
நன்மலை நாடன் பெண்டெனப் படுத்தே"[8]

என்னும் ஐங்குறுநூற்றுத் தோழியின் வேண்டுகோள், வதுவைக்குப் பின்னர் மகப்பேறு அடைவதையே விரும்பினர் என்பதைக் காட்டும். எனினும் களவில் ஏமாற்றிப் பிரிந்த தலைவனைக் குறித்தோ, மகப்பேறு காரணமாகத் தன்னை மாய்த்துக்கொண்ட தலைவி குறித்தோ சங்க நூல்களில் சான்றுகளே இல்லை.

## மகப்பேற்றுக் காலம்

கற்புக்காலத்தில் தலைவி மகப்பேற்றை அடையும் காலமான பூப்புக் காலத்தில் தலைவன் தலைவியைப் பிரியாது உறைதல் வேண்டும். ஒரோவழி பரத்தையிற் பிரிந்து தலைவன் வாராதொழியின், தோழி செவ்வணி அணிந்து சென்று தலைவனுக்கு உணர்த்துவாள். மகப்பெறுதலாகிய உலகியல் குறித்துத் தலைவனும் தன் இல்லம் திரும்புவான்.[9]

## கடுஞ்சூல் மகளிர்

முதல் குழந்தையைக் கருவில் தாங்கும்தாய் பலமாறுபட்ட உணர்வுகளை அடைகிறாள். முதல்சூல் தாய்க்கு மிக வேதனை தருமாதலின்

அதனைக் 'கடுஞ்சூல்' எனக் குறிப்பிடுகின்றனர். கருவுற்ற மகளிர்க்குக் கணவன் அருகிருக்க வேண்டும் என்னும் விருப்பம் தோன்றுகிறது. தன்னை நயந்துறையும் மனைவியின் நலன் கருதி, பொருள்வயிற் பிரியக் கருதும் தலைவன் செலவு தவிர்க்கிறான். செல்லும் தலைவனும் சூல் கொண்ட யானையை வழியில் கண்டு, தன் மனை திரும்புகிறான்.[10]

வயாநோயில் புதுச்சுவை விரும்பும் மகளிர் பசும்புளி, மண்ணை விரும்பி உண்கின்றனர்;[11] தாம் விரும்புவனவற்றைத் தலைவன் தரவேண்டும் என்று அவாவுற்று அவன் மார்பை நினைந்து மகிழ்கின்றனர்.[12] இப்படிப்பட்ட வேட்கைநோய் கருவுற்ற மகளிரின் உண்மை அழகை அழிக்கும் என்ற நம்பிக்கையும் இருந்தது.[13] அதனால் சேய் நன்கு பிறக்க வேண்டிக் கடவுளைத் துதித்துப் பலி உண்டனர்.[14] பால்கட்டிய பெருத்த மார்புடனும், மென்மையான மயிர் ஒழுங்குடைய இளஞ்சூல் வயிற்றுடனும் காட்சி அளித்திடும் மங்கையர்,[15] யானை, அரவு, தீ போன்றவற்றைக் கண்டு அஞ்சுவர். ஆயின் மறக்குடிப் பெண் சூல்கொண்ட நிலையிலும்,

"யானை தாக்கினும் அரவுமேற் செலினும்
நீனிற விசும்பின் வல்லேறு சிலைப்பினும்
சூன்மகள் மாறா மறம்பூண் வாழ்க்கை"[16]

உடையவள் என்கிறது பெரும்பாணாற்றுப்படை.

மகவீனல்

குழந்தையைப் பெறுதல் பெண்ணுக்கு இரண்டாம் பிறப்பைப் போன்றது என்பர். மிகுந்த நோக்காட்டைத் தரும் குழந்தைப் பிறப்பு தலைவன் வீட்டிலேயே நடக்கிறது. மனைவி மகவீனுதற்காகக் கணவன் கட்டில் பிணித்துத் தருகிறான்.[17] மகப்பெற்றதும் மகளிர் விரிச்சி நிற்கின்றனர்.[18]

மகன் பிறந்ததும் தந்தை வந்து நோக்க வேண்டும் என்ற மரபு கடைப்பிடிக்க அதியமான் வந்தது போலப் பிற தந்தையரும் இருந்திருக்கின்றனர்.[19] மகள் செல்வனைப் பெற்ற செய்தி அறிந்ததும் தாய், தன் பெயரனைப் பார்க்கத் தோழியுடன் அவள் வீடு செல்கிறாள் என்று ஐங்குறுநூறு காட்டுகிறது.[20] தாயை மனைவிளக்கு ஆக்கும் குழந்தை, தாயுடன் மான்தோல் படுக்கையில் படுத்துள்ளது. தாய் தந்தை நடுவில் துயில்கிறது; தாயும் தந்தையும் மாறிமாறித் தழுவிக்கொள்ள, இனிய இசை போலப் பொலிவு ஏற்படுத்துகிறது.[21]

சேய்பயந்த தாய்

குழந்தை, தாயிடம் முலைப்பால் உண்கிறது. பாலூட்டுவதால் தாயின் மேனி திதலையணிந்து தீம்பால் மணம் கமழ்கிறது. ஐயவி அரைத்துப் பூசிக் கொள்ளும் இளந்தாயர் வளையல் அணியாதிருக்கின்றனர். புதல்வர் பெற்ற புனிறு நாற்றம் தீரவும், பால்பெருகவும் குளத்தில் நீராடினர்.[22]

பாலுண்ணல்

இளங்குழந்தை முலையருந்த தாய் கைப்பிடித்துக் கற்றுத்தர, மகிழ்வுடன் பாலருந்துகிறது. குழந்தை பால் அருந்த அருந்தத் தாய்க்கு முலை இலிற்றும்,[23] தாய் முழுமகிழ்ச்சி அடைய, தாய்முலை தழுவிய மகவைத், தந்தை முதுகுப் பக்கமாக வந்து அணைத்துக் கொள்கிறான்.[24] பாலுண்ணல் குழந்தையின் இன்றியமையாத் தேவையாய் இருப்பதால், தாய் இறப்பின் தந்தை ஊட்டும் தாயை அழைத்து வருவான்.[25] தந்தை கடலாடச்செல்ல, அவன் பிரிவு கண்டழும் மகவு, தாய் முலைப்பாலில் அமைதி அடையும்.[26] வறுமை காரணமாகப் பால் வற்றி, முலை சுருங்கினால் பால் சுவைத்தலைப் புதல்வன் மறப்பான். தாயற்ற குழந்தை பயந்து அலறும்; பாலூட்டும் தாய், மக்கள் நன்மை கருதும் அரசனுக்கு உவமையாகிறாள்.[27]

குழந்தைப் பிறப்பின்பின் தந்தையர்

கடவுளருளால் பெற்ற மகவுடன் தாய், தந்தையர் கோயில் சென்று கடவுளை வணங்குவர். தாயர் குழந்தை பிரியாதிருக்கும் பொருட்டு கைப்பிடியாகப் பிடித்துள்ளனர்.[28] வினைமேற் செல்லும் தந்தை மகனை நினைந்து வினை முடித்து வேகமாக வர, புதல்வன் மகிழ்வான்.[29]

குழந்தை பிறப்பு, தந்தை பரத்தையை நாடக் காரணமாகிறது. பொன்போன்ற தன் புதல்வனையும் நீத்து, தீம்பால் நாற்றம் கமழும் மனைவியைப் பிரிந்து தூயர், நறியரான பரத்தையைத் தலைவன் நாடல், தாய்க்குத் துன்பம் தருகிறது; அவனைச் சினக்கிறாள்.[30]

துனிதீர் கொள்கைப் புதல்வன், தாயும் தந்தையும் சேர வாயிலாய் அமைகிறான். தலைவன் சூளும், தன் செம்மலான மகனுக்கு வரக்கூடாது எனத்தாய் அறிவுறுத்தும் பொழுது, எதிர்வரும் தந்தைமார்பில் பாயும் மகனால் தாயும் சினம் தணிகிறாள்.[31]

தந்தையும் சேயும்

தந்தைமார்பில் ஏறி விளையாடுதல் குழந்தைக்கு மிகவும் உவப்பு. தந்தைக்கும் மகனின் மெய்தீண்டுதல் பேரின்பம்.

> "மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
> சொற்கேட்டல் இன்பம் செவிக்கு"[32]
> "குழலினிது யாழினிது என்பதம் மக்கள்
> மழலைச் சொற்கேளா தவர்"[33]

என்பன வள்ளுவர் வாக்கு. தந்தை மார்பில் ஏறி இறங்கலும், அவர் மார்பில்

சந்தனம் சிதைத்தலும், மாலை பறித்தலும் புதல்வனின் உரிமை.[34] தளர்நடையிட்டு வரும் குழந்தையின் குறும்புச் செயல்களைப் புறநானூறு,

"படைப்புப் பல படைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை யடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே"[35]

என வடித்துக் காட்டுகிறது.

செல்வத்தாயர் அம்புலி காட்ட குழந்தை உணவுண்டது. உணவு வழங்க முடியாத வறுமையில் அம்புலியும், புலியும் குழந்தையின் கவனத்தைத் திசை திருப்பப் பயன்பட்டன.[36] குழந்தைகள் பால்குடிக்க மறுப்பதும், அன்னையர் சிறுகோல் கொண்டு அலைப்பதும் உண்டு.[37]

குழந்தையின் அழகும் ஆடல்களும்

தாய் குழந்தைக்கு உச்சிமுதல் உள்ளங்கால் வரை அணிபூட்டி ஆலமர் செல்வன் பெருவிறல் போல மகன் இருத்தலைக் கண்டு மகிழ்கிறாள். தலையில் பிறை, சுட்டி, முத்துவடம், மார்பில் பைம்பூண், குரும்பை மணிப்பூண், ஐம்படைத்தாலி, புலிப்பல்தாலி, பொற்றாலி, நவமணிமாலை, கையில் பொற்றொடி, மோதிரம், காலில் சதங்கை, கிண்கிணி போன்ற அணிகள் குழந்தையைப் பொன்போல் ஆக்குகிறது.[38]

"கிளர்மணி ஆர்ப்ப ஆர்ப்பச் சாஅய்ச் சாஅய்ச் செல்லும் தளர்நடை காண்டல் இனிது; அத்தா அத்தா என்னும் தேமொழி கேட்டல் இனிது"[39] எனக்

கலித்தொகைத் தாய் உவக்கும் வண்ணம் குழந்தை மழலை பேசுகிறது. பொருந்தாத மழலைச் சொற்களை மழகுழக்கு என்னும் சொல்லால் கலித்தொகை எடுத்துக்காட்டுகிறது.[40]

"அரிபெய் கிங்கிணி யார்ப்பத் தெருவில்
தேர்நடை பயிற்றுந் தேமொழிப் புதல்வன்"[41]

நெல்லிக்காய் நீர் போல மழலை பேசுகிறான். அரிதிற் பெற்ற மாமகன் அழுகுரலும் கூடத் தாய்க்கு இனியதாகவே உள்ளது. மகன் கண்ணில் மையிட்டு ஆடைவிடுத்து அழகு பார்க்கும் பெற்றோர் இருவருக்கும், பாணன் யாழிசை மகன் மழலை கேட்கவிடாததால் துன்பம் தருகிறது.[42]

யானைப்பாவை, குதிரை நடைவண்டி, இதை இழுத்துக்கொண்டு வரும் குழந்தையின் ஆடல் கண்டு அன்னை அகமகிழ்கிறாள். பற்கள் முளைக்காத பொக்கை வாய் திறந்து அடிக்கடிச் சிரித்துச் சிறுதேர் உருட்டும் செல்வன் எழுபிறப்பிலும் தீயவை தீண்டாத, பழியற்ற புகழைத் தன்னைப் பெற்றோர்க்குத் தருகிறான்.[43]

பார்ப்பனச் சிறுகுழந்தைகட்கு முன்குடுமி இருந்தது போலச் சிறுகுடுமி வைத்த குழந்தைகளைப் 'புல்லுளைக் குடுமிப் புதல்வன்' என்று புறநானூறு கூறுகிறது.[44]

## பெண் குழந்தை

குழவிப் பருவத்தில் இருபாற் குழவிகட்கும் வேற்றுமை இல்லை எனினும், சங்க இலக்கியத்தில் புதல்வனே பெரிதும் பேசப்படுகிறான். பெண் மகப்பேறு கருதிக் குன்றக் குறவன் கடவுளை இரந்தது பற்றிக்,

"குன்றக் குறவன் கடவுட் பேணி
இரந்தனன் பெற்ற எல்வளைக் குறமகள்"[45]

என ஐங்குறுநூறு காட்டும். செல்வராயினும் மகப்பேறின்றி வருந்தியபின் பெற்ற மகள் செல்வமாக வளர்க்கப்பட்டாள் என்பதைக் கலித்தொகை,

"நல்கூர்ந்தார் செல்வ மகள்"[46]

என்ற தொடரால் விளக்குகிறது. முதற்சூலில் வருந்திப் பெற்ற மகள் ஐங்குறுநூற்றில்,

"கடுஞ்சூல் மகள்"[47]

என்றழைக்கப்பட்டாள். குழந்தைப் பருவ மதலைகளில் ஆண் குழந்தைகள் அதிகமாகக் குறிக்கப்படுதல்போல, பெண் குழந்தைகளின் குறிப்புகள் அதிகம் இல்லை. ஆயினும் வளர்ந்த இளம் பெண் பருவத்தினராய் மகளிர் அதிகம் பேசப்படுகின்றனர்.

குழவிப்பருவம் - அறிஞர் கருத்துகள்

குழவிப்பருவம் பிறரைச் சார்ந்துவாழ வேண்டிய பருவம். வளர்ந்து வருகிற குழந்தை தானே செயல்படக்கூடிய தன்மையை விரும்புகிறது. அவ்வாறு குழந்தை செயல்படும்போது சில செயல்கள் நல்லதாக ஏற்றுக்கொள்ளக் கூடியதாக இருக்கின்றன. அப்போது குழந்தை சரியாக வளர்கிறது எனலாம்.

"மனித ஆளுமை குழந்தையாக இருக்கும் பொழுதே (ஏறக்குறைய 5 வயது) உருவாகி விடுவதாகவும், அதுவே குழந்தையின் பிந்தியகால முழுமன வளர்ச்சியையும் நிர்ணயிப்பதாகவும்" ( Predetermine )உளவியல் அறிஞர் ஆல்பர்ட் அட்லர் கூறுகிறார்.[48]

"மனம் புலன்களை இயங்கச் செய்கிறது. உடல் இயங்குகிறது. வீட்டுக்கு வெளியே வரும்போது குழந்தையின் கண் எவ்வளவோ காட்சிகளைப் புதுமையாகக் காண்கிறது. குழந்தையாக இருக்கும்போது முதல் நான்கு, ஐந்து ஆண்டுகளுக்குள் மூளை வளர்கிற வேகம் மிகுதி என்றும் அதன்பிறகு வாழ்நாள் எல்லாம் வளரும் வளர்ச்சியும் அதற்கு ஈடு ஆகாது என்றும் ஆய்வாளர் சொல்கிறார்கள். அதனால் குழந்தையை அடிக்கடி வெளியே அழைத்துக்கொண்டு வருவதுதான் கடமை."[49] என்று 'குழந்தை' என்ற தம் நூலில் முனைவர் மு. வரதராசனார் இக்கருத்தை அரண் செய்கிறார். கலித்தொகையில் குழந்தை செவிலி, தோழியுடன் வெளியே சென்றுவருவதைக் காணலாம். கோயில், விளையாடும் இடம் போன்ற இடங்கள் குழந்தை விரும்பிச் சென்ற இடங்கள் என்பதைப் பல பாடல்கள்வழி அறியமுடிகிறது.[50]

சங்க இலக்கியத்தினால் அறியப்படும் குழந்தையின் குழவிப்பருவம் உரிமையுணர்ச்சி உடையதாகவும், மகிழ்ச்சி நிறைந்ததாகவும் காணப்படுகிறது. பெற்றோர் கவனம் என்பதில் தாயின் கவனமே கூடுதலாக அமைந்து இருந்ததாக அறிகிறோம்.

## 2.2 இளமைப்பருவம்

இளமைப்பருவம் மனித வளர்ச்சியில் மிக முக்கியமான ஒரு கட்டம். குழவிப் பருவத்திற்கும் முதிர்ச்சிப் பருவத்திற்கும் இடையே உள்ள இப்பருவத்தில் உடல் வளர்ச்சியும் மன வளர்ச்சியும் மாறுதலடைகின்றன. புதிய ஆர்வம், புதிய உணர்வுகள், புதிய தொடர்புகளுடன் இளமைப் பருவ அறிவு பலவேறு வகையில் விரிவடைகிறது. குழந்தை அறிவு முதிர்ச்சி பெற்று வளர்ந்து, திருமணம் செய்து, தனக்கென ஒரு குடும்பத்தின் தலைவராகும் வரையில் உள்ள காலகட்டத்தை இளமைப் பருவமாகக் கொள்ளலாம். இளமைப்பருவத்தை முகிழிளமை, முதிரிளமை எனப்பகுக்கலாம்.

"இளமை தேடும் பருவம்; நான்யார் என்று தெரிந்துகொள்ள உள்முகமாகத் தேடுதல்; மற்றும் இவ்வுலகில் நம் இடம் யாது என்பதைத் தெரிந்துகொள்ள வெளியில் தேடுதல். மேலும் நெருக்கத்திலும், நெருக்க நிறைவிலும் மனநிறைவு கொள்ள இறைஞ்சுகின்ற ஓர் அவா இந்த இளமைப் பருவத்தில் முகிழ்க்கிறது. அழகையும் காதலையும் தீவிரமாகப் புரிந்து கொள்ளும் பருவம்."[51]

என்கிறார் தியோடர் லிட்ஜ் ( Theodore Lidz ) என்னும் மனநூலார்.

இளைஞர்களை மூவகையாகப் பிரிக்கிறார் எரிக் எரிக்சன் என்னும் உளநூலறிஞர்.[52]

1. பெற்றோரையும், பெரியோரையும், அதிகாரத்தில் உள்ளவர்களையும் சார்ந்து, அவர்களுக்குக் கீழ்ப்படிந்து வாழ்கின்றவர்கள்.

2. தங்களைச் சுதந்திரமானவர்களாகப் பாவித்து யாருடைய கட்டுப்பாட்டுக்கும் உட்படாமல் வாழ விரும்புகின்றவர்கள்.

3. தங்களுடைய தனித்தன்மைகளை வலியுறுத்தி அவற்றை நிலைநிறுத்துவதோடு, பெற்றோர், பெரியோர், அதிகாரிகளுக்குச் சில காரியங்களைப் பொறுத்த-மட்டில் சார்ந்து போகின்றவர்கள்.

இம்மூன்று வகையினருமே அவர்கள் நிலையில் பல சிக்கல்களைச் சந்தித்தாலும் சவாலைச் சந்தித்து எதிர்கொள்ளும் ஆற்றலால் அதை வென்றுவிடுகின்றனர்.

குழந்தை வளர்ப்பு

குழந்தை வளர்ப்பு ஒரு கலை; பெற்றோர் பங்கு அதில் இன்றியமையாதது.

"யாய் நயந்தெடுத்த ஆய்நலம்"[53]

"நற்றோள் நயந்து பாராட்டி"[54] என்பதால்

கருத்துடன் வளர்த்த பெற்றோர் நற்குணங்கள் பிள்ளைக்கும் வருகின்றன. அல்லது கண்ட இடத்தில் கடிந்தும், அடித்தும் திருத்தியுள்ளனர்.

"ஆணை அடித்துவளர், பெண்ணைப் போற்றி வளர்"

"ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா?"

"தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்"

என்பதற்கேற்பக் குழந்தைகள் இளம்பருவத்திலிருந்தே செம்மையானவர்களாக உருவாக்கப்பட்டனர். சான்றோன் ஆக்கிய தந்தைக்கு மகனாற்றும் நன்றியாக, அம்மகன் தந்தைக்குச் சிறப்பைப் பெற்றுத் தருகிறான்.

"நீவா ழியர்நின் தந்தை
தாய்வா ழியர்நிற் பயந்திசி னோரே"[55]

என நாஞ்சில் பொருநன் தாய் தந்தையருடன் வாழ்த்தும் சிறப்புடன் வாழ்ந்திருக்கிறான்.

இளமையில் இருபாற் குழவியரும் வேற்றுமையின்றி கலந்து விளையாடினர். பொய்தல், புனலாடல், மலர்பறித்தலில் ஈடுபட்டு ஆடிய சிறுவரும் சிறுமியரும் தம்முள் சண்டையிட்டுக் கொள்ளலும் உண்டு. காதற் செவிலியர் வந்து தவிர்ப்பவும் தவிராது ஒருவர் முடியை ஒருவர்பற்றி இழுத்துத் தம் வெற்றியை நிலைநிறுத்த விழைதல் நடந்தது.[56]

இளைஞர் வளர்ச்சி

இளஞ்சிறுவன் சான்றோனாக, நன்னடையுடன் வளரக் கல்வி கற்பிக்கப்பட்டான். பெற்றோர் தொழிலில் ஈடுபாடும், ஏட்டுக் கல்வியும் பெற்ற இளமாணாக்கன், சிறப்பின்பாலால் தாயால் உறவுள்ள மற்றவரைக் காட்டிலும் உயர்வாகக் கருதப்பட்டான்.

"அறிவுடை யோனா றரசுஞ் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனு மவன்கட் படுமே"[57]

என்றவாறு உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும் கற்றலை இனிதெனக் கருதினர். அரச இளைஞர் படைத்தலைவனுடன் சேர்ந்து போர்ப்பயிற்சி பெற்றனர். 'யானைப்பேச்சு' கற்றவர்கள் கவளம் தந்து யானைப் பயிற்சி மேற்கொண்டனர். குதிரை ஏற்றம், தேர் செலுத்தல் முதலிய அனைத்துக் கல்வியும் கற்ற இளைஞர்கள் உடல் வளர்ச்சி அடைந்து திண்தோள், வெந்திறல் உடைய மையணற் காளையராய் மாற்றம் பெறுகின்றனர். வீரத்தின் அடையாளமாய்ச் செய்வினை பொருந்திய கழல் காலில் விளங்குகிறது. தன்னை அழகுபடுத்திக் கொள்ளும் ஆவலில் தலையிலும் மார்பிலும் பலவித மலர்சூடும் இளைஞன், ஆடை அணிகளிலும் மிக்க ஆர்வம் செலுத்துகிறான்.

இளைஞரும் காதலும்

குமரப்பருவத்திலிருந்து, வாலிபப் பருவத்திற்கு வரும் இளைஞன், வாழ்விலே ஓர் அமைப்பை உருவாக்கிச் செயல்பட முனைகிறான். தீர்க்கமான, கொள்கைப் பிடிப்புள்ளவனாகத் திகழும் இளைஞன் எதையும் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவலாகத் தேடுகிறான். கண்டுபிடிக்கும்போது நிறைவடைகிறான். சுயக்கட்டுப்பாடுடன் பெரியோர் நடத்துதலும் இணையும்பொழுது தன்னேரில்லாத் தலைவன் ஆகிறான்.

இளைஞன், தனக்குப் பிடித்த தலைவியை நாடிக் காதலில் ஈடுபடுகிறான். கடுமையான வழி, நள்ளிருள், கொடிய விலங்குகள் எதற்கும் அஞ்சாத நெஞ்சுடன் தலைவியைச் சந்திக்க வருகிறான். வேட்டையாடும் வில்லம்பும், வேலும் வாளும் உடைய அவனுக்குத் தலைவியின் தாய், தந்தை குறித்துச் சிறிதும்

அச்சம் இல்லை. அலர் எழுந்ததும் முறையாக மணம்பேசி மணந்து கொள்கிறான்; அன்றி உடன் போக்குச் சென்றும் தன் சுற்றம் காண வரைந்துகொள்கிறான். தலைவியின் பெற்றோர் மனமகிழத் தலைவியுடன் அவன் ஊர் திரும்புவது, அவன் பெரியோரை மதிக்கும் பண்பைக் காட்டுகிறது. தலைவியைப் பெறமுடியாத நிலை ஏற்படுமாயின் மடலேறத் துணிந்தும் தன் காதலில் வெற்றிபெறுகிறான். எண்ணத்தில் திண்ணியராய் இருந்து எண்ணிய எண்ணியாங்கு எய்தும் இளம்பருவம் வாழ்க்கைக்கு நல்ல அடித்தளமாக அமைகிறது.

பெண்கள் வளர்ச்சி

இளம் பெண்கள் விரைவில் பருவவளர்ச்சி அடைகின்றனர். ஆண்களை விட இரண்டு மூன்று ஆண்டுகட்கு முன்பே,

"குன்றக் குறவன் காதன் மடமகள்
வரையர மகளிர்ப் புரையும் சாயலள்
ஐயள் அரும்பிய முலையள்
செய்ய வாயினள் மார்பினள் சுணங்கே"[58]

என்றவாறு முழுவளர்ச்சி அடைகின்றனர்.

இளம் பெண்டிரும் காதலும்

உடல் வளர்ச்சி போன்று உள்ள வளர்ச்சியும் அடையும் பெண் பாலுணர்வு அடைகிறாள். தான் சந்திக்கும் தன்னை நேசிக்கும் தலைவனைத் தானும் விரும்புகிறாள். வீட்டளவில் வளர்ந்த மகள் வெளியுலகில் சென்றுவரப் பழகும்போது களவு மணம் பெறுகிறாள். களவை எக்காரணம் கொண்டும் தாய் அறியக்கூடாது என்பதில் மிகவும் முன் எச்சரிக்கையாக இருக்கிறாள். தான் உடல்வேறுபாடு அடைந்தாலும், ஐயுற்ற அன்னை வெறியாட்டு நடத்தினாலும்

தலைவனை விட்டுக் கொடுக்காது, தனது தலைவனுடன் தன் திருமணம் நன்முறையில் நடக்கக் கடவுளை வேண்டுகிறாள்.

அறத்தொடு நின்று தமர் இசைவுடன் காதலனைக் கைப்பிடிக்கிறாள்; இயலா நிலையில் உடன்போக்கு மேற்கொண்டு காதலனுடன் கருத்தொருமித்த இல்வாழ்வுக்குத் துணைபோகிறாள். கண்டிப்பான தாயை வெறுக்கும் மகள், தானும் ஒரு தாயான பின்னரே தாயன்பின் முழுமையை உணர்கிறாள். சிறுவயது முதல் தாயின்பின் சுற்றித்திரிந்து, ஏவல்மறுக்கும் சிறுவிளையாட்டியாகத் திகழ்ந்த பெண் அறிவும் ஒழுக்கமும் உணர்ந்தவளாக மாறுகிறாள். பெற்றோரின் கட்டுப்பாட்டில், வீட்டுக்கடமைகளைச் செய்துவந்த பேதைச் சிறுமி, உற்றார்க்குரிய பொற்றொடி நங்கையாகிறாள்.[59]

இரவுக்குறி வரும் தலைவனைச் சந்திக்க, தாயும் தந்தையும், அன்னனும் இருந்தும் அவர்களை ஏமாற்றிவிட்டுச் செல்லும் துணிவுடையவளாக இருக்கிறாள். தனது உரிமை வேட்கையை விட்டுத்தராது காதலில் வெற்றி பெறுகிறாள். தன்னை அழகுபடுத்திக் கொள்வதிலும் அணிகலன்கள் பூணுவதிலும் பேரார்வம் உடையவளாய் இருக்கிறாள்.

இளமையில் நட்பு

இளமைப்பருவத்தில் ஏற்படும் உடல்மன வேறுபாடு குறித்து இளையோர் அச்சம், கவலை, வியப்பு போன்ற உணர்ச்சி அடைகிறார்கள். அதைத் தாயுடனும் தந்தையுடனும், பகிர்ந்து கொள்ள விரும்பாமல் புது உறவாகத் தோழரை நாடுகின்றனர். ஆணும் பெண்ணும் அவரவர் பாலினத்தில் தம் நம்பிக்கைக்குரியவராக ஒருவரைத் தேர்ந்து நட்பு கொள்வர். நல்ல தோற்றம், அழகு, தன்னம்பிக்கை, திறமை, மனப்பக்குவம் உடைய இளையோரை நட்புக் கொள்ள மற்றவர் விரும்புகின்றனர். சிறப்பியல்புகள் மிக்க தலைவனுக்குத்

தோழனாகப் பாங்கனும், தலைவிக்குத் தோழியும் அமைகின்றனர். சம வயதுள்ள உடனொத்த தோழர்களால் இளையோர் சிக்கல் ஏற்படும்பொழுது தக்க ஆலோசனை பெறுகின்றனர். காதல் நோய்ப்பட்ட தலைவனைப் பாங்கன் முதலில் வினவி, இடித்துரைத்து, பிறகு உதவி, மணச்செய்தியைத் தூதாகச்சென்றுகூறுவதைக் குறுந்தொகை கூறும்.[60]

செவிலி மகளான தோழி, தலைவன் தலைவி காதலுக்குத் துணை நிற்கிறாள். தோழியின் தனிப்பட்ட வாழ்க்கையோ, தனிப்பட்ட மன உணர்வுகளோ சங்கப் பாடல்களில் சித்திரிக்கப்படவில்லை. ஆயினும் தலைவனை விட அதிகமாகக் கூற்றுக்குரிய பாடல்கள் தோழிக்கே உரியன. தலைவன், தலைவியை அடையக் குறையிரக்கும்போது உடன்படவைப்பதும், குறியிடம் சேர்ப்பதும், தாயறியாது களவை வளர்ப்பதும் தோழியே. இற்செறிப்புக் கடுமையால் தலைவியின் காதல் மிகும்போதும், அலர், வெறியாட்டு, நொதுமலர்வரைவு காரணம் காட்டித் தோழி வரைவுகடாவும் சூழல்கள் மிகுந்த உணர்வுமயமானவை. அன்னை களவு அறிந்து வினவும்போதும், தமர் தலைவனை மறுக்கும்போதும் துணிவுடன் அறத்தொடு நிற்கும் தோழி, தாய் தந்தையரிடம் உரிமையுடன் சம்மதம் வேண்டுகிறாள். இருதலைப்புள்ளின் ஓருயிர் போலத் தலைவியும் தோழியும் நட்பில் இணைய இளமைப் பருவம் துணையாகிறது.

குறிக்கோள் வாழ்வு

இளமைப் பருவத்தில் உயர்ந்த குறிக்கோளுடன் வாழவேண்டும் என்ற எண்ணம் வேரூன்றுகிறது. தான் காதலிக்கும் பெண்ணாயினும் பலராறிமணம் புரிந்தே அவளை அடைய வேண்டும் என்று விரும்பிய தலைமக்களே இருந்தனர்.[61] செய்வினை முடித்துவரும் செயல்வீரர்களை விரும்பி அவரோடு தொடர்புகொள்ள வீரமிக்க இளைஞர் விரும்பினர்.

குடிப்பெருமை காத்து தந்தை பெயர் நிறுவ ஒவ்வொரு இளைஞனும் விரும்பினன். தந்தையொடு போர்க்களத்தில் மாண்டுகிடத்தலையும், தோழனைக் காக்கப் போர்க்களம் புகுந்து கற்றாவின் மனம் போலக் கசிந்து **போரெதிர்ந்ததையும்**, செம்முது பெண்டின் சிறுவன் படைக்கு நேராய் மாறி, களிறெறிந்து பட்டதையும் புறநானூறு பெருமிதத்துடன் காட்டுகின்றது.

காதலும் வீரமும் சங்க இலக்கியத்தின் கருப்பொருளாக அமையும் வண்ணம் இளையோர் சிறந்த பண்புடையோராய் வாழ்ந்தனர். ஒளியும், ஆற்றலும், ஓம்பா ஈகையும், அளியும் போன்ற சீரிய குணங்கள் இளையோர் மனதையும் வாழ்வையும் செம்மைப்படுத்தின.

## 2.3 <u>விளையாட்டும் தொழிலும்</u>

விளையாட்டு என்பது எல்லா உயிர்களிடத்தும் இயல்பாகக் காணப்படுகின்ற செயலாகும். குழவிப்பருவம் முதற்கொண்டு முதிர்பருவம் வரை விளையாட்டுக்கள் மாறி வருகின்றன. காலையிலிருந்து மாலைவரை குழந்தையர் ஓயாமல் விளையாடுகின்றனர். தங்களுடைய உயிராற்றலை வெளிப்படுத்தி, உடல் இயக்க அமைப்புக்கள் செயலாற்றப் பயிற்சி பெற விளையாட்டுக்களே குழந்தைகட்கு உதவுகின்றன.

வெறும் மகிழ்ச்சி நாட்டமே விளையாட்டு என்றும், தன் சிறுமையை அறிந்த குழவி, விளையாட்டில் எல்லோரினும் தான் சிறந்து விளங்குவதாக எண்ணித் தன் ஏமாற்றங்களைப் போக்கிக்கொள்கிறது என்றும், பெரியோர்களைப் பார்த்து அவர்கள் செய்வது போலக் குழவி செய்வதே விளையாட்டு என்றும் தனிப்பட்டு நிற்கும் குழவி படிப்படியாகப் பிறரொடு ஒன்றுபட்டு வாழத் தொடங்கிச் சமுதாய வாழ்க்கையைப் பயில்வதே விளையாட்டு என்றும், ஒவ்வொரு குழவியின் தனித்தன்மையும் கட்டின்றி வெளிப்படும் நிலையே விளையாட்டு என்றும்

ஒவ்வொரு குழவியின் தனித்தன்மையும் கட்டின்றி வெளிப்படும் நிலையே விளையாட்டு என்னும் பலவிதமான கருத்துக்களை உள நூலறிஞர் தெரிவித்துள்ளனர். சர் பெர்சி நன் ( Sir Percy Nunn ) என்னும் பேராசிரியர் மேற்கண்ட கருத்துக்கள் அனைத்தும் ஒருங்கிணைந்து விளையாட்டின் உண்மையான இயல்புகளை விளக்குவதாகக் கருதுகிறார்.[61]

வயதுக்கேற்ப விளையாட்டுக்களும், விளையாட்டுப் பொருள்களும் மாறுகின்றன. அதுபோன்றே குழவிப்பருவத்தில் இணைந்து விளையாடும் இருபாற் குழவியரும் வயது வளர வளர வேறுபட்டு நின்று வேறுவேறு விளையாடலில் ஈடுபடுவதையும் காணலாம். பிற்கால வாழ்க்கையில் பொருத்தமாகத் தங்களை உருவாக்கிக் கொள்ளப் பயிலும் இடமாக விளையாட்டு உதவுகிறது.

குழந்தையின் அதிகப்படியான ஆற்றல் செலவாகவும், எதிர்கால வாழ்க்கைக்கு உதவக்கூடிய பயனைப் பெறவும், அன்றாட வேலைகளினால் ஏற்படும் சோர்வு நீங்கி ஓய்வு கொள்ளவும் விளையாட்டு தேவைப்படுகிறது என்கிறார் மு. இராசமாணிக்கம்.[62]

சிறுவர் விளையாடல்

சங்கச்சான்றோர்கள் குழந்தைகளின் விளையாட்டை மனமார வரவேற்றிருக்கின்றனர். சிறு குழவிகளின் விளையாட்டு சிறுவர்களிடையேயும் தொடர்ந்து நிலைபெற்றது. அதைக் கண்டு தாயர் பெரிதும் மகிழ்ந்தனர். சிறுதேர் உருட்டலைத் தாயர் கோழி மேல் எறியும் பொற்குழை தடுத்து நிறுத்துகிறது. யானைப்பாவை, குதிரைப்பாவை, செல்வச்சிறார் இழுக்கும் நடை வண்டிகளாயின. ஏழைச்சிறார் பனங்குரும்பையைக் கொடியாற் கட்டி இழுத்து விளையாடினர். சிறுபறை கொட்டியும், கிலுகிலி ஆட்டியும் ஆடும் குழந்தைகள் தேரில் அமர்ந்து சேடியர் இழுக்கவும் விளையாடி மகிழ்ந்தனர்.[63]

தாயிடமிருந்து தந்தைமார்பில் பாய்ந்து அவர் மார்பு மாலை பறித்தலும், தழுவும் தந்தையின் மார்பில் பூசிய சந்தனம் கரைய ஏறி ஆடலும் குழந்தைக்கு மிக உவப்பு தரும் விளையாட்டு.[64] தளர்நடையிட்டுவரும் மகவுக்கு அன்னையர் அம்புலி காட்டி அடிசில் ஊட்டினர். உண்ண மறுக்கும் குழந்தையைத் தாய் சிறுகோல் கொண்டு அலைப்பதும், புலி வருவதாகக் கூறி மருட்டுவதும் நடந்தன.[65] தந்தை உணவுண்ண, இடைஇடையே குறுகுறு நடந்து இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும் குழந்தை நடத்தும் விளையாட்டு, பெற்றோர்க்கு ஆராமகிழ்வைத் தருகிறது.[66]

சிறுமியருடன் சேர்ந்து பொய்தல் ஆடும் சிறுவர், சிறுமியர் சிற்றிலை இடிப்பர்; அவருடன் வேற்றுமைகொண்டு குடுமிபிடி சண்டையும் நடத்தியுள்ளனர் என்கிறது குறுந்தொகை.[67]

குறச்சிறுவர் யானைகளுடன் ஓடி விளம்பழம் எடுப்பர்; தாளம் கொட்டுவர்; தேன் கூட்டிலிருந்து கசிந்து கற்குழியில் விழும் தேனை நக்குவர்; குளவிக்கூட்டைக் கலைத்துக் கடிப்பட்டுத் துன்புற்று ஓடுவர். கன்றுகளைக் கடாக்களாகப் பிணைத்துப் பலாப்பழத்தின் விதையை எடுக்க அதன்மேலேற்றி ஆரவாரிப்பர்.[68]

கருங்கை வினைஞரான உழவரின் காதலஞ்சிறார் கரும்பின் புன்காயை அடித்துப் பொன்போன்ற தாதினைத் தம் மார்பில் அப்பிக் கொள்வர் கோசர் சிறுவர் பூத்தொடுத்தும் கழைக்கூத்தரின் பிள்ளைகள் மூங்கிலில் ஏறியும் விளையாடுவர்.[69]

"கட்டளை யன்ன வட்டரங் கிழைத்துக்
கல்லாச் சிறாஅர் நெல்லிவட் டாடும்"[70]

என்று பாண்டில் ஆடும் சிறுவர்களை நற்றிணை குறிப்பிடுகிறது.

நீராடல் சிறுவர்க்கு மிகவும் பிடித்த விளையாட்டு, ஊர்க்குறுமாக்கள் குளத்து நீரிலும், பரதச் சிறுவர் காஞ்சியாற்று மணலிலும் விளையாடினர். தாயைப் பிரிந்து வைகையில் நீராடிய சிறுவரின் முஞ்சம் என்னும் தலையில் அணியும் அணிகலன் தொலைந்து போகும் எனப் பரிபாடல் சுட்டுகிறது.[71]

சிறுகுறுமாக்கள் தலைவன் பனங்கருக்கில் செய்து ஊர்ந்துவரும் மடற்குதிரையையும் இழுத்து வருவதில் மகிழ்ந்தனர். குறக்குறுமாக்கள் களிற்றுடன் புலி செய்த போர்கண்டு மகிழ்ந்து சிறிதும் அஞ்சாது சிறிய தொண்டகப்பறையை அடித்தும் விளையாடினர். உழவர் சிறார் தம் தந்தையர் குவித்து வைத்த வைக்கோல் போரில் ஏறி, விசைத்து எழுந்து (உகைத்து எழுந்து) பனம்பழத்தைத் தொடுவர். (புறம். 61:8-11)[72]

இளைஞர் விளையாடல்

குமரப்பருவம் அடையும் இளைஞர்க்குத் தொழில், கல்வி, குடும்பப் பொறுப்பு இவற்றால் விளையாடும் நேரம் குறுகிவிடுகின்றது. இருப்பினும் அவர்களது விளையாட்டு ஆர்வம் இயன்றபொழுதெல்லாம் வெளிப்பட்டது. சிறுவயதில் மகளிரொடு ஆடிய விளையாட்டு வேட்கை, குமரப்பருவத்திலும் அவர்தம் துணையை நாடுகிறது. மறை எனல் அறியாத மாயமில் ஆயமொடு, மருதமரத்தின் கிளையிலிருந்து, நீரில் பாய்ந்து ஆடிய பருவத்தை,

"கரையவர் மருளத் திரையகம் பிதிர
நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து
குளித்து மணற் கொண்ட கல்லா இளமை"[73]

என வியக்கின்றார் தொடித்தலை விழுத்தண்டினார்.

நிலத்திற்கேற்ப அருவி, புனல், குறுந்துறை, பெருந்துறை, ஆறு, கடல் என இளைஞர் களிப்புடன் நீராடினர். நீடு நீராடின் கண்சிவக்கும்

என்றறிந்திருந்தும், துறையாடும் மகளிருக்குத் தோள்புணையாக இருக்க விரும்பினர்.

"மடவரல் மகளிரொடு பகல்விளையாடி
தீது நீங்கக் கடலாடியும்"[74]

"மாசு போகப் புனல்படிந்தும்
அலவ னாட்டியும் உரவுத்திரை உழக்கியும்
பாவை சூழ்ந்தும் பல்பொறி மருண்டும்
அகலாக் காதலொடு பகல் விளையாடி"[75]

என்னும் சான்றுகளால் மகளிருடன் கலந்து இளையர் விளையாடியதை அறியமுடிகிறது.

ஆடுகளையும், சிவல் என்னும் கவுதாரிப் பறவைகளையும், தம்முள் மோதவிட்டுப் பார்த்தலையும் அவர்கள் விரும்பினர். தெய்வ வழிபாடு, வெற்றிவிழா, மணவிழாக்களிலும் மகளிருடனும், சுற்றத்தினருடனும் குரவை, துணங்கை என்னும் கூத்துக்களை ஆடி மகிழ்ந்தனர்.[76] அதைத் தழுவணி என்று குறுந்தொகை கூறும்.

காதல் வயப்பட்ட இளைஞர் கன்னியர்க்குப் பூத்தந்து மகிழ்விப்பர். அதனால் பூப்பறித்தலும், மாலை தொடுத்தலும், பைஞ்சாய்க் கோரையில் பாவைபுனைந்து தருதலும், ஊசலாட்டலும், நீராட வேழத்தெப்பம் செய்து தந்து உதவுதலும் ஆகிய ஆடல்களிலும் அவர்கள் ஈடுபட்டிருந்தனர்.

இளைஞர்கள் தாம் வாழ்ந்த காலத்திற்கேற்பப் போர்ப்பயிற்சி மிக்கவர்களாய் இருந்ததால் தம் திருமணம் குறித்து 'ஏறுதழுவல்' என்னும் நிகழ்ச்சியையும் வீர விளையாட்டாகவே கருதி ஏறுகளை அடக்கி வென்றனர்.

சிறுவர் தொழில்கள்

"உழவும் வாணிகமும் உலகத்துத் தொழில்களில் மிகுத்துச் சொல்லத் தகுவன. அவ்விரண்டால்தான் செல்வ வளத்தைத் திரட்டல் கூடும்"[77] என்பது மாங்குடி மருதனார் கருத்து. ஐவகை நிலங்களிலும் அவ்வந்நிலத்திற்குரிய தொழில்களை மக்கள் மேற்கொண்டிருந்தனர். குலத்தொழில் அல்லது தந்தை மேற்கொண்டிருந்த தொழிலில் குழந்தைப் பருவம் முதலே மக்கள் பழக்கப் படுத்தப்பட்டனர். உயர்குடும்பச் செல்வச் சிறார்க்குக் கிடைத்த கல்வி, அடிமட்டக் குடும்பத்து மக்களுக்கு அரிதாக இருந்திருக்கலாம். குழந்தைத் தொழிலாளர் என்னும் இன்றையநிலை அன்று பெரிதாகக் கருதப்படவில்லை. தாம் ஆடிய விளையாட்டுக்களைப் போலவே தொழிலையும் கருதிச் செய்யும் மனப்பான்மை சிறுவர்க்கு இருந்தது.

"ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே"[78]

என்றபடி போர்ப்பயிற்சி பெறும் மக்களைப் போல தொழிற்பயிற்சியில் சிறுவர் ஈடுபடுத்தப்பட்டனர்.

யானைப்பாகர்களின் மக்கள் யானையை நீராட்டினர். வேட்டுவர் விழ்துணை மகார், புன்றலைச் சிறார் ஆகிய காவலர் மக்கள் எலிவேட்டை, முயல்வேட்டை, மான்வேட்டை ஆடினர். சிறுவேட்டை ஆதலின் வில்லும், உடைமுள்ளால் அம்பும் தயாரித்தனர். எருமை, மாடு, ஆடு ஆகியவற்றை மேய்த்தனர். வேட்கோச்சிறார் கலம் வனைய உதவினர்.[79]

"மரங்கொஃறச்சன் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத் தற்றே"[80]

என ஔவையார் தச்சச்சிறுவர் காடு சென்று மரம் கொண்டுவருதலைக் குறிக்கிறார்.

"உவருணப் பறைந்த ஊன்றலைச் சிறாஅர்"[81]

துணிவெளுக்கும் தம்தாய்க்கு உவர்மண் சுமத்தலால் தேய்ந்த தலையுடைய சிறுவரை அகநானூற்றில் மதுரை மருதனிளநாகனார் குறிப்பிடுகிறார்.

வரிவலைப் பரதவரின் கருவினைச் சிறாரும் திமிலேறித் திரைச்சுரம் நீந்தி மீன் கொண்டுவந்தனர். கொழுமீன் வல்சிப் புன்றலைச் சிறாஅரின் நுண் ஞாண் வலையில் கொக்கு விழ, அதுவும் வேட்டைக்குரிய பொருளானது. முதியோருடன் கூடிக் கிழிந்த வலை தைக்கவும் மக்கள் உதவினர்.[82]

சிறுவர்களைப் பொறுத்த வரையில் அவர்கட்கு வேலையும் விளையாட்டும் ஒன்றேயாகக் கற்பிக்கப்பட்டது. உழவர் பிள்ளைகள் அவல் இடித்தலை விளையாட்டாகவே கருதி அதை உண்டனர்.

"பலபல தடைகள் காரணமாக, குழவி தனக்குள் தானே ஓடி ஒளிந்து கொள்ளும் வழிகளில் ஒன்றே விளையாட்டென நாம் வழங்கி வருவது; இயற்கை வாழ்வு வாழும் குழவி அவ்வாறு ஓடி ஒளியாமல் வேலை அனைத்தினையும் விளையாட்டாகவே எண்ணி வாழ்ந்து வருகிறது"[83] என்னும் மாண்டிசோரி அம்மையாரின் கருத்து, இயற்கையோடியைந்த தமிழர்தம் மக்களின் வாழ்க்கைக்கு ஏற்புடையதாகிறது.

## இளைஞர் தொழில்கள்

வளர்ந்த இளைஞர் பெற்றோருடன் இணைந்தும் தனித்தும் இயங்கித் தொழில்களில் தம் திறமையை வெளிப்படுத்தினர். கல்வி கற்றலில் திறமை பெற்றவர், மையோலை பிடித்த இளம்புலவர், வாதம் செய்தனர். இளமாணாக்கர் தம் சொல்வன்மைகண்டு தூதராகவும் அனுப்பப்பெற்றனர். படைக்கல்வியில் ஆர்வம் கொண்டிருந்த அரச இளைஞர் படைத்தலைவனுடனே இருந்து போர்த்தொழில்

வல்லவராயினர். யானைப்பேச்சு மட்டும் கற்றவர் யானைப்பாகராயினர். செல்வர்க்கும், தூது செல்வதற்கும் ஏவன் மக்கள் இருந்தனர்.[84]

ஐவகை நிலம் சார்ந்த தொழில்களிலும் பெற்றோருடன் இளைஞர் பங்களிப்பு இருந்தது. குறிஞ்சி நிலத்தில் ஐவனம், ஏனல் முதலிய பயிர் விளைத்தல், அதைக் காவல்காத்தல், கிழங்கு அகழ்தல், யானை, பன்றி வேட்டையாடல், தினை முற்றியதும் அறுவடை செய்தல், தேனெடுத்தல், குளம் கரை உடையாமல் காத்தல் முதலியன தொழில்களாய் இருந்தன.

பாலை நில மக்கள் ஆநிரை கவர்தல், வழிப்பறி செய்தல், முள்ளம்பன்றி முதலிய பிற விலங்குகளை வேட்டையாடல், போரில் ஈடுபடல் ஆகியவற்றில் ஈடுபட்டனர்.

மருதநிலத்தில் நெல், கரும்பு விதைத்துப் பயிர்த் தொழில் தொடர்பான அனைத்திலும் இளைஞர் விரும்பி ஏற்றுச் செய்தனர். கரும்புச்சாறு பிழியும் இயந்திரம் இருந்தது. மருதநிலத்து உப்புவாணிகர்,

"தம்நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து
பிறநாட்டு உப்பின் கொள்ளை சாற்றி"[85]

வண்டிகளில் வரிசையாகச் சென்று அதனை விற்பர். ஓரேருழவரையும், எருமைபூட்டி உழுதவரையும் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

முல்லை நிலத்திற்குரிய கோவலர் ஆநிரை, ஆடு, மறி மேய்த்தனர். வரகு, சாமை விதைத்து, அக்கொல்லையைக் காவல் காத்தனர். பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் விற்றனர். முல்லைப்பூச்சூடிய இடைமகன் பாலொடு வந்து அதற்குப் பதிலாக கூழ், உணவுத் தானியம் பெற்றுச் சென்றதைக் குறுந்தொகை கூறுகிறது.[86] முல்லைநிலத் தலைவன் வேந்தன்

வினை காரணமாக வெளியூர் செல்பவனாக இருப்பதால் தேர் ஓட்டும் பாகர்களும், வலவர்களும் இருந்துள்ளனர்.

நெய்தல் நிலத்தில் மீன் பிடித்தல், இறால் பிடித்தல், முத்து, சங்கு எடுத்தல், மீன்வலை, தூண்டில் ஆகியன செய்தல், ஓடம், மிதவை, படகு அமைத்தல், சுறாவேட்டை ஆடுதல், மரக்கலங்களைத் திறம்படச் செலுத்துதல் இவற்றில் பரதவ இளைஞர் ஈடுபட்டனர். உழவர் உழாமல் விளைவிக்கும்,

"மாநீர் முண்டகந் தாஅய்ச் சேறுபுலர்ந்து
இருங்கழிச் செறுவின் வெள்ளுப்பு விளையும்" [87]

நிலத்தில் உமணர்கள் வண்டி ஏற்றிச் சென்று உப்பு விற்றலும் நடைபெற்றது. மீனை உலர்த்தி உப்பிட்டுப் பதப்படுத்தி விற்றலும் அவர்தம் தொழிலாய் அமைந்தது.

பொதுவாக அமைந்த பல தொழில்களிலும் இளைஞர்தம் திறமை காட்டப்பெற்றது. இசைவல்ல இளையர் பொருநர், சிறுபாணர், பெரும்பாணர், கூத்தர் கூட்டத்தில் இருந்தனர். புடவை விற்கும் தொழிலில் சிறியரும் பெரியரும் கூடி மடித்துக் காட்டியதாக மதுரைக் காஞ்சி கூறுகிறது. [88] வன்சொல் இளைஞர் சிலையுடைக்கையராய் கவலை காத்தனர். களம் பாடும் இளைஞர் குழலும் இசைத்தனர், வளையல், யானைக்கொம்பு போன்ற பல்பொருள் விற்பனை செய்தனர். காதலியுடன் ஓடிவிளையாடி நண்டலைத்த போது, சிலம்பு உடைந்துவிட, கம்மியன்போல் துறைமணல் கொண்டுவந்து கூட்டுவிக்கும் காதலரை நற்றிணை காட்டுகிறது. [89] காதலிக்காக பாவையும், தெப்பமும் செய்யும் இளைஞர் அதில் சிறந்திருப்பதையும் காணமுடிகிறது.

மகளிர் விளையாட்டுக்கள்

பெண்கள் குழவிப் பருவம் முதல் குமரிப் பருவம் வரை வயது வேற்றுமை இன்றி எல்லாவகையான விளையாட்டுக்களையும் மேற்கொண்டிருந்தனர். பெண்

குழந்தைகள் விளையாட்டில் ஈடுபடுவதைத் தாயர் மிகவும் விரும்பி வரவேற்றனர். வண்டல், பொய்தல், குரவை, பாடி ஆடல், பாவை புனைதல், பந்தாடல், கழங்காடல், புனலாடல், பூப்பறித்தல், கிளி, பூவை, முதலியன வளர்த்தல் மகளிர்க்கு உரிய விளையாட்டுக்களாய்த் திகழ்ந்தன.

1. வண்டல் அயர்தல்

மகளிர் கூட்டமாக விளையாடியதை,

"ஓரை ஆயத் தொண்டொடி மகளிர்"[90]

"விளையா டாயமொடு ஓரை யாடாது"[91]

என்னும் வரிகள் காட்டுகின்றன. உடனாடு ஆயம், அலமரல் ஆயம், வரையர மகளிரின் நிரை என்பதால் அவரவர்க்குரிய தோழிகளுடன் விளையாடல் நடைபெற்றது புலனாகும். நீர்த்துறையில் மணலில் வீடுகட்டிச் சிற்றில் புனைதலும் மணலில் பாவை வரைதலும் வண்டல் எனப்பட்டது. மணலில் சிறுமிகள் புனைந்த சிற்றிலைச் சிதைக்கும் சிறுவர்,இளைஞரானலும் காதலியைக் கவரத் தாமே சிற்றிலும் பாவையும் புனைந்து தருவர். இளையோராடும் வரிமனையை, வண்டற்பாவையைக் கடல் வெளவலின் மணலை வாரி வீசி மங்கையர் அழுவர்; வண்டல் அயரும் போது ஒள்ளிழை தொலைப்பவரும் உண்டு;

"வளைவாய்க் கோதையர் வண்டல் தைஇ
இளையோர் செல்ப எல்லும் எல்லின்று"[92]

என்பதால் பகல் முழுவதும் விளையாட்டிலேயே கழித்தமை புலப்படும்.

உயர்மணற்கரையில் கோதை ஆயமொடு, வண்டல் தைஇ, ஓரையாடினும் சிவப்பாள் தன்மகள் என்றெண்ணும் தாய், சிலம்பொலிப்ப ஆடும் வரையிலும் அகலாது இருப்பாள்.[93] வண்டற்பாவை சிதையத் தேரில் வரும் இளையர்,

தாம் சிதைத்த சிற்றிலைப் புனைந்து தந்து, உடன்விளையாடும் ஆயத்தாலும் அறியாமல் மனம்புரிதல் உண்டு. உடன் போக்கு செல்லும் தலைவன், அதை மறவாது தலைவியிடம்,

"மணல்காண் தோறும் வண்ட றைஇ
வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே!"[94]

என்கிறான். உடன்போக்கு சென்றபின் தாய் மகளது ஆயம் கண்டும், நொச்சியின் கீழ் வரைந்த வண்டல் கண்டும் வருந்துகிறாள்.[95] இளம்வயது முதல் தொடரும் ஆயம், இளம் பெண் தாய் ஆகியபோதும் தொடர்கிறது. கடற்கடவுளைத் தொழத் தாய் தன் ஆயத்தொடு செல்கிறாள்.[96]

2. பொய்தல்

பிற்காலத்து இல்லற வாழ்வைப் பொய்யாக ஆடும் பொய்தல் விளையாட்டு காமக் குறிப்பில்லாதது.

"மணங்கமழ் மனைதொறும் பொய்தல் அயர"[97]

சிறுவரும் சிறுமியரும் கலந்து விளையாடினர்.

"சங்ககாலம் இயற்கை தழுவிய காதற்காலம். அற்றைச் சமுதாயம் குழந்தைச் சிறுமிகளைக் காதல் விளையாட்டிற் பழக்கியது; காதலே சமயமாகப் போற்றிய சங்கச் சமுதாயம், அச்சமயக் கல்வியைப் பெண்ணினத்திற்கு விளையாடும் பருவத்தேயே ஊட்டியது"[98]

என்பர் டாக்டர் வ. சுப. மாணிக்கம்.

பொய்தலாடும் பொய்யா மகளிர் சிற்றில் இழைத்து, பாவை, பானை கொண்டு நோன்பு விளையாட்டை ஆடுவர். தைந்நீராடி நோன்பு நோற்கும் தலைவி, பாவைத்திருமணம் செய்து, நிலாச்சோற்றை அம்மணம் காணவரும்

ஆயத்தார்க்குப் படைத்து மகிழ்வாள். தற்காலத்தில் இது 'பொம்மைக் கல்யாணம்' என்று வழங்கப்படுகிறது. இப்பொய்தல் விளையாட்டில் தலைவன் தலைவியைக் கண்டு குறை இரப்பான். பொய்தல் மகளிர் முள்ளி மலரை விழவணிக் கூட்டுவர்.[99]

3. குரவை, பாடி, ஆடல்

ஆடலுடன் பாடலைச் சேர்த்து ஆடும் மகளிர் இளைஞருடன் சேர்ந்தும் ஆடுவர். குரவை, துணங்கை என்னும் ஆடல்களை மகளிர் பலர்சேர்ந்தும், ஆடவருடன் இணைந்தும் ஆடினர். ஆதிமந்தியும் ஆட்டனத்தியும் ஆடுகளத்தில் ஒன்று சேர்ந்தனர். விழாக்களில் மகளிர் துணங்கை என்னும் ஆடலை நிகழ்த்தினர். தெற்றி என்னும் குரவை மகளிர் கைகோத்து ஆடுவது என்பதை,

"முதிர்வா ரிப்பி முத்த வார்மணற்
கதிர்விடு மணியிற் கண்பொரு மாடத்
திலங்குவளை மகளிர் தெற்றி யாடும்"[100]

என்று புறநானூறு கூறுகிறது. குறிஞ்சிச் சோலைகள், மனைமுற்றங்கள், காஞ்சிமரத்தடி, கானல், மணல் உள்ள இடங்களில் குரவை ஆட்டங்கள் நிகழ்ந்தன. அப்போது நல்யாழ், முழவு இசைத்து மகிழ்வுடன் ஆடினர்.

4. பாவை புனைதல்

தற்காலக் குழந்தைகள் வைத்து விளையாடும் பொம்மை போன்ற பாவைகளை வைத்து, குழந்தைத் தன்மை மாறாத மகளிர் விளையாடினர். "வல்லோன் றைஇய பாவை", "வல்லவன் தைஇய பாவை"[101] என்பதால் பொம்மை செய்ய வல்லவர்கள் இருந்ததை அறியலாம்.

பைஞ்சாய்க்கோரையால் பாவை புனைந்து தம் மகவென முலையூட்டுவர்; குரவமலரையே பாவையாய்க் கொண்டு தாலாட்டுவர்; பூந்தாதினால்

பாவை செய்யும் தலைவி, அதைப் பாராட்டிப் பூவும் மாலையும் அணிவிப்பாள். தலைவியின் அன்பைப் பெறத் தண்டாங்கோரையால் விதவிதமான பாவைகளைத் தலைவன் செய்து தருவதுண்டு. தலைவனுடன் ஊடும் தலைவி ஈனாப் பாவையைத் தான் ஈன்றதாகவே கூறுவாள். பாவையை நிலத்தில் கிடத்திவிட்டுத் தலைவனைப் பார்க்கப் போகும்பொழுதும் தன் பாவை மகளை நாரைமிதித்துவிடும் என்று உடன் திரும்ப வேண்டுவாள்.[102]

வரிமணலிலும் பாவை புனைந்து பூச்சூட்டலும், அதை வைத்துக் குரவை அயர்தலும், மகளிர் இயல்பாக இருந்தன. உடன்போக்கின் பின் தாய்,

"என்பாவைக் கினையநன் பாவை"[103]

என்று அழும்வண்ணம் மகளிர்க்குப் பிடித்தமான விளையாட்டுப் பொருளாய்ப்பாவை அமைந்திருந்தது.

> "வளரும் குழந்தைப் பருவத்தினர்க்கு உணவு, உடை ஆகியவற்றோடு விளையாட்டுப் பொருட்களும் இன்றியமையாதனவாய் உள்ளன... குழந்தைகள் சிறிது வளர்ந்ததும் மண்ணில் சிறுவீடு கட்டி விளையாடுவர். அவர்கள் அறிந்த பொருட்களின் வடிவம் அமையுமாறு மண்ணில் பொம்மை செய்வர். இளம்பெண்கள் செறிந்த மணலிடத்து வண்டற்பாவை ஒன்றை அமைத்து அதற்கு மலர் பறித்து, மாலை தொடுத்து அலங்கரிக்கின்றனர்"[104]

என்று 'பாவை' குறித்துத் தம் கருத்தை உரைக்கிறார் டாக்டர் வி.சி.சசிவல்லி.

5. <u>பந்தாடல்</u>

வரிப்பந்து, வரிபுனைபந்து, வரியணிபந்து எனக் குறிக்கப்பெறும் பந்தும், மகளிர் ஆயம் ஆடும் விளையாட்டுப் பொருள் ஆகும். தந்தை முற்றத்திருந்து பார்க்க, மகள் பந்தாடுவாள்; வயலைப் பந்தலிலும், வான்தோய் மாடத்திலும்

மகளிர் பந்தாடுவர். மகள் பந்து சிறிதெறியினும் மெய்நோகும் என அன்னை அழைத்துப் பால்தருவாள். பந்தைக் காலாலும் உருட்டி மகள் ஆடும்பொழுது அவள் பஞ்சு மெல்லடி நோகும் என அன்னை கருதுவாள்.[105]

பந்தாடு மகளிர்போல் மயில் சிறகு விரிக்கும்; ஆட்டொழி பந்துபோல் விளம்பழங்கள் மரக்கிளையில் காட்சியளித்தன என்னும் உவமைகள் பந்தாடலின் சிறப்பைக் காட்டுவன.[106] உடன்போனபின் தாய் கண்டு அழும் பொருட்களில் பந்தும் இடம் பெறுகிறது.

6. கழங்காடல்

கழற்சிக் காய்களைக் கொண்டு ஆடும் ஒருவகை விளையாட்டு கழங்கு ஆகும். ஆற்றுமணல், மணைமுற்றம், தெற்றி எனப்படும் திண்ணை ஆகிய இடங்களில் மகளிர் கழங்காடுவர். கழங்காடு ஆயத்தில் தலைவனும் சேர்ந்து ஆடித் தலைவியைக் கவர்வான். செல்வ மகளிர் பொன்னால் செய்து ஆடியதை,

"முத்தவார் மணற் பொற்கழங்காடும்"[107]

"பொலஞ்செய் கழங்கிற் றெற்றி ஆடும்
தண்ணான் பொருநை வெண்மணல்"[108]

என்னும் அடிகளால் அறியலாம்.

மகளிர் கழங்காடல் போல ஆலங்கட்டி மழை பெய்தது; மூங்கிலில் தெறித்த முத்துக்கள் கழற்காய் போன்றிருந்தன; நெல்லிக்காய்களைக் கொண்டு கழங்காடல் போலக் குரங்குகள் தாவி விளையாடின என்னும் உவமைகள் கழங்கின் வடிவம் குறித்தும் ஆடலின் தன்மை குறித்தும் விளக்குகின்றன.[109] கழங்காடினாலும் மகள் நுதல்வியர்த்து மெய்வருந்துவாள் என்பது அன்னையின் எண்ணம். மகள் உடன்போனபின் தாய் அவள் ஒழித்துச் சென்ற கழங்கு கண்டும், கழங்காடிய தெற்றி கண்டும்,

"பந்தும் பாவையும் கழங்கும் எமக்கொழித்தே"[110]

என்று கூறி வருந்துகிறாள்.

7. புனலாடல்

மகளிர்க்குப் பிடித்த விளையாட்டுக்களில் ஒன்று நீராடல். பாய்சுனை குடைந்தாடலும், குண்டுநீர் ஆடலும், அருவியாடலும், குன்றேறிப்புனல் பாய்தலும், கடலாடிக் கயம் பாய்தலும் பெண்களுக்குப் பெருவிருப்பமாய் இருந்தன. புனலாடல் விளையாட்டு வகையைச் சார்ந்தது என்பதால் இதைப் 'பண்ணை' என்கிறார் தொல்காப்பியர்.[111] பண்ணையை நீர்விளையாடும் இடம் எனக் குறிப்பிடும் ஐங்குறுநூறு, ஒண்ணுதல் அரிவையர், கரைசேர், மருதம் ஏறிப் பண்ணை பாய்ந்தனர் என்கிறது.[112] பெண்கள் நீராடத் துணைக்குப் பாட்டியர் போகும் வழக்கத்தைப் பரிபாடல் தெரிவிக்கிறது.[113]

வண்டுகள் கண்களை மொய்க்கவும், முள்ளி மலரால் ஒப்பனை செய்தும், பெருங்கடலில் திரை எழும்போது நெய்தல் கன்னியர் பாய்ந்தாடுவர். காட்டுமழைநீர் உடல்நோய் தீர்க்கும் என அன்னையர் தம் பெண்களை நீராடிவரத் தாமே அனுப்பினர். பொங்கிவரும் புதுநீர் நெஞ்சை ஆடுவதற்குத் தாயாிடம் ஒப்புதல் பெறக் கன்னியர் வேண்டினர். நெடுநேரம் சுனையாடிவரும் மகளைத் தாய் ஐயுறுவாள்; 'நாளையும் சுனையாடின் தோற்றம் மாறிவிடுமோ?' என நீராட அனுமதி மறுப்பதும் உண்டு. காதல் வயப்பட்ட கன்னியின் வருத்தம் தீரத் தலைவனது ஊரிலிருந்து வரும் ஆற்றில் நீராடத் தோழி அழைப்பாள்.[114]

பழையர் மகளிர் முத்தும் சங்கும் சொரிந்து குளிர்ந்த கடற்றுறையில் கடல் தெய்வம் வழிபடுவர்; அவலை வாயிலடக்கித் தண்புனல் பாயும் வழக்கமும் மகளிரிடையே நிலவியது. புனலாடும் மகளிர் தொலைத்த ஒள்ளிழையை எருமை கிளைத்துத் தரும்.[115]

புனலாடு மகளிர் வேழக்கோலால் தெப்பம் கட்டியும், மரத்துண்டுகளைப் புணையாகக் கொண்டும் நீராடினர். அவர்களுக்குத் தோள் துணையாகவும், தெப்பம்கட்டித் தந்தும் இளைஞர் உதவினர். இதனால் புனல்தரு புணர்ச்சியாகக் காதல் மலர்ந்தது. சுனை, அருவி, காவிரி, பொருநை, வைகை முதலிய ஆறுகள், கடல் இவற்றில் மகளிரும், மைந்தரும் சேர்ந்து நீராடியதைக் குறிக்கும் சங்க இலக்கியம், மகளிர்க்கே உரிய தனிச்சிறப்பாகத் தைந்நீராடலைக் குறிக்கிறது.

இடைக்காலத்து ஆண்டாள், திருப்பாவையில் குறிப்பிடும் 'பாவைநோன்பு' போன்று சங்ககாலத்தில் 'தைந்நீராடல்' என்பதே நோன்பாக இருந்தது. தாய் அருகில் நின்று நோன்பு முறைகளைக் கற்பிக்க, கன்னி மகளிர் தைமாதத்துத் தண்ணிய நீரில் குளித்தலை,

"தாயருகா நின்று தவத்தைந் நீராடுதல்"[116]

எனப் பரிபாடல் குறிப்பிடுகிறது.

ஐம்பால் மகளிர் பலர் திரளாகச் சென்று நீராடுவர்; இது விடியலில் நடக்கும்; கன்னியர் நீராடுமுன், அவர்தம் காதலர் தழை, மாலை தருவதுண்டு; தைந்நீராடிய நோன்பு முடிந்த பின்னரே உணவு உண்பர் என்னும் செய்திகளை,

"ஐம்பால் மகளி ராடுந்
தைஇத் தண்கயம் போலப்
பலர் படிந்து"[117]

"பெரும்புலர் விடியலின் விரும்பிப் போத்தந்து
தழையுந் தாருந் தந்தனன் இவனென
இழையணி ஆயமொடு தகுநாண் தடைஇத்
தைஇத் திங்கள் தண்கயம் படியும்
பெருந்தோள் குறுமகள்"[118]



"நோன்பியர், தையுண் இருக்கை"[119]

என்னும் சான்றுகளால் அறியலாம். தைந்நீராடலைக் குறித்து,

"பெயரினும் தொழிலினும் பிரிபவை எல்லாம்
மயங்கல் கூடா வழக்குவழிப் பட்டன"

என்னும் தொல்காப்பிய நூற்பா உரையில்,

"இன்று இவ்வூராரெல்லாம் தைந்நீராடுப"

என்பதனைக் காட்டி இளம்பூரணர் தைந்நீராடல் மகளிரதே என்று குறிப்பதால் இவற்றில் ஆடவர் நீராடல் இல்லை என்பது பெறப்படும். தொல்காப்பியப் புறத்திணையியலின் 20-ஆம் உரை மேற்கோளும் "தைந்நீராடலையே நோன்பு எனக் குறித்தது"[120] என்று விளக்குகிறார் பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை.

கற்பிலும் கணவன் மனைவியர் ஒன்றாகப் புனலாடலை விரும்பினர். பரத்தையருடன் தலைவன் நீர்விளையாட்டு ஊடலுக்குக் காரணமாகிறது. வினை வயிற்பிரியும் தலைமகனும் கார்காலத்து திரும்பிவரக் களிப்புதரும் புனலாடலையே குறிக்கின்றான். வயது வேற்றுமையின்றி அனைவரும் புனலாடலை விரும்பி இருக்க, மகளிர், சிறப்பாக அதில் ஈடுபட்டுத் திளைத்திருந்தனர்.

8. பூப்பறித்தல்

பூக்களைப் பறிப்பதும் மகளிர்க்குப் பிடித்த ஒரு விளையாட்டு. யாவரும் விரும்புவதும், மங்கலப் பொருளாய் இருப்பதும், கண்ணுக்கும் கருத்துக்கும் பொலிவாய் இருப்பதுமான மணமிக்க சிறுபொருள் பூ; பூப்போன்ற மென்மையர் பெண்கள். பூப்பெய்திய குமரி மகளிர்க்குத் தாயர் பூச்சூட்டுவதில்லை. தாம் ஆடும் விளையாட்டுக்கெனவே மலர் பறிக்கின்றனர் மகளிர். 96 வகையான

பூக்களைப் பறித்து மாலைதொடுத்து விளையாடியதாகக் குறிஞ்சிப்பாட்டு குறிப்பிடுகிறது. சுனைப்பூ பறித்தலும், பொன்னிணர் வேங்கை கொய்யப் பூசல் இடுதலும், பாதிரி மலர் பறித்து மாலை தொடுத்தலும் கயம்பாய்ந்து நெய்தல் பறித்தலும் மகளிர்க்கு மிகுந்த விருப்பம் தருவன.

வேங்கை மலர்தல் மணநாளைக் குறிப்பதாகக் கருதுவதால் அன்னையர் அதை வரவேற்றனர். வேங்கை மலர்களைக் கொய்யும்போது பஞ்சுரம் பாடுவர். வேங்கை, மராமலர், கோங்கம்பூ பறிக்கத் தலைவன் மரம்வளைத்து உதவி செய்வான். சுனைப்பூ பறித்தும், செங்காந்தள் கண்ணி தந்தும், குவளைப்பூ மாலை சூட்டியும் தலைவன், தலைவியைக் கவர்ந்து பூத்தருபுணர்ச்சி கொள்கிறான்.[121]

பூப்பறித்துக் காதலனுடன் விளையாடி நேரம் கழித்து வருதலாலும், தலைவன் தந்த வேற்றுநாட்டுப் பூவினால் மகளின் கதுப்பு நாறுதலாலும் ஐயுற்ற அன்னை பூப்பறிக்கத் தடைவிதிக்கிறாள். நெய்தல் பறிக்கப்போக அன்னை அனுமதி தராததாலும், தலைவர் தேர்வரின் முண்டகம் கொய்யப் போகமுடியாது என்றும் மகளிர் வருந்தும் வருத்தம் பூப்பறித்தலில் அவர்கள் கொண்டுள்ள ஆர்வத்தைக் காட்டுகிறது.[122]

உடன்போக்கிலும் தலைவன் வேங்கைமலர், மராமலர் சூட்டி அழகு பார்ப்பான். இயற்கை மணம் புரிந்து தலைவனுக்குப் பெண்டான தன்மையால், தலைவியின் கூந்தலில் பூச்சூட்டுவான். கற்புத் தலைவியர் முல்லைப்பூச் சூடுவர். வதுவையில் தலைவியின் பின்னிருங்கூந்தலில் பூ அணிவித்தல் ஒரு சடங்காகும்.[123] அதற்கு முன்னரே களவு மணம் புரிந்து, தலைவனால் மலர் சூட்டப்பெற்று வரும் மகள், தாய் தலைவாரும்போது கீழே விழும் பூவால் அறத்தொடு நிற்க-வேண்டியுள்ளது.

"முல்லை ஒருகாழும் கஞ்ஞியும், மெல்லியால்!
கூந்தலுள் பெய்து முடித்தேன்மன்; தோழியாய்!
வெண்ணெய் உரைஇ விரித்த கதுப்போடே
அன்னையும் அத்தனும் இல்லரா, யாய் நாண
அன்னைமுன் வீழ்ந்தன்று அப்பூ." [124]

என்னும் கலித்தொகை, காதலுக்குத் தூதாகும் பூக்கள், வதுவைக்கும் தூதாவதைக் காட்டுகிறது.

9. ஊசலாடல்

மகளிரது விளையாட்டாகப் பெண்பாற் பிள்ளைத் தமிழில் சிறப்பிடம் பெறும் ஊசல், சங்கப்பாடல் காட்டும் பெண்மக்களுக்கும் உவப்பாக இருந்தது. வேங்கை மரத்தில் மகளிர் ஊசல்கட்டி ஆடுவர்; தினைகாக்கும் மகளிர் ஊசலாட என்றே வேங்கைமரம் வெட்டப்படாது; இளமகளிர் கூட்டமாகவும் தனிமையில் தோழியுடனும் தலைவன் ஆட்டவும் ஊசல் ஈடுவர். ஊர் நடுவிலும் பெரிய கிளையில் கட்டப்பெற்று ஊர்மாந்தர் பலரும் ஆடும் ஊசல் இருந்ததை அகநானூறு காட்டுகிறது.[125] ஞாழல் மரத்திலும் தாழைவீழ்கயிறு கொண்டு ஊசல் தூங்கினர். உடன்போக்கு செல்லும் தலைவனும், தலைவியை ஊசலில் ஆட்டி மகிழ்வித்துள்ளான்.

10. நண்டலைத்தல்

உரைமகளிர்க்கு நண்டலைத்தலும் ஒரு விளையாட்டு. முள்ளிவேர் அளையில் பயந்தொடுங்கும் நண்டை வலிந்து பிடித்து அலைக்கும் பெண்களின் சிலம்பும் சிலபோது உடையும். செக்கர் ஞெண்டின் குண்டளை கெண்டிப் பரதவர் மகளிர் அலைப்பர்; அவர்க்கஞ்சிய நண்டு கடலில் ஒளியும். பொற்கோடு உடைய நண்டுகளை அலைத்து ஓடும் விளையாட்டுத் தன்மை உடைய மங்கை, களவுத் தலைவனால் பசலையுற்று

வளைநெகிழ்வதைக் குறுந்தொகையால் அறியலாம்.[126] சிறப்பாக இவ் விளையாடல் கடற்றுறையில் நடக்கிறது. கள்வனாட்டி, அலவனாட்டி என்ற பெயரில் இவ்விளையாட்டுப் பெண்கள் குறிப்பிடப்பட்டனர்.

11. கிளி, பூவை முதலியன வளர்த்தல்

கிளி, பூவை முதலியவற்றை வளர்த்து அவற்றுடன் விளையாடலும் இளமகளிரின் இயல்பு. மனையுறை புறாக்களும் இருந்தன. அரமகளிர் தாம் விளையாட அன்னப் பார்ப்புகளைப் பிடிப்பர் என நற்றிணை தெரிவிக்கிறது.[127] பாலூட்டி வளர்க்கப்படும் கிளிகள் தலைவி உடன்போனபின் உண்ணாது கூவி அழுதன; தாயும் அவற்றின் நிலைகண்டு,

"இதுவென் பைங்கிளி எடுத்த பைங்கிளி
இதுவென் பூவைக்கினிய சொற்பூவை"[128]

எனக் காண்தொறும் கலங்கி அழுகிறாள்.

வயலைக் கொடியையும், தாழிகளில் குவளையையும், தலைவன் மலையிலிருந்து கொண்டு வந்த காந்தள் செடியையும் மகளிர் வளர்த்தனர். உடன்போக்கிற்குப் பின் நீரின்றிவாடும் இவையும் அன்னையர் துயரைப் பெருக்குகின்றன. கானவர் எழுப்பும் ஒலியால் மருண்டு காட்டிலிருந்து பிரிந்து வந்த ஆமான்குழவியைக் குறுந்தொகை காட்டும் மகளிர் வளர்த்துள்ளனர்.[129]

பரதவர் மகளிர் உப்புமலை ஏறி தந்தையின் படகுகளை எண்ணுவது உண்டு. பாரிமகளிர்க்கு ஈத்திலைக் குப்பை ஏறி உமணர் உப்புவண்டி எண்ணுவது விளையாட்டாக இருந்தது.[130]

சங்ககாலத்து அன்னையர் விளையாட்டினால் மகளிர் உடல்நலம் பெறுவர் என்பதை உணர்ந்திருந்தனர். விளையாடச் செல்ல அவர்களே தூண்டி அனுப்பினர்.

மறை என்பதறியாத பருவத்தில் எப்போதும் விளையாடிக்கொண்டு இருந்த மகளிர் வாழ்வில் களவு நுழையும்போது மாற்றம் ஏற்படுகிறது. காதலுக்குத் துணையாக விளையாட்டுக்கள் நேரிடையாகவும் மறைமுகமாகவும் பயன்பட்டன; தலைமக்களால் பயன்படுத்தப்பட்டன. விளையாட்டைக் காரணம் காட்டி வெளிச்செல்லத் தன்மகள் காட்டும் அதிக விருப்பமும், ஆயத்தைச் சேராது விளையாட ஆர்வமின்றித் தனிமை நாடுவதும் தாய்க்கு ஐயம் தரும் காரணங்களாம். பூப்பறிக்கவும் நீராடவும் சென்ற மகள் தோற்றம் மாறி, புதுநாற்றம் கமழ வருகிறாள். பூத்தருபுணர்ச்சி, புனல்தரு புணர்ச்சி ஏற்படுகிறது. பந்து, கழங்கு ஆடாதிருப்பதும், சுனையாடச் செல்லாதிருப்பதும், முன்போல் கிளியிடம் அன்பு பாராட்டாதிருப்பதும் தாயின் ஐயத்தை உறுதிசெய்கின்றன. இற்செறிக்கும் அன்னை முதலில் கையாளும் உத்தி விளையாட்டைத் தடை செய்வதே! இது அறநெறியன்று; செல்வமும் தேய்ந்துவிடும் என்பது அக்காலச் சான்றோர் கருத்து.

> "விளையா டாயமொடு ஓரை யாடாது
> இளையோர் இல்லிடத் திற்செறிந் திருத்தல்
> அறனும் அன்றே ஆக்கமுந் தேய்ம்"[131]

என்று தாய்க்கு எடுத்துக்கூறுவார் இல்லை என மகளிர் வருந்தும் வண்ணம் விளையாட்டு அவர்கள் வாழ்வில் மிகச் சிறந்த இடம் பிடித்திருந்தது.

மகளிர் தொழில்கள்

'வினையே ஆடவர்க்குயிர்' என வாழ்ந்தது சங்கச் சமுதாயம். தமக்கேற்ற வகையில் மகளிரும் தொழில் செய்து ஆடவர்க்குதவினர், இல்லத்திருந்து மனையறத்தைக் கல்வியாகப் பயின்ற மகளிர், அட்டில், நறுமணப்பொருள் தயாரித்தல், மாலை தொடுத்தல், ஓவியம் வரைதல் ஆகிய கலைகளில் சிறப்புப் பெற்றிருந்தனர். தந்தையும் தாயும் வழிகாட்டிய தொழில்களில் ஈடுபட்டு, வாழ்க்கை வளம்பெறப் பாடுபட்டனர்.

1. கிளிகடிதல்

குறிஞ்சியிலும் முல்லையிலும் ஏனல், தினை விளைவித்தல் ஆடவர் தொழில், தினை முற்றும் காலத்தில் பறவைகளிடமிருந்து அதைக்காப்பது மகளிர் தொழில். கிளி, மயில், குருவி, யானை போன்றவை, குளிர், தட்டை, கவண், தழல், அரிப்பறை, அசோகின் தழை முதலியவை கொண்டு விரட்டப்பெற்றன. சிறப்பாகக் கிளிகடிதல் காதற்களமாக அமைவதைச் சங்க இலக்கியம் பரக்கக்காட்டுகிறது.

கிளிகடிதல், மகளிர் கடமை என்பதாகவே, தந்தையும் தாயும் கருதினர். தட்டை முதலிய கருவி தந்து பாராட்டி அனுப்பினர். கிளிகடி பாடல் பாடும் மகளின் குரல், தம் இனக்குரலே என நினையும் கிளிகள் ஓடா. அது கண்டு அவள் அழுவாள்; சரியாகக் கிளிகடியா விடில் மகளுக்குப் பதிலாக வேறு ஆள் அமர்த்தும் தாயின் செயல் மகளுக்குத் துன்பத்தைத் தரும்.[132]

புனக்காவலில் தலைவியை விரும்பும் தலைவன் தானும் சேர்ந்து கிளிகடிவான்; தலைவனுடன் சேர்ந்து விளையாடுதலின் தினைகாவலில் கவனம் குறைவதும், உடல் நலம்தொலைவதும் அன்னைக்கு ஐயம் தருகின்றன.

கிளிகடிதலை மறுக்கப்பட்ட மகள் நலம் தொலைய, 'அறனில் யாய்' என அன்னை திட்டப்படுகிறாள். மீண்டும் தினை காக்கச் சென்றால் இழந்த நலத்தை மகள் பெறுவாள் எனத் தோழி அறத்தொடு நிற்கக் 'கிளிகடிதல்' உதவுகிறது.[133]

இடையர் மகளிர்

இடைமகள் பால்விற்கச் செல்கிறாள்; பணி முடித்துவரும் மகளுக்கு மாற்றுடை அணிவித்து அன்னை விளையாட அனுப்புகிறாள். தாயுடனும், தமக்கையுடனும் மோர் விற்கும் பெண்ணின் அழகு கண்டு, தலைவியர் 'கணவர் மனம் மாறிவிடும்' என அஞ்சுகின்றனர்.

"மாங்காய் நறுங்காடி கூட்டுவேம்; மோர் வேண்டாம்"[134]

எனத் திருப்பி அனுப்புகின்றனர். இடைமகள் கொண்டுவரும் மான்தசைக்கும், தயிருக்கும் உழவர் பெண் நெல் தருகிறாள்.

"புனத்துளான் எந்தைக்குப் புகாஉய்த்துக் கொடுப்பதோ?
இனத்துளான் என்னைக்குக் கலத்தொடு செல்வதோ?
தினைக்காலுள் யாய்விட்ட கன்றுமேய்க் கிற்பதோ?"[135]

எனக் கலித்தொகை ஆயமகளின் தொழில்களை வரிசைப்படுத்துகிறது.

உழவர் மகளிர்
----------

உழவர் மகளிர் அறுவடைத் தொழிலில் ஆண்களுக்கு உதவுகின்றனர். அன்னையர் வரகை அறுத்து, திரிகையில் திரித்து, உரலில் குற்றிப் பொங்கல் இட்டுப் பாலுடன் உண்பர். புதுமணப்பெண் பாலை உலையில் வைத்துப் பேதைமகளிருடன் நெல்லை அவலாக இடிக்கும் வழக்கம் இருந்தது.[136]

"வயக்களிற்றுக்
கோடு உலக்கையாக, நற்சேம்பின் இலை சுளகா
ஆடுகழை நெல்லை அறை உரலுள் பெய்து"[137]

கலித்தொகை மகளிர் வள்ளைப்பாட்டு பாடிக்கொண்டே தானியம் குற்றுகின்றனர்.

பரதவர் மகளிர்
-----------

தந்தையும் தன்னையரும் பிடித்து வரும் மீனைத் திருவிழாவில் கொண்டு சென்று பரதவர் மகளிர் விற்பர். தந்தை தந்த கொழுமீன், அரிதான சுறாமீன், இறால்மீன் ஆகியவற்றை உணங்க வைத்து காக்கை முதலிய பறவைகளிடமிருந்து காத்தல் அவர்களது பணியாகும்.

"புலவுமீன் உணங்கல் படுபுள் ஓப்பி" [138]

"முடிவலை முகந்த முடங்கிறாப் பாவைப்
படுபுள் ஓப்பலிற் பகன்மாய்ந் தன்றே" [139]

"நிணச்சுறா அறுத்த உணக்கல் வேண்டி
இனப்புள் ஓப்பும்" [140]

என்பன புள்ஓப்பல் அவர்களின் முழுநேரத் தொழிலாய் அமைந்ததைக் காட்டுகின்றன. மீனைவிற்று நெல் பெற்றுவருவர்.

நெய்தல் நிலத்து உமணமகளிர் நெல்லிற்கு உப்பு நேர் எனக்கூறி விற்பர். உப்பு விளையும் அளத்தில் வேலை செய்வர். [141]

பாண்மகளிர்

பாணர்குலத்தைச் சார்ந்த பெண்கள் பாடி ஆடற்குரியர். பாண்மகள், ஆடுமகள், கிணைமகள், பாடினி, விறலி என்று இவர்கள் அழைக்கப்பெற்றனர். கூட்டமாகச் செல்லும்போது வழியில் அட்டில் தொழிலுக்கு உதவுவர். பாடல் பாடியும், கோல் அரி பறையினை அடித்தும் கேட்போர் வியக்க வைப்பர். கோடியர் என்னும் கூத்தர் இனப்பெண் 'தோளி' என்னும் கூத்தாடுவாள். தனது அன்றாடத் தேவைக்கான எண்ணெய், வெண்கிழி பெறுவதற்காக ஆடும் விறலி, செல்வச் சிறப்புள்ள நகரின்கண் அணிகலன் பெறவும் ஆடுவாள். [142] தலைவன் தலைவியர் இடையே ஊடல் தீர்க்கும் வாயில் ஆகவும் தூதுசெல்வாள். பாண்மகள் தானே தூண்டிலில் வரால்மீன் பிடிப்பாள். மீனுக்குப் பதிலாக வட்டி நிறைய நெல்பெறுவாள்;

"பழஞ்செந் நெல்லின் முகவை கொள்ளாள்
கழங்குறழ் முத்தமொடு நன்கலம் பெறூஉம்" [143]

என்னும் அகநானூறு பாண்மகள் நெல்பெறாது, முத்தும் அணிகலனும் கூடப் பெற்றிருக்கிறாள் என்பதைக் காட்டும்.

செவிலித்தாயர்

குழந்தைகளை வளர்க்கும் வளர்ப்புத்தாயான இவர்கள் ஈனாத்தாயர், காவற்பெண்டு எனவும் அழைக்கப்பெற்றனர். நற்றாயின் தோழியாகவும், தோழியின் தாயாகவும் திகழ்ந்த இவர்கள் செல்வச் சிறுமியர்க்கு இளம்பருவம் முதலே துணையாய் இருந்தனர். உணவு, துயில் என எதிலும் மகளுடனேயே இருந்து அவள் வளர்ப்பில் கண்ணும் கருத்துமாய் இருந்தனர். உடன்போக்கில் தேடிச்செல்வதும், இல்வாழ்வில் மகிழ்வதும் தாயர் மேற்கொண்டு, பெற்ற தாயினும் உற்ற தாயாக இருந்தனர். பணி என்ற நினைவின்றி அன்பு ஒன்றே மனதிற்கொண்ட இவர்கள் அரசியர்க்கும் உடனிருந்து உதவினர். நெடுநல்வாடை அரசிக்குக் குறியவும் நெடியவும் ஆக உகந்தமொழிகூறித் தேற்றிய பணி செவிலித் தாயர்க்கு உரியதாய் அமைந்தது.[144] மகளின் திருமணத்திற்குப் பின்னரும் தலைவன் வினைவயிற் பிரிந்தபோது அவளுடன் இருந்து ஆற்றுவிக்கும் செவிலியரை,

"நரைவிரா வுற்ற நறுமென் கூந்தற்
செம்முது செவிலியர் பலபாராட்ட"[145]

என்று அகநானூறு குறிப்பிடுகிறது.

வரைவின் மகளிர்

சங்கச் சமுதாயம், பரத்தமையையும் ஒரு தொழிலாக ஏற்றிருந்தது. வரைந்து கொள்ளாத பெண்கள் வரைவின் மகளிர், கணிகையர், பரத்தையர் என்று அழைக்கப்பெற்றனர். காமம் ஒன்றே காரணமாக ஆடவர் நாடும் பரத்தையர், காதற்பரத்தையர், காமக்கிழத்தியர் என்றும், பொருள் நாட்டம் கொண்டவர் விலைநலப்பெண்டிர், சேரிப்பரத்தையர் என்றும் குறிப்பிடப்பட்டனர். தந்தை எனும் உரிமையுடைய உறவு இல்லாவிட்டாலும் பரத்தையர் மகளிர் பாசத்துடன் வளர்க்கப்பெற்றனர். ஆய் நயந்தெடுத்த ஆய்நலம் உடைய

இளமகளிர், தம் தொழிலுக்குத் தேவையான ஒப்பனை, இசை, ஆடல், பாடல், அழகு முதலிய அனைத்துக் கலைகளிலும் வல்லவராயினர்.[146] தாய்க்குப்பின் மகளும் அத்தொழிலில் ஈடுபடுத்தப்பட்டாள்.

பிறதொழில்கள்

பூக்கள் விற்பதில் இளமகளிர் தம்பங்காற்ற, பூவும், பண்ணியமும் மனைதொறும் சென்றும் சிலபெண்டிர் விற்றனர். கட்டுக்குறி கூறும் அகவன் மகளிரும், வெறியாடல் வல்ல சாலினி என்பாரும், பெண்களின் நோய் கண்டு 'முருகணங்கிற்று' என்றனர். செல்வக் குடியிலும், அரண்மனையிலும் ஏவல் மகளிர் இருந்தனர். கள் அடுமகளிரும், விற்பாரும் அரியற்பெண்டிர் எனப்பட்டனர். பருத்தி நூற்கும் பருத்திப் பெண்டிர், கோயிலில் நந்தா விளக்கேற்றும் கொண்டி மகளிர், ஒப்பனை செய்யும் வண்ணமகளிர், துணிவெளுக்கும் புலைத்தி ஆகியோரும் தொழில்புரி மகளிராய் இருந்துள்ளனர்.[147]

சமுதாயத்தின் வளர்ச்சிக்குத் தொழிலும் வணிகமும் இன்றியமையாதன என்பதனை அக்காலமகளிர் அறிந்திருந்தனர். பெற்றோர் தம் தொழில்களில் மகளிர்தம் பங்குப்பணியும் ஆர்வமும் அதனை உறுதிப்படுத்துகின்றது.

***

## அடிக்குறிப்புகள்

1. திருக்குறள், 60.
2. ஈ.த. இராஜேசுவரி, குழவி உள்ளம், ப. 43.
3. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, ஐங்குறுநூறு, ப. 12.
4. வ. சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 49.
5. இறையனார் அகப்பொருள் நூற்பா. 32; ப. 154.
6. குறுந்தொகை, 25:1-2.
7. ஐங்குறுநூறு, 180:1.
8. மே.ப. 276:4-6.
9. மே.ப. 51, 54; பரி. 9: 16-22.
10. மே.ப. 386:4; 104; 309; அகநா. 197.
11. மே.ப. 51; குறுந். 287; புறநா. 53.
12. மே.ப. 51; 309.
13. கலித். 28.
14. மதுரைக். 608:11.
15. நெடுநல்; 120; பொருநர்; 6-7.
16. பெரும்பாண். 134:6.
17. புறநா. 82.
18. நற். 40.

19. புறநா. 100; ஐங். 309.

20. ஐங். 104.

21. பெரும்பாண். 86-90; ஐங். 401-402,409.

22. கலித். 100; அகம். 86:11; நற். 380; ஐங். 70; பதிற். 16; மலைபடு. 253-54; மதுரைக். 601-3.

23. நற். 355; புறநா. 68.

24. ஐங். 404; அகநா. 26.

25. மே.ப.நா . 424, 265, 268.

26. நற். 392.

27. புறநா. 159, 160, 164, 211, 44; அகநா, 317; கலித். 99.

28. பரி. 15:46-48; மதுரைக். 461:65.

29. நற். 161, 221.

30. மே.ப.நா ., 40; ஐங். 86.

31. ஐங். 157; குறுந். 359; கலித். 86.

32. குறள். 65.

33. மே.ப.நா . 66.

34. ஐங். 410; அகநா. 167; பட்டினப்.294-7; கலித். 80.

35. புறநா. 188.

36. அகநா. 54; கலித். 80; புறநா, 160.

37. புறநா. 310; நற். 110.

38. கலித். 81, 85; புறநா. 77, 198; குறுந். 148; நற்.269; அகநா. 54.

39. கலித். 80.

40. மே.ப.நா . 108.

41. நற். 250:2-3; அகநா, 54.

42. நற். 212; ஐங். 406, 410.

43. கலித். 80, 86; குறுந். 61; ஐங். 403, 408.

44. ஐங். 202; புறநா. 273, 310.

45. ஐங். 257:1-2.

46. கலித். 50:14; 56:12.

47. ஐங். 384:4.

48. அ. அல்போன்ஸ், உளநலஉதவி, ப. 42.

49. மு. வரதராசனார், குழந்தை, ப. 47.

50. கலித். 82-85; பரி.15:46-48; மதுரைக். 461-65.

51. அ. அல்போன்ஸ், உளநல உதவி, ப. 71.

52. மே.ப. பக். 71-72.

53. ஐங். 384:

54. மே.ப.நா . 385.

55. புறநா. 137:14-15.

56. குறுந். 229.

57. புறநா. 183:7-8.

58. ஐங். 256.

59. நற். 110.

60. குறுந். 156, 33.

61. ஈ.த. இராஜேசுவரி, குழவி உள்ளம். ப. 399.

62. மு. இராசமாணிக்கம், உளவியல் துறைகள், முதல் தொகுதி, பக்.83-86.

63. பட். 22-25; நற். 58, 104; கலித். 80,86; குறுந். 61; சிறுபாண். 56.

64. கலித். 80,86; பட். 294-7; அகநா. 16, 197.

65. அகநா. 54; கலித். 51; புறநா. 160, 310.

66. புறநா. 188.

67. நற். 166, 378; கலித். 51, 86; குறுந். 229.

68. புறநா. 336; குறுந். 394; நற். 95, 168; பதிற். 71; மலைபடு. 337-9.

69. பெரும்பாண். 220-223; மலைபடு. 236; அகநா. 216.

70. நற். 3:3-4.

71. புறநா. 104; பதிற். 78; பரி. 16:7-8.

72. நற். 220; 104; புறநா. 61:8-11.

73. புறநா. 243:8-10.

74. பெரும்பாண். 387.

75. பட். 99-103.

76. மே.ப.ரா . 77; திருமுரு. 194-97; குறுந். 106; 294:2.

77. மதுரைக். 120-124.

78. புறநா. 312:5-6.

79. மே.ப.ரா .94; 322, 324-325, 334; நற். 80, 111; அகநா. 104, 206; புறநா. 32.

80. புறநா. 206:11-12.

81. அகநா. 387:4.

82. பெரும்பாண். 268-271; அகநா. 30, 290; நற். 207.

83. ஈ.த. இராஜேசுவரி, குழவி உள்ளம், ப. 403.

84. பரி. 11:88-89; குறுந். 33; மதுரைக். 227; முல்லைப். 36; அகநா. 104; குறுந். 389.

85. நற். 183:1-7.

86. குறுந். 221.

87. நற். 311 : 3-4.

88. மதுரைக். 520-521.

89. நற். 363.

90. புறநா. 176:1.

91. நற். 68:1.

92. அகநா. 370:1-2.

93. அகநா. 49, 60.

94. நற். 9:8-9.

95. நற். 184, 293; அகநா. 275.

96. அகநா. 240.

97. மதுரைக். 589.

98. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 385.

99. ஐங். 181; கலித். 59; அகநா. 26, 156.

100. குறுந். 31.

101. புறநா. 53:1-3.

102. மே.ப.நூ. 33:16-17; கலித். 56:7.

103. ஐங். 128, 344; குறுந். 48; ஐங். 383; கலித். 28, 76; அகநா. 330; குறுந். 276, 114.

104. ஐங். 375; அகநா. 165.

105. வி.சி. சசிவல்லி, பண்டைத்தமிழர் தொழில்கள், பக். 140, 142.

106. கலித். 57; அகநா. 153; நற். 140; பெரும்பாண்.333-334; அகநா. 275, 219, 17, 153; நற். 324.

107. ஐங். 295; நற். 24.

108. பெரும்பாண். 335.

109. புறநா. 36:4-5.

110. அகநா. 173, 334, 241.

111. அகநா. 17; நற். 305; குறுந். 396; ஐங். 377.

112. தொல். பொருள். பேராசிரியர் உரை - மெய்ப்பாட்டியல் நூற்பா. 249, ப. 1.

113. ஐங். 73-74.

114. பரி. 10: 35-40.

115. நற். 53, 68, 339, 358.

116. அகநா. 201; புறநா. 63; ஐங். 100.

117. பரி. 11 : 80-92.

118. ஐங். 84 : 3-5.

119. நற். 80 : 4-8.

120. நற். 22 : 6-7.

121. எஸ். வையாபுரிப் பிள்ளை, 'தைந்நீராடல்' - இலக்கிய விளக்கம், கட்டுரை எண். 9.

122. நற். 206; ஐங். 311, 366, 396, 383; நற். 173.

123. கலித். 113; நற். 143, 27, 191.

124. ஐங். 294.

125. கலித். 116 : 5-9.

126. அகநா. 368, 372; 20, 385.

127. ஐங். 23, 197; நற். 106, 123, 363; பட். 101; அகநா. 20; குறுந். 316, 401, 303.

128. நற். 356, 143; அகநா. 254, 369.

129. ஐங். 375 : 2-3.

130. நற். 179, 305; அகநா. 165, 369; குறுந். 361.

131. நற். 331, 372; புறநா. 116.

132. நற். 68 : 1-3.

133. நற். 134, 206; குறுந். 291; அகநா. 28;

குறுந். 141; ஐங். 289.

134. நற். 376, 389, 351.

135. கலித். 111, 109; புறநா. 33; ஐங். 47-48.

136. கலித். 108 : 31-33.

137. பதிற். 71; அகநா. 393; 141.

138. கலித். 40 : 1-3.

139. நற். 331 : 4.

140. மே.ப.நா . 45 : 6-7.

141. மே.ப.நா . 49 : 3-4.

142. அகநா. 60, 140, 390; குறுந். 269.

143. பதிற். 18; அகநா. 151, 301; நற். 328.

144. அகநா. 126 : 11-12.

145. நெடுநல். 152-156.

146. அகநா. 250 : 1-2.

147. மதுரைக். 561-583.

148. நற். 97, 118; மதுரைக். 409-413; நற். 298; அகநா. 98; பதிற். 51; புறநா. 259; அகநா.157, 245; புறநா. 125, 326; நற். 353; பட். 245-246; அகநா. 383; நற். 90; புறநா. 311; அகநா. 387; குறுந். 330.

***

3. தாயும் மகளும்

3.1 அக இலக்கியங்களில் தாயும் மகளும்

3.2 புற இலக்கியங்களில் தாயும் மகளும்

3.3 தாயின் தவநிலைச் செயல்கள்

***

## 3.1 அக இலக்கியங்களில் தாயும் மகனும்

உலகில் உயிர் என்று ஒரு பொருள் தோன்றி உலவத் தொடங்கிய காலம் முதல் உலகில் தோன்றி உலவுவது தாய்மையெனும் உணர்ச்சியாகும். ஈரைந்து திங்கள் தன்னுள் கருவினை வளர்க்கும் தாய், தன் உடல் நலத்தைக் குறைத்து, அதற்கோர் உருவத்தைக் கொடுத்து உலகத்தில் படைக்கின்றாள். உடல்களைப்பும், உள்ளத்துடிப்பும் சேர்ந்து உயிர்சென்று மீளும் நிலை, தாயினைப் பெரிதும் துன்பப் படுத்தும். மறுபிறவி அடைவது போன்ற துன்பத்தை மகப்பேறு தருகிறது. எனினும் தன் உடலின் ஒரு கூறாய், உயிரின் மறுபதிப்பாய்த் தோன்றிய குழந்தையைக் கண்டதும் தாயின் உள்ளம் கொள்ளை இன்பம் கொள்கிறது. அவ்வின்பத்தின் எல்லையை,

"ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும்"[1]

என்ற சொல்லால் குறிப்பிடுகிறார் திருவள்ளுவர்.

### புதல்வன் பிறப்பு

அக இலக்கியங்களில் மகன்பிறப்பு சிறப்பிடம் பெறுகிறது. குடிக்கு விளக்கான புதல்வனது பிறப்பால், தாய் 'மனைவிளக்கு' எனச் சிறப்பிக்கப்-படுகிறாள். புதல்வன் பிறப்பு கணவர்க்கு உவப்பு தருகிறது. முதன் முதலில் குழந்தையைத் தாங்கி நிற்கும் சூல், கடுஞ்சூல் எனப்படுகிறது. கடுஞ்சூல் உற்ற பெண்கள் முன்பைவிட தங்கள் கணவரோடு கணப்பொழுதும் பிரியாதுறைய விரும்புவர். குழந்தை பிறந்ததும் கணவன் வந்துபார்த்து உவக்க வேண்டும் என்பதால், தலைவன் பொருள்வயிற் பிரிய நினைப்பதைத் தவிர்க்க வேண்டுகிறாள் தோழி.

"நின்னயந் துறைவி கடுஞ்சூல் சிறுவன்
முறுவல் காண்டலி னினிதோ
இறுவரை நாடநீ யிறந்துசெய் பொருளே"[2]

என்பதில் உள்ள உண்மையை உணர்ந்து தலைவன் தன் செலவு தவிர்கிறான். கருவில் உள்ள குழந்தையை ஆண் என்றே கருதி ஐங்குறுநூற்றுத் தோழி 'சிறுவன்' என்று குறிப்பது உலக வழக்கத்தில் தொன்றுதொட்டு வருகிறது. ஆண் குழந்தைப் பிறப்பையே எக்காலத்தும் அன்னையர் வரவேற்றிருக்கின்றனர் என்பதும் இதனால் புலப்படும்.

"குடும்ப இன்பங்களே குவலயம் தரும்
இன்பங்களில் தலைசிறந்தவை குழந்தைகளிடம்
பெற்றோர்க்குள்ள ஆனந்தமே, மனித இனம்
அறிந்த ஆனந்தங்களிலெல்லாம் புனிதமானது."

என்கிறார் அறிஞர் கார்லைல். வளரும் குழந்தையின் மழலை, குறுநடை, விளையாட்டுக்களைக் கண்டு தாய் மனம் பெரிதும் உவகை அடைகிறது. ஆலமர் செல்வன் அணிவிறல் போல, மகன் தேரில் வருவதும், நடைதேர் கொண்டு, சிற்றில் சிதைப்பதும் கண்டு மகிழ்கிறாள். 'அத்தத்தா' என்னும் மகன் மழலையையும், ஆடிவரும் குறுநடையையும் தந்தையுடன் தாயும் கண்டு, இன்பம் அடைகிறாள். மாதர் உண்கண் மகன் தந்தைமார்பில் ஏறி விளையாடலைக் கண்டு தாய் அடையும் மகிழ்வுக்குத் தேவர் உலகும் ஈடில்லை.

பரத்தையர் – பிரிவு – வாயில்

மகிழ்வைத் தரும் மகன் பிறப்பு, கணவன் பரத்தைநாடும் செயலால், தாய்க்குத் துயரும் தருகிறது. சங்க இலக்கியத்தில் கற்பில் பரத்தையர்பிரிவுப் பாடலே மிகுதி எனலாம். 'அன்னையின் வாழ்வுக்கு நங்கூரமாய் அமைவது அவள் குழந்தைகளே' என்கிறார் ஜோ.ஃபாக்லஸ் என்னும் அறிஞர்.

பரத்தையர் என்னும் அலைவீச்சால் தாயின் வாழ்வு ஆடும் கப்பலாகிறது. பரத்தையர் உருவாகும் காரணமாக,

> "திருமண வாய்ப்பு இல்லாத வரைவின் மகளிர்
> எனும் பொதுப்பெண்டிர் கூட்டம் வீரயுகசமுதாயத்தின்
> ஒருதனி அங்கமாக உருப்பெறத் தொடங்கியது."[3]

என்கிறார் ஆய்வறிஞர் ஜான்சாமுவேல். சமுதாயத்தில் செல்வச் செழிப்பு காரணமாக உயர்குடி மக்களிடையே ஏற்பட்ட பலவகையான ஒழுக்கக் குறைபாடுகளில் பரத்தையர் ஒழுக்கம் ஒன்றாகக் கருதப்படுகிறது.

களவில் தலைவியை மிக நேசிக்கும் தலைவன், மணமுடித்துத் தலைவி கருவுற்றதும் பரத்தையை நாடுகிறான். தலைவி பொறையுயிர்த்து விடுத்த வெள்ளணி கண்டு 'தந்தைபெயரன்' பிறந்தான் என்று தலைவன் வீடுவருகிறான். புதல்வன் தாய் என்று மனைவியை நேசித்து அவளுடன் நல்வாழ்வு நடத்தும் தலைவனைப் பரத்தை இகழ்கிறாள்.

> "கையும் காலும் தூக்கத் தூக்கும்
> ஆடிப் பாவை போல
> மேவன செய்யும் தன் புதல்வன் தாய்க்கே"[4]

என்னும் அவள் கூற்றில் மகப்பெற்றதால் தாய் மீண்டும் அடைந்த சிறப்பு புலப்படுகிறது. ஆயினும் மகன்பிறக்க, பூப்புக்காலத்தில் தலைவனை இல்லத்திற்கு அனுப்பி வைத்ததும் தானே என்று பெருமை பேசும் பரத்தை, மீண்டும் அவனைக் கவர்ந்து கொள்கிறாள். மகப்பெற்று நலம் குறைந்துள்ள தாயால், தலைவனின் காமஉணர்வை ஈடுசெய்ய முடிவது இல்லை. புதல்வன் பெற்றதால் தான் முதுமை அடைந்ததே, தலைவன் பரத்தையை நாடக்காரணம் என நினைக்கிறாள். தன்னைவிடப் பரத்தை அழகும், இளமைநலமும் உடையதாய் இருப்பதால்தான் பரத்தையைத் தன் கணவன் விரும்புகிறான் எனக்கருதி,

"நீ வெய்யாளோடு"

"நின் வெங்காதலி"[5]

என்று அவளைக் குறிப்பிட்டு ஊடுகிறாள்.

கணவனின் பரத்தமையைத் தாயால் தடுக்கமுடிவது இல்லை. அவள் நிலையை,

"அளவுமீறிய பரத்தை ஒழுக்கமுடைய ஒரு தலைவன்; அவனைத் தடுத்துத் திருத்தமுடியாத ஒரு மனைவி; அவளுடைய நிலைக்காக வருந்தும் ஒரு தோழி ஆகியோரைக்கொண்ட ஒரு குடும்பத்தின் சித்திரம் சங்க இலக்கியங்களில் காணப்படுகிறது."[6]

என்று சாலினி இளந்திரையன் குறிப்பிடுகிறார். பரத்தையும் தலைவிக்கு இணையான இன்னொரு தலைவி போல நடந்துகொள்ளத் தலைவன் உரிமை அளிக்கிறான்.

தலைவனிடமிருந்து கையுறையாகத் தழையாடை பெற்ற பரத்தை அதை அணிந்து தலைவி அறியவேண்டி அவள் தெருவில் நடமாடுகிறாள். தலைவியின் உரிமையும் உணர்வும் பரத்தைக்கும் இருக்கிறது. சில வேளைகளில் தலைவன் அவளைத் திருமணமும் செய்து கொள்கிறான். பலரறியும்படி மணமுரசு கொட்டி, துணங்கைக் கூத்து நடக்க, அவளைத் தன்மனைக்கே அழைத்தும் வருகிறான். தலைவி போலவே ஊடல் கொள்ளும் உரிமை பெற்றுள்ள பரத்தையைப் "பரத்தைத் தலைவி" என்றே ஐங்குறுநூற்றுப் பழைய உரைகாரர் குறிப்பிடுகிறார்.[7] இந்நிகழ்வுகள் குழந்தை பெற்றுள்ள தாய்க்கு மிகுந்த வேதனையைத் தருகிறது.

தலைவியின் புதல்வன்மீதும் பரத்தை உரிமையுடன் பாசம் காட்டுகிறாள். முத்தமிட்டு, அழகுபடுத்தி, அவன் நகைமுகம் காண்பதில் இன்பம் அடைகிறாள். அதைத் தலைவி மறுப்பதில்லை.

"தந்தை காமுற்ற தொடக்கத்துத் தாய்"
"வேற்றுத் தாயர்"
"நின்மகன் தாய்"[8]

என்று குறிப்பிடும் அளவு அவள் மற்றொரு தாயாக உரிமை தரப்படுகிறாள். தலைவனைக் கவர்வதில் இருவருக்கும் ஏற்படும் போட்டியில் அவனை மணப்பதன் மூலம் சிலநேரம் பரத்தை வெல்கிறாள். தலைவனே மனம்மாறி மீண்டுவரும் பொழுதுமட்டுமே தலைவி வெல்கிறாள். உலகியல் குறித்தும், புதல்வனைப் பெற்றதால் ஏற்பட்ட குடும்பப் பொறுப்பு கருதியும் தலைவி விட்டுத்தந்து வாயில் நேர்வதால் அதுவும் தாய்க்கு வெற்றியாகக் கருதப்படுவது இல்லை.

"யாணர் ஊரநின் மாணிழை மகளிரை
எம்மனைத் தந்துநீ தழீஇயினும் அவர்தம்
புன்மனத் துண்மையோ அரிதே; அவரும்
பைந்தொடி மகளிரொடு சிறுவர்ப் பயந்து
நன்றி சான்ற கற்போடு
எம்பா டாதல் அதனினும் அரிதே."[9]

என்று புதல்வனைப் பயந்து பேய்போலத் தோன்றினாலும், அதன் காரணம்காட்டி எத்தனை பரத்தையரைக் கணவன் மணந்தாலும், குழந்தை பெறும் உரிமையும், நன்றிசான்ற கற்பும் தனக்கு மட்டுமே உரியது என்று தாய் கூறி ஆறுதல் அடைகிறாள். இருப்பினும், தலைவனின் காம உணர்வை அறிந்து வைத்திருப்பதால் மீண்டும் அவனைத் தன்பால் இழுத்துக்கொள்ள முடியும் என வஞ்சினம் உரைக்கும் பரத்தையால் தாயின்மனம் அமைதி இழக்கிறது.[10]

புதல்வன் வாயிலாதல்

தான் பிறந்ததால் தாயிடமிருந்து தந்தையைப் பரத்தையர் பிரிவு ஏற்படுத்திய புதல்வனே மீண்டும் அவர்கள் ஒன்று சேர வாயிலாக அமைகிறான்.

பிரிந்து சென்ற தலைவனை நினைந்து வருந்தும் தாய்க்கு மகன் பெரிதும் ஆறுதலாகிறான். தந்தையைப் பிரிந்த குழந்தையை அணைத்து அவனையே தனக்கு 'எந்தாய்!' என்கிறாள் தாய். பாலூட்டும்போது மகனிடம் "தந்தையை அழகில் ஒத்தாலும், குணத்தில் ஒவ்வாதே!" என அறிவுறுத்துகிறாள்.[11]

பரத்தையை மணம் செய்யத் தலைவன் அலங்கரித்துத் தேரில் வருகிறான். தெருவில் தந்தையின் தேரோசை கேட்டு ஓடிவரும் மகன் தேரைத் தடுக்கிறான். மேற்செல்ல இடமில்லாது இறங்கும் தலைவன், மகனை எடுத்தணைத்து இல்லம் திரும்புகிறான். மகனால் மனம்மாறி பரத்தை மணம் தவிர்கிறான். இதை அறிந்த அன்னை, சிறுகோல் எடுத்து மகனை அடிக்க வருகிறாள். தந்தை அவளைத் தடுக்க, இருவரும் மகனால் ஒன்று சேர்கின்றனர்.[12]

மீண்டுவரும் தந்தை மார்பில் தாவும் மகனே தாய்க்கு வாயிலாகிறான். பரத்தை மாட்டு வேனில் புனலன்ன தந்தை, தாயிடம் சிறிதும் ஈரம் அற்றவனாய் இருப்பினும், தாய் மகனால் ஊடல் தணிகிறாள். தலைவன் பிரியின் வறுமையால் புதல்வன் முலைக்கு அழ நேரிடும் என்ற அச்சம் தாய்க்கு இருந்தது. உயர்குடிப் பிறப்பும், சமுதாய அச்சமும் உடைய தாய், சிறுவனைப் பெற்ற காரணத்தால் கணவனை ஏற்றாக வேண்டியிருந்தது.

"மல்ல லூர னெல்லினன் பெரிதென
மறுவருஞ் சிறுவன் றாயே
தெறுவ தம்மவித் திணைப்பிறத் தல்லே"[13]

என்று தண்ணந் துறைவன் கொடுமையைத் தன்னிடமும் கூறாது நாணும் தலைவியின் பண்பு கருதி வியக்கிறாள் தோழி. தாய்த்தன்மைமிக்க தலைவி, தலைவனை ஏற்றுக் கொண்டதால் "யாயாகியளே விழவு முதலாட்டி"[14] என்றும்

பாராட்டப்படுகிறாள். புதல்வனைப் பெற்று மனையில் விளங்கும் தாய்க்குத் தலைவனே தாயாக இருந்தான். அதனால் பொருள் வயிற்பிரியக் கருதும் தலைவனை நோக்கித் தாய் புதல்வனை அணைத்து அழுதால், தந்தை செலவு தவிர்க்க நேருகிறது. எந்தப் பிரிவாய் இருப்பினும் மகனையும், தாயையும் நினைந்து தந்தை விரைந்து வீடு திரும்புகிறான்.

"பூங்கண் புதல்வன் தூங்குவயின் ஒல்கி
வந்தீக எந்தை என்னும்
அந்தீம் கிளவி கேட்க நாமே"[15]

என்று வினைவயிற் பிரிந்த தந்தை ஆவலுடன் வந்துசேர, அன்னை அகமகிழ்கிறாள்.

தலைவன் மீண்டுவரத் தானே ஏதம்வாயில் இன்றி தலைவி ஏற்றுக்கொள்ள, அதற்குரிய காரணமாக,

"அன்னையும் அத்தனும் அல்லரோ தோழி
புலவியஃ தெவனோ வன்பிலங் கடையே"[16]

என்று கூறுகிறாள். என்றும் பிரிதற்கு அரிய தொடர்புடையதாதல் பற்றி அன்னை எனவும், ஆணைக்கு அடங்கி ஒழுகுதல் பற்றி அத்தன் என்றும், தன் கணவனைப்பற்றி மனைவி உரைக்கிறாள். காதலன் காதலிக்கு இடையேயான உழுவலன்பு இல்லாத இடத்தில் ஊடலுக்கும் வாயிலுக்கும் இடமில்லை என்பது அவள் கருத்து. அன்னை, தந்தையர் போன்று உபசரிக்கத்தக்கவர் தன் கணவர் என்னும் அவள் கூற்றில் ஆற்றாமை தொனிக்கிறது.

வளர்ப்பில் அன்னையின் பங்கு

குழந்தைகள் நன்முறையில் வளர்க்கப்பட வேண்டும் என்பதும் அன்னை வளர்ப்பே பிற்காலத்தில் அவரை நல்லவராகவோ, அல்லவராகவோ மாற்றுகின்றது என்பதும் சமுதாயக்கருத்து.

"குழந்தையின் எதிர்கால வாழ்வு, அன்னையின் ஆக்கம்"

என்று நெப்போலியனும்,

"நான் இன்று இருப்பதற்கும், இனி எய்த இயலும் என்று
எதிர்பார்ப்பதற்கும் நான் கடமைப்பட்டிருப்பது என்
அன்னை என்னும் தேவதைக்கு!"

என்று ஆபிரகாம் லிங்கனும் அன்னை வளர்ப்பின் அருமைபற்றிக் குறிப்பிட்டுள்ளனர். குழந்தைக்கு நல்லன கூறி, அல்லன கடிந்து வளர்த்தல் தாயின் கடமை பிற்காலத்தில் தலைவனை இடித்துரைக்கும் தோழி,

"தந்தையும் யாயுந் கடியரோ நின்னே"[17]

என்று கேட்கிறாள்.

<u>திருமணத்தில் தாயும் மகனும்</u>

வளர்ந்து வாலிபன் ஆனபின் தாயின் துணையோ, ஆலோசனையோ மகன் அதிகம் எதிர்பார்ப்பது இல்லை.

"யாயும் ஞாயும் யாரா கியரோ"[18]

என்று காதலியின் முதல் சந்திப்பில் உறவுமுறை இல்லாத தன்மையிலும் காதல் நேர்ந்தது குறித்து வியக்கிறான் காதலன். முறையாகப் பெற்றோர் வந்து மணம் பேசி வரைவும் செய்துகொள்கிறான். அவ்வாறு மணம் நடக்காத உடன்போக்கு செல்லும்படி ஏற்படின் அது நல்லமகனுக்குரிய பண்பாகப் பெண்ணைப் பெற்றதாய் ஏற்பது இல்லை. அதற்காக மகனைப் பெற்ற தாயே கண்டிக்கப்படுகிறாள்.

மனங்கவரும் வண்ணம் தன் காதலியை வளர்த்து ஆளாக்கிய தாயை,

"திண்டேர்ப் பொறையன் தொண்டி
தன்திறம் பெறுக இவள்ஈன்ற தாயே"[19]

என வாழ்த்துகிறான் மருமகன். அவன் மெச்சுகின்ற மாமியாரோ, உடன்போக்கில்

மகளை அழைத்துச் சென்றுவிடும் குற்றத்திற்காக, மகளைப் பெற்ற தாயையே திட்டுகிறாள்.

"நினைத்தொறும் கலிழு மிடும்பை எய்துக
... ... ... ...
வெஞ்சுர மென்மக ளுய்த்த
வம்பமை வல்வில் விடலை தாயே"[20]

"பெருவிதுப் புறுக மாதோ எம்மிற்
பொம்மல் ஓதியைத் தன்மொழிக் கொளீஇக்
கொண்டேன் போக வலித்த
வன்கட் காளையை ஈன்ற தாயே"[21]

என்று மகள் செயலைத் தாய்மேலேற்றி, மகளது தாய் மகனது தாயைச் சாடுகிறாள்.

வளர்ந்த மகனுக்கு அறிவுரை கூறித்திருத்த முடியாத நிலையில் உள்ள தாய், முறையாக மணம் இன்றி மகனால் அழைத்துவரப்படும் பெண்ணை மறுக்கமுடிவதில்லை. அவளை அன்போடு ஏற்றுத் தன் பெண்ணாகவே எண்ணிச் சிலம்பு கழி நோன்பு நடத்துகிறாள். அப்போதும் மகளைப் பெற்றதாய், "சிலம்பு கழித்தாலும் வதுவை மணம் தன் இல்லத்தில் நடக்கப் பொய்வல் காளையை ஈன்ற தாய் ஒப்புதல் தருவாளோ?"[22] என்று தாயை அவளது மகன் செய்த செயலுக்காகப் பழிதூற்றுகிறாள். பொறுமையுடன் எல்லாவற்றுக்கும் தலைசாய்த்து மகனுக்காக ஏற்றுக் கொள்கிறாள், அன்னை.

மகன் மனங்குளிர மனையை அலங்கரித்து பலர்பாராட்ட நன்முறையில் வதுவை மணம் நடத்துகின்றாள் தாய். திருமணச் சடங்குகளிலும் பெண்ணை மங்கல நீராட்டி மணவாழ்த்து உரைப்பவராகப் புதல்வர் பெற்ற தாயரே முன்நிற்கின்றனர். சிறந்த மகனாய் இருப்பவன் திருமணம் நடந்து முடிந்ததைத் தோழி மூலம் மகளைப்

பெற்றவர்க்குச் செய்தி சொல்லி அனுப்புகிறான். வதுவை செய்துகொண்டதால் இனியது என்றும், நந்தை வாழியர் என்றும் பாராட்டும் தோழி,

"வரைந்தனை நீயெனக் கேட்டியான்
உரைத்தனென் அல்லெனோ அஃதென் யாய்க்கே"[23]

என்கிறாள். மறுதரவில் மகளையும் மருமகளையும் பெண் வீட்டுக்கு அனுப்பிவைத்து மகிழ்வுறச் செய்யும் தாய் பாராட்டப்பெறுவது இல்லை. மகன் சிறந்திருப்பின் தந்தையைப் போற்றுவதும், கொடியவனாய்த், தீயவனாய் இருப்பின் தாயைக் குறைகூறுவதும் வளர்ப்புத்தன்மை குறித்து எக்காலத்தும் மாறாத நியதியாய் இருந்து வருவதை இங்குக் காணமுடிகிறது.

<u>தாயின் கூற்று இடம் பெறாமை</u>

திருமணத்திற்குப் பின் மகன், மருமகளுடன் இணைந்து வாழ்ந்ததாகத் தாய் பெறும் இடத்தை அக இலக்கியக் குடும்பச் சித்திரங்களில் காணமுடியவில்லை. பெயரன் பிறக்குமுன்பும், பிறந்தபின்பும் மகன் பரத்தையை நாடி அல்வழியில் நடக்கும்போது கடிந்து திருத்தவும், வாயிலாகச் செயல்படவும் தாய் முயன்றதாகக் காட்டப்பெறவில்லை. வளர்ந்த இளைஞனின் தாயின் கூற்று அக இலக்கியங்களில் இடம்பெறாமைக்கு உளவியலும் காரணமாகிறது. உளவியல் நுணுக்கங்களை வெளிப்படுத்தும் உணர்வுகளையும், அகமாந்தர்களையுமே சங்கக்கவிஞர்கள் முன்னிலைப்படுத்தியுள்ளனர். உணர்வு முரணைப் புனைய வாய்ப்பு இல்லாததால் புதல்வி, தலைவனின் தந்தை, தாய், உடன்பிறந்தோர் விலக்கப்பட்டிருக்கலாம் என்று கருத இடமுண்டு.

"தலைவியின் இனிய இல்லற வாழ்வுச் செய்திகள் செவிலியால் தாய்க்குத் தெரிவிக்கப்படுதல் போலப் பரத்தையிற் பிரிவு பற்றிய செய்தி தாய்க்குத் தெரிவிக்கப்படும் மரபு இல்லை. அதில் தாய், தமரின் தலையீடு, முரண்பாடுகளைச் சமுதாயப் பார்வைக்குக் கொண்டுசென்று விகாரப்படுத்தி நிற்கும்.

தலைவனின் ஒழுகலாற்றைச் சமுதாயச் சிக்கலாக்குவது, தலைவனின் பரத்தமை ஒழுக்கிற்குப் பழிவாங்குவதாக அமையும். அச்சூழலில் இனிய ஊடல் உணர்வு தோன்றாது. இதனால் பரத்தையிற் பிரிவில் கவிஞன், தாய், தமரைத் தவிர்த்திருக்கலாம்."[24]

என்னும் டாக்டர் ஆ. இராமகிருஷ்ணன் ஆய்வுரையும் ஏற்கத்தக்கதாக அமைகிறது.

மக்களின் வளர்ப்பில் வேறுபாடு

புதல்வன் வளர்ப்பிலும் புதல்வி வளர்ப்பிலும் தாய் வேறுபாடு காட்டுவதும் காணப்படுகிறது. புதல்வியை முன்னும், புதல்வனைப் பின்னும் பெற்றுள்ள குறுந்தொகைத் தாய் களவில், இரவுக்குறியில் மகள் தலைவனைச் சந்திக்க எழும்போது விழித்துக் கொள்கிறாள்.

புலிப்பல்தாலி அணிந்த இளஞ்சிறுவனான மகனை அணைத்துப் படுத்திருப்பினும், 'அன்னாய்' என்னும் குரல் கொடுத்து மகள் வெளிச்செல்வதைத் தடுத்துவிடுகிறாள்.[25] எந்நேரமாயினும் வெளிச்செல்லும் உரிமை ஆணுக்கே இருப்பதை எண்ணும் மகள், புதல்வனுக்கே அவள்தாய் என்பதுபோல் நடந்துகொள்வதாகவும் கருதி, தனது நிலையை நொந்து கொள்கிறாள். ஆயின் பெற்றதாயோ தாய்மை அன்பில் கனிந்து அனைத்து இளைஞரையுமே தனது மகனாகக் கொள்ளும் தன்மையள் என்று கலித்தொகை காட்டுகிறது.

தன்வீடு வந்து மகனை உண்ணும் நீர் கேட்கும் இளைஞன், அவள் காதலன் என அறியாதவள் குறிஞ்சிக் கலிகாட்டும் அன்னை. "உண்ணுநீர் விக்கினான்" என மகள் கூறவும், மெல்ல அவன் முதுகைத் தடவித் தந்து ஆறுதல் படுத்துகிறாள்.[26] 'பெற்றால்தான் பிள்ளையா?' என்னும் பழமொழி, பெறாவிட்டாலும் பிள்ளையே என்ற தாயின் உணர்வைக்காட்டுகிறது.

மகனது திருமணத்திற்குப்பின் அவனது வாழ்வில் அதிகம் தலையிடாதவளாகவே தாய் இருக்கிறாள். கணவன் அல்லது மகள் துறவு கொள்ளும்போது அவனுடன்

துறவும் மேற்கொள்ளச் செல்வதற்குரியராகத் தொல்காப்பியத்தில் நச்சினார்க்கினியர் தம் உரையில் தாயையும் குறிப்பிடுகிறார். எனினும் சங்க அகப் பாடல்களில் அதற்குரிய சான்றுகள் இல்லை. அக இலக்கியத்தில் மகளது நற்றாய், செவிலித்தாய் போன்று மகன்தாய் அதிகம் குறிப்பிடப்படாமைக்கு வீரநிலைக் காலமாக இருத்தலாலும், கணவனுக்குப்பின் மகனின் குடும்பத் தலைமை-யைத் தாய் ஏற்று அமைதி அடைதலும் காரணமாக இருக்கலாம்.

## 3.2 புற இலக்கியங்களில் தாயும் மகனும்

### மகன் பிறப்பு

காதலும் வீரமும் களங்களாய்க் கொண்ட சங்ககாலத்தில் வீரத்தை வெளிப்படுத்தும் புற இலக்கியங்கள் புதல்வனின் இன்றியமையாமையை உணர்த்துகின்றன.

"பொறையிலா அறிவு போகப் புணர்விலா இளமை மேவத்
துறையிலா வனச வாவித் துகிலிலாக் கோலத் தூய்மை
நறையிலா மாலை கல்வி நலமிலாப் புலமை நன்னீர்ச்
சிறையிலா நகரம் போலும் சேயிலாச் செல்வ மன்றே"[27]

என்று சேயே சிறந்த செல்வம் என்கிறது வளையாபதி. 'குழந்தைச் செல்வம் குடும்பத்தின் வளத்தையும் நாட்டின் வலிவையும் வளர்க்கின்றது' என்னும் பிளேட்டோவின் கருத்தைச் சங்ககாலப் பெற்றோர் தாமும் அறிந்திருந்தனர். புற இலக்கியங்களில் தாய் மகன் உறவு வீரம் சார்ந்ததாகவே அதிகம் இடம் பெறுகிறது. ஈன்று புறந்தருதலைத் தன் தலைக்கடனாகக் கருதும் தாயான பொன்முடியார் வீரனாக வளர்ப்பதையே படிநிலைகளாகக் கருதுவதையும் பாடலில் அறிவிக்கிறார். மகன் பிறந்ததும் தந்தை வந்து நோக்கும் மரபைப் புறத்திலும் காணலாம். போர்க்களத்திலிருந்து மகன் பிறந்த செய்தி கேட்டுவரும் அதியமான் நேரே சென்று மகனைக் காண்கிறான். எதிரியை நோக்கிச்

சிவந்தகண் தன் சிறுவனை நோக்கியும் சிவப்பு மாறவில்லை. அவ்வீரனின் மகன் பொருட்டெழுகிக்கும் காதலும் பகையும் எதிரிகளாக அமைந்தன; அவ்வாறு வளர்க்கப்பட்டான் என்கிறார் ஔவையார். பொருளறியாத சொற்கள் ஆயினும் மழலையைப் பெற்றோர் மகிழ்ந்து போற்றுதல் போல அதியமான் புலவர்க்கு வழங்கினான் என்பதும் அவர் கூற்று.[28]

மகன் வளர்ப்பு

சான்றோனாக்குதல் தந்தையின் கடன்; அதற்கு மாட்சிமை மிக்க தாயின் உதவி தேவை. மக்கள் நிறைபண்புடன் வளரத் தாய் துணை நின்றதைப் பிசிராந்தையார்,

"மாண்டவென் மனைவியொடு மக்களு நிரம்பினர்"[29]

என்று ஒப்புகிறார். கொடைத்தன்மையில் சிறந்து விளங்கும் நாஞ்சில் வள்ளுவன் பண்பிற்கு,

"நீவா ழியர்நின் றந்தை
தாய்வாழியர்நிற் பயந்திசி னோரே"[30]

எனத் தாயும் தந்தையும் பாராட்டப்படுகின்றனர். இத்தகு கொடைத்தன்மையைப் புதல்வர்கட்குச் சிறுகுழந்தைப் பருவம் முதலே தாயர் பழக்கிவிடுகின்றனர். வள்ளலை நோக்கி ஆற்றுப்படுத்தப்படும் பாணரும் கூத்தரும் வழியில் உணவுக்கு வருந்தாதவண்ணம் மகளிரால் விருந்திடப்பட்டனர். தத்தம் மக்களைக் கொண்டு முறைசொல்லித் தடுத்துத் தாம் ஆக்கிய வகைவகையான உணவுப் பண்டங்களை மகளிர் அன்புடன் விருந்தாக இட்டனர்.

"தொடிக்கை மகடூஉ மகமுறை தடுப்ப"
"மகமுறை தடுப்ப மனைதொறும் பெறுகுவிர்"[31]

என்னும் அடிகளில் தான் உள்ளே இருந்து தன் பிள்ளைகளைக் கொண்டு பாணரையும்

சுத்தரையும் வரவேற்று, ஒவ்வொருவரையும் பிள்ளை முறையாகப் பார்த்து, உணவூட்டிய தாயின் பண்பு தெரிகிறது. தாயினால் கற்பிக்கப்படும் இப்பண்பினை இளைந்திரையன் தொடர்வதை,

"மகமுறை மகமுறை நோக்கி முகனமர்ந்
தானா விருப்பிற் றானின் றூட்டி"[32]

எனப் பெரும்பாணாற்றுப்படை நவில்கிறது.

தாய் வயிறு வியத்தலும் பழித்தலும்

மக்கள் செயல்கண்டு தாய்வயிறு வியத்தலும், பழித்தலும் மரபு.

"தன்னிய லெழிலி தலையா தாயினும்
வயிறுபசி கூர வீயலன்
வயிறுமா சிலீஇயரவ னீன்ற தாயே"[33]

என்றும், 'நின் முன்னோர் போல நீயும் புகழுடன் வாழ்க' என்றும் மக்கள் நல்லமகனை வாழ்த்துகின்றனர். சான்றோராகப் பெற்றோர் இருந்தும், மகன் தகுதியற்ற செயலைச் செய்தால் அவனைச்,

"சான்றோ ரீன்ற தகாஅத் தகாஅ மகாஅன்"[34]

என்று பழிக்கின்றனர்.

அரசன் குடிகளைக் காத்தற்கும் தாய்சேய் உறவுமுறையே உவமையாகிறது. குழவிகொள்வார் போலக் குடிகளைக் காத்தான் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்பதும்,

"குழவி கொள்பவரி னோம்புமதி"[35]

என அரசனை அறிவுறுத்தலும், அரசனில்லாத நாட்டு நிலைமையை,

"தாயில் தூவாக் குழவி போல
ஓவாது கூஉம் நின் உடற்றியோர் நாடே"[36]

என்பதும் அவற்றை விளக்கும் சான்றுகளாம்.

வறுமையுற்ற தாயும் மகனும்

செல்வத்தாயர் புதல்வனைச் செவிலியர் வைத்துச் சீராட்டி வளர்த்தனர். வறுமையில் உழலும் தாயருக்கு முலைப்பாலும் அற்றுவிடும் நிலையில் புதல்வனுக்கு வேறு பால் வழங்கவும் வகையற்று வாடுகின்றனர். தந்தையை நேரடியாக நோகாது, குழந்தையைத் தேற்ற,

"மறப்புலி உரைத்து மதியங் காட்டியும்
நொந்தனள் ஆகி நுந்தையை யுள்ளிப்
பொடிந்தநின் செவ்வி காட்டெனப் பலவும்"[37]

உரைக்கும் தாயைப் புறநானூறு காட்டுகிறது. பால் இன்மையால் முலைசுவைத்தலை மறந்த புதல்வனுடன் அவன் முகம் நோக்கி அழுத கண்ணீருடன், தந்தை வரவை நோக்கிப் புலவர் பெருங்குன்றூர் கிழார், புலவர் பெருந்தலைச்சாத்தனார் ஆகியோரின் இல்லக்கிழத்தியர் காத்திருந்தனர். சிறுபாணரின் வீட்டில் மகப்பெற்ற தாயரின் நிலையும் இவ்வாறே இருந்தது.

கடுமையான வறுமை நிலையிலும் தாயைக் காப்பாற்றுவது தம் கடமை எனப் புலமைமிக்க சான்றோர் உணர்ந்திருந்தனர். தன்னை ஈன்ற தாய் வயிற்றிற்கு உணவின்றித் தவிப்பதைக் கண்ணால் காண்பதே ஒரு மகனுக்கு நேரிடும் துன்பங்களில் தலையாயது. தான் பசித்திருந்தாலும் மகனுக்கூட்டிப் பார்த்தவள் தாய். அவளது ஈன்ற வயிற்றைப் பசியால் வாடவிடாது காக்க மகனும் துடிக்கின்றான்.

"ஈன்றாள்பசி காண்பா னாயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை"[38]

என்னும் வள்ளுவர் ஈன்றாள் பசி காண்பதை மிக இழிந்தசெயலாகக் கருதுகிறார்.

சான்றோராக விளங்கும் புலவர்கள் வள்ளல்களை நாடிப் பொருள் வேண்டினர். பெரிய யானையைக் காலம் நீட்டித்துத் தருதலினும், வயிறு நிறைதற்குரிய குன்றிமணி அளவு பொருளை விரைந்து தருக என்பதே அவர்தம் வேண்டுகோளாக அமைந்தது.

"வாழு நாளோ டியாண்டுபல வுண்மையிற்
றீர்தல் செல் லாதென் னுயிரெனப் பலபுலந்து
கோல்கா லாகக் குறும்பல வொதுங்கி
நூல்விரித் தன்ன கதுப்பினள் கண்டுயின்று
முன்றிற் போகா முதிர்வினள் யாய்"[39]

என்னும் மகன் தாய்பசி நீக்கத் துடிக்க, தாயோ, மகன் படும் துன்பம் கண்டு "தன் உயிர் இன்னும் போகவில்லையே" என வருந்துகிறாள். குப்பைக் கீரையாயினும் உப்பில்லாமல் சமைத்து மகன் பசி தீர்க்கும் தாயும், தான் பசித்திருப்பினும் ஈன்றாள் பசி காணச் சகியாத மகனும் சங்க இலக்கியத்தில் அழியாச் சித்திரங்களாயுள்ளனர்.

புலவரின் தாய்மை நெஞ்சம்

தான் வேண்டிச் செல்லும் அரசர்கள் பொருள் கொடாராக இருப்பதும் உண்டு. அவனை வன்சொலால் வசைபாடப் புலவர் தயங்குகின்றனர். அவனது குணங்களால் கற்பிற் சிறந்த மனைவி பெறும் குழந்தைகள் பாதிக்கப்படக்கூடாது என மக்களைப் பெற்ற தந்தையாதலின் புலவர்கள் வாழ்த்தியே சென்றுள்ளனர்.

"நோயிலராக நின் புதல்வர்"[40]

"கடவுள் சான்ற கற்பிற் சேயிழை
மடவோள் பயந்த மணிமரு ளவ்வாய்க்
கிண்கிணிப் புதல்வர் பொலிக"[41]

என்ற வாழ்த்தில் புலவரின் தாய்மை நெஞ்சம் புலப்படுகிறது.

தாய் மனம் திரிதல்

தான் பெற்ற மக்களிடத்தில் வேற்றுமை பாராட்டாத பாசம் உடையவள் அன்னை. அத்தகைய அன்னையும் கல்விச் சிறப்பால் மனம் திரிவாள் என்பதைக் கூறவரும் பாண்டியன் நெடுஞ்செழியன்,

"பிறப்போ ரன்ன வுடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலாற் றாயுமனந் திரியும்"[42]

என்கிறார். 'தாயும்' என்ற எதிர்மறை உம்மை எதனாலும் திரியாத, மாறுபடாத அன்பினைக் குறித்துத் தாயின் சிறப்பை எடுத்துக்காட்டுவதாகக் கருதுகிறார்[43] நா. செயராமன்.

மகனது போர்க்கல்வி

ஈன்றுபுறந்தருதல் தன் தலைக்கடனாகக் கருதும் பொன்முடியார் கூறும் அடுத்த கடமைகள் தொடர்ச்சியாக ஒரு மகனைப் போர் வீரனாக்கும் படிநிலைகளாக அமைகின்றன. தந்தை சான்றோனாக்குகிறான்; மன்னன் நன்னடை நல்க, கொல்லன் வேல்வடித்துத்தர,

"ஒளிறுவாள் அருஞ்சம முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே"[44]

என்றபடி ஒரு மகனின் கல்வியும் போர்ப் பயிற்சியும் தொடர்புடையதாகவே அமைகின்றன. அதனால் அக்கால இளைஞர்கள் போர்ப்பயிற்சி பெற, முரண்களரி, போரவை என்னும் பயிற்சிக்கூடங்கள் இருந்துள்ளன. அனைவரும் பாராட்டும்வண்ணம் பயிற்சி பெற்று இளைஞர் தம் திறமைகாட்டும் போர் விழாவைப் 'பூந்தொடை விழா' என்றழைத்தனர்.[45] போரவைக் கோப்பெருநற்கிள்ளி என்னும் இளைஞன் ஆமூர் மல்லனைப் பொருது அட்டு நின்றதைக் கண்டு தம் வளைநெகிழ மயங்கியதைத் தாய் அறியின் அஞ்சுவதாக நக்கண்ணையார் பாடுகிறார்.[46]

களம்புகும் காளைகள்

தந்தையும் தாயும் மறக்குடியினராய் இருந்தலின் புதல்வன் இளம்வயதிலேயே போருக்குரிய பயிற்சி தரப்பட்டான். கிண்கிணி அணிந்த காலில் கழலணிந்து, ஐம்படைத்தாலி களையுமுன்னே நெடுஞ்செழியன் போர்க்குச் சென்றான். கன்னிப் போர் எனினும், பகைவரைப் போர்க்களத்தில் வென்றதுடன், அவர் ஊர்க்கே சென்று அவரைக் கொன்று வெற்றியை நிலைநாட்டியதைப் புறநானூறு காட்டுகிறது.[47] முதல்நாள் தமையனும், அடுத்த நாள் கணவனும் போரில் துறக்கம் எய்த, மறுநாள் போர்ப்பறை கேட்கிறது. ஒரே ஒரு மகனை உடைய மறக்குடி மங்கை அவனை அழைத்து வெள்ளாடை அணிவிக்கிறாள். விளையாடச் செல்லும் பருவத்தில் உள்ள சிறு குழந்தை எனவும் பாராது, தலைவாரி, கையில் வேலைக் கொடுத்து செருமுகம் நோக்கிச் செல்கென விடுக்கிறாள்.[48] இம் மறக்குடி மகளிரின் வீரம் பற்றிய துறை மூதின்முல்லை எனப்பாராட்டப்படுகிறது.

தான் போற்றி வளர்த்த குணங்களைப் பெற்று ஊர் மதிக்கப் புகழுடன் மகன் வாழவேண்டும் என்பதே அன்னையின் அவா. போர்க்களத்தில் வீரம் காட்டித் துறக்கம் புகுவது புகழுக்குரிய வழி. போர்க்களம் சென்றுள்ள மகனின் தாயைநாடி ஒரு நங்கை வருகிறாள். சிற்றில் நற்றூண்பற்றி 'நின்மகன் யாண்டுளனோ?' என வினவுகிறாள். எங்கே இருக்கிறான் எனச்சரியாகத் தெரியாத நிலையிருப்பினும் எங்கே இருப்பான் என்பதில் உறுதியாக இருக்கிறது தாயின் நெஞ்சம்.

"புலிசேர்ந்து போகிய கல்லளை போல
ஈன்ற வயிறோ இதுவே
தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே"[49]

என்ற தாயின் கூற்றிலும், 'தீக்கடை கோல்போலத் தேவைப்பட்ட நேரத்தில் தன் வலிமை முற்றிலும் வெளிப்படும் கனைஎரி போல வெளிப்படுவான்' என்னும் மற்றொரு தாயின் கூற்றிலும் மகனைப் பற்றிய பெருமித உணர்வே புலப்படுகிறது.[50]

முதின்முல்லை மகளிர்

மகன் போரிட்ட அருமையைக் கண்டோர் தாய்க்கு வந்து தெரிவிக்கின்றனர். வயது முதிர்ந்த தாயின் அன்பு மகன், குடப்பாலில் தெறித்த சிறிய மோர்த்துளி போலப் படைவீரர்க்கெல்லாம் தான் ஒருவனே நோயானான். அவ்வாண்மையோன் வீரமரணம் அடைந்து தன் வாள்மிசைக்கிடந்த காட்சியைத் தாயை அழைத்துவந்து காட்டுகின்றனர். நறுவிரை துறந்த நாறா நரைத்தலையுடைய பேரிற்பெண்டான அச்சிறுவனின் தாய், அதைக் கண்டு கலங்கவில்லை. களிறெறிந்து பட்டான் தன்மகன் என்னும் கூற்று தாய்க்கு, இயல்பாகக் கண்ணீரை வரவழைக்கிறது; அத்துடன் ஈன்ற ஞான்றினும் பெரிதான உவகையையும் வரவழைக்கிறது.[51]

நரம்பெழுந்து உலறிய வயது முதிர்ந்த தாயின் மகன் போரில் தோற்று மீண்டான் என்னும் தவறான தகவல் அம் முதியோளுக்கு எட்டுகிறது. தன் சிறுவன் உயிர் பிழைத்தான் என்று மகிழ்வதைவிட்டு, மறக்குடிக்குக் கேடு சூழ்ந்தான் என்றே சினம் அடைகிறாள் அந்த வீரத்தாய்.

"மண்டமர்க் குடைந்தன னாயி னுண்டவென்
முலையறுத்திடுவேன் யானெனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களந் துழவுவோள் சிதைந்துவே றாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே"[52]

மகன் பிறந்தபோது அடையும் உவகையை விடத் தன்மகன் புகழுடன் இறத்தலைக் காணும் உவகை மிக்க தாயரைப் புறநானூறு காட்டுகிறது. பாலூட்டி வளர்த்த மகன் படைக்குச் சென்றான். பால்குடிக்க மறுத்துச் சிறுகோலால் அலைக்கப்பட்டவன் அவ்விளம் சிறுவன். இன்று போரில் அம்புகளால் தாக்கப்பட்டு, அவ்வம்பு தன் புண்ணில் தைத்திருப்பதையே சற்றும் உன்னிலேன் என்று கூறும் அளவு உறுதியாளனாய் மாறி உள்ளான்.[53]

தந்தையும் மகனும் களம்புகுதல்

படைக்குச் சென்ற வீரர்கள் களத்திலிருந்து அனைவரும் திரும்பிக் கொண்டுள்ளனர். நோய்ப்பட்டு, வீரப்புண்பட்டு வந்த வீரர்கள் வீட்டு மகளிர், இரவந்தழையொடு, வேப்பந்தழையையும் வாசலில் சொருகி வைக்கின்றனர். ஐயவியைப் புகைத்துக் காஞ்சிப் பண்பாடுகின்றனர். பாணர்கள் பாட, சிறுவர்கள் துடிகொட்டுகின்றனர். எல்லார் வீட்டிலும் தலைவன் அல்லது மகனை இழந்த ஓலம் கேட்கிறது; அல்லது பேய்வராதிருக்கக் காஞ்சிபாடும், துடிகொட்டும் ஒலி கேட்கிறது. ஒரு வீட்டில் மட்டும் எவ்வித ஒலியும் இல்லை. அத்தாயின் மகன் களத்திற்குச் சென்ற தேர் இன்னும் திரும்பவில்லை. முன்பொருநாள் போர்க்களத்திற்கு சென்ற கணவனின் குதிரை வரவில்லை என்று எதிர்பார்த்திருந்தாள் அந்தத் தாய்.

"புல்லுளைக் குடுமிப் புதல்வற் றந்த
செல்வ னூரும் மாவா ராதே"[54]

என்று கணவனுக்காகக் கவலைப்பட்டவள் இன்று மகனது தேர் தாமதமாக வந்தாலும் வெற்றியுடன் வருவது கண்டு,

"வேந்துடன் றெறிவான் கொல்லோ
நெடிதுவந் தன்றா னெடுந்தகை தேரே"[55]

என்று அமைதி அடைகிறாள்.

கணவனும் மகனும் ஒருசேரப் போரில் இறந்து கிடக்கின்றனர். அதைக் காணும் தாய் உவகையுடன் கண்ணீர் சிந்துகிறாள்.

"எந்தையொடு கிடந்தோரெம் புன்றலைப் புதல்வர்
இன்ன விறலு முளகொ னமக்கென
மூதிற் பெண்டிர் கசிந்தழ"[56]

என்னும் புறநானூற்று வீரத்தாயரை,

"கன்னின்றா னெந்தை கணவன் களப்பட்டான்
முன்னின்று மொய்யவிந்தா ரென்னையர் - பின்னின்று
கைபோய்க் கணையுதைப்பக் காவலன் மேலோடி
எய்போற் கிடந்தானென் னேறு"[57]

என்று புறப்பொருள் வெண்பாமாலையும் காட்டுகிறது. புறம்கொடுத்து ஓடாப் பூட்கையனான மகன் படுகளத்தில் சிதைந்து வேறாகிக் கிடக்கிறான். அச் சிறப்புடையாளனின் தாய்க்கு வாடுமுலையும் ஊறிச் சுரக்கும் அற்புதம் அவனைக் காணும்போது ஏற்படுகிறது.

கணவனிழந்த மகளிர் நிலை

களத்தில் வீரமரணம் எய்திய மகன் துறக்கம் புகுந்தான் என்னும் செய்தி நெஞ்சுக்கு உவப்பே தவிர, வாழ்க்கையில் அது துன்பமே தந்தது. கணவனுக்குப் பின் மகனது ஆதரவில் இருக்கும் ஒரு தாய், அவனையும் இழத்தல் மிகவும் கொடியது. சிறு குழந்தைகளை உடைய இளம் பெண்கள் நிலை அதனினும் கொடியது. போரில் கணவனை இழந்த பெண்டிர் சிலர் உடன்கட்டை ஏறி உயிர் துறந்தனர். குழந்தைகள் பெற்ற தாயரோ அவர்க்காக உயிர்வாழும் கடமையை ஏற்றனர்.

"அருமருப் பெழிற்கலை புலிப்பாற் பட்டெனச்
சிறுமறி தழீஇய தெறிநடை மடப்பிணை
பூளை நீடிய வெருவரு பறந்தலை
வேளை வெண்பூக் கறிக்கும்
ஆளி லத்த மாகிய காடே"

என்னும் புறநானூறு கணவனிழந்த மகளிர் நிலையை மான்மேலேற்றிக் கூறுகிறது. இதற்குப் பழைய உரை,

"அவன் பகைவரைக் கொன்றவழி அவர் பெண்டிர் தம் இளம்புதல்வரை ஓம்புதற்பொருட்டு இறந்துபடாது அடகுதின்று உயிர் வாழ்கின்றார் என்பதோர் பொருள் தோன்ற நின்றது"

என்று எழுதப்பட்டிருக்கக் குறிப்புரை எழுதும் டாக்டர் உ.வே. சாமிநாதையர்,

"பாழான இடங்களில் வேளைச் செடி முதலியவைகள் உண்டாவது இயல்பு. 19-ஆம் அடி முதலியவற்றிற்கு எழுதப்பட்டிருக்கும் இரண்டாவது பொருள் மிக அருமையானது; அது குறிப்பு என்றும், தொனி என்றும் கூறப்படும்"[58]

என்கிறார்.

கழிகல மகளிர்

கணவனை இழந்த மகளிர் ஆளிற் பெண்டிர், கழிகல மகளிர், விதவையர் என்றழைக்கப்பட்டனர். குழந்தைகளை வளர்க்கும் பொறுப்பிற்காக மகளிர் மறுமணம் செய்ததாகச் சங்க இலக்கியம் குறிப்புத் தரவில்லை. விதவையர் மறுமணம் செய்யக்கூடாது என்ற கட்டுப்பாடு குப்தர்காலத்தில்தான் ஏற்பட்டதாக அறிஞர் கூறுவர். அவர்கள் எஞ்சிய வாழ்நாட்களைத் தவத்திலும் துறவு வாழ்க்கையிலுமே செலவிடவேண்டிய நிலை இருந்தது. மரபுக் கண்ணோட்டத்தின்படி ஒரு பெண்ணின் வாழ்க்கையில் எவ்வாறு பிறப்பும், இறப்பும் ஒருமுறைதான் நிகழமுடியுமோ, அதுபோன்றே திருமணமும் ஒருமுறைதான் நிகழமுடியும் என்று கருதினர். ஒரு விதவை தன்னைத்தானே ஒறுத்துக்கொண்டு துறவுவாழ்க்கை வாழவேண்டும் என்றும் கருதப்பட்டது.

"இந்துமத விதிகளின்படி விதவை முகத்திரையிட்ட பெண் துறவியாக உலகத்தையே துறக்க வேண்டும்; தலைமுடியைக் களைந்து, அணிகலன்களை நீக்கி எளிமையான ஆடைகளையே உடுக்கவேண்டும். அவளுடைய வரவு தீய நிமித்தத்தின் அறிகுறி எனக் கருதப்பட்டதால், அவள் குடும்பத்தின் நன்னிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளக் கூடாது.

அனைத்துத் துன்பங்களுக்கும் மேலாக, அவள் கணவனின் இறப்பு அவள் முற்பிறப்பில் செய்த தீமைகளின் விளைவு என்று கருதப்பட்டது." 59

உலகத்தாரால் காலங்காலமாக இவ்வாறு ஒதுக்கப்படும் விதவையர்நிலை இரங்கத்-தக்கதாக இருந்தது. சங்ககால மகளிர் கணவன் இறந்தபின் முன்பிருந்த கவினெல்லாம் வாடத் தம் தொடி கழித்தனர்; எல்லா அணிகலன்களும் கழிந்து கழிகல மகளிராயினர்; தலை மழிக்கப்பட்டனர்; கைம்மை நோன்பு நோற்றனர்.

ஆம்பலின் புல்லரிசியாலான நீர்ச்சோறு, வெள்ளெள் சாந்து, புளிப்பெய்து அட்ட வேளை இலை இவற்றை நெய்யின்றி உண்டனர்; பருக்கைக் கற்களில் பாயும் இன்றிப் படுத்தனர். கைம்மை நோன்பின் கடுமை கருதிப் பூதப்பாண்டியன் தேவி தீப்பாய்ந்தாள்.

பருத்திப் பெண்டிர்

ஏதும் ஆள்துணையோ, எந்தவகையிலான ஆதரவோ அற்ற பெண்டிர் பல வேலைகள் செய்து பிழைத்தனர். அதில் முதன்மையாக பருத்திநூல் நூற்றல் அமைத்தது. அதனால் பருத்திப் பெண்டிர் எனப்பட்டனர்.

"ஆளிற் பெண்டிர் தாளிற் செய்த
நுணுங்கு நுண் பனுவல்" [60]

"பருத்திப் பெண்டின் பனுவல்" [61]

என்பன அவர் பெயரை விளக்கும். Spinster என்ற ஆங்கிலச்சொல் நூற்போரையும், விதவையரையும் ஒருங்கே சுட்டுகின்றது. அதனால் நூற்பு விதவைகட்குரிய தொழிலாக ஆங்கிலேயச் சமுதாயத்திலும் விளங்கிவர்ததாகக் கொள்ளலாம். அவ்வழக்கம் சங்கச் சமுதாயத்தில் இருர்து தொடர்ந்து வருவதை ஆய்வாளர் சி. நாச்சிமுத்து,

> "கைம்பெண் நூல்நூற்றுப் பிழைக்க வேண்டும் என்ற மரபு கொங்கு வேளாளர் ஈமச்சடங்கில் உள்ளது. வெண்சேலை கொடுத்து நூற்புக் கதிரையும் பஞ்சையும் கொடுத்து இதை வைத்துப் பிழைத்துக்கொள் என்கின்றனர்."[62]

எனத் தம் ஆய்வுரையில் எடுத்துக்காட்டுகிறார்.

தற்காலத்திலும் நூற்புத் தொழிலை முதன்மையாய்க் கொண்டு வாழும் நெசவாள மகளிர், பொருளாதார நிலையில் முன்னேற்றம் அடையாமலேயே உள்ளனர். நெசவாள மகளிர்தம் சிக்கல்கள் குறித்து ஆராய்ந்த ஓர் ஆய்வாளர் தம் ஆய்வு முடிவுரையில்,

> "பின்தங்கிய வகுப்பினரான நெசவாள மகளிர் பொருளாதாரச் சுதந்திரம் அற்றவர்களாகவே இருக்கிறார்கள். மாதம் முழுவதும் இடைவிடாது தொழில் செய்யும் வாய்ப்பு நெசவாள மகளிர்க்கு இன்னும் கிடைக்கவில்லை. நெசவுத்தொழிலில் கூலியை உயர்த்துவதன் மூலமும், எவ்விதத் தடையுமின்றி மாதம் முழுவதும் வேலை வாய்ப்புத் தருவதன் மூலமும் நெசவாள மகளிரிடையே பொருளாதார முன்னேற்றத்தை ஏற்படுத்த முடியும்".[63]

என்கிறார். தற்காலத்திலும் சங்ககாலத்திலும் பொருளாதார முன்னேற்றத்தைத் தராத தொழிலாக இருப்பினும் நூற்பு வேலையே பெண்களுக்குரியதாக அமைந்திருந்தது.

கணவன் இறப்பு, தனிமை, உரிய ஊதியம் கிடைக்காத நிலை, வறுமை, உலகின் வெறுப்பு, கைம்மை நோன்பு ஆகிய இத்துணைத் துன்பங்களையும் தாங்கிக் கொண்டு பெண்கள் உயிர்வாழ ஒரே காரணம் அவர்கள் ஈன்றெடுத்த மக்கள்பால், அவர்களுக்கிருந்த கடமை உணர்வே!

மகன் இறப்பில் தாயின் நிலை

> "இந்தியச் சமுதாயத்தில் பெண்கள் குழந்தைப் பருவத்தில் பெற்றோராலும், இளமைப் பருவத்தில் கணவனாலும், விதவை நிலையில் பிள்ளைகளாலும் பாதுகாக்கப்பட வேண்டியவர்கள் என்று நீதிநூல்கள் கூறுகின்றனவே அன்றி, தனித்து வாழும் உரிமைக்குத் தகுதியானவர்கள் என்று அவர்களைக் குறிப்பிடவில்லை." [64]

என்று ஆய்வாளர் குறிப்பிடுவதுபோல மகனுக்காக, மகனைச் சார்ந்து வாழும் பெண்ணின் துயரங்கள், அம்மகனும் இறந்துபடும்பொழுது அதிகரிக்கின்றன. தாயைவிட்டு வெளியே சென்றுள்ள மகன் எதிர்பாராத விதமாக ஓரிடத்தில் இறந்து கிடக்கின்றான். கண்டோர் தாய்க்குச் செய்தி சொல்ல வருகின்றனர். தன் மகன் வளனும், செம்மலும் எமக்கெனநாளும் ஆனாது புகழும் அன்னை, அச்செய்தியைக் கேட்டால் யாங்காகுவள்; அவள் அளியள் என்று இரங்குகின்றனர். [65]

அரசத்தாயர்

அரசகுலத்துப் பெண்டிர்க்கும் இரங்கத்தக்க நிலை வாய்த்திருக்கின்றது. பகைவனின் உரிமை மகளிரைச் சிறைப்பிடித்துத் தம்நாடு கொண்டுவரும் அரசர் சிலர், அவர்களைக் கோயிற்பணி செய்ய ஏவுதல் உண்டு. கொண்டி மகளிர் எனப்படும் அவர்கள் நாள்தோறும் குளத்தில் நீராடி அந்தியில் கோயில்களில் நந்தாவிளக்கு ஏற்றியதைப் பட்டினப்பாலை தெரிவிக்கிறது. [66] போர்க்களத்தில் அரசன் இறக்க, வெற்றிபெற்ற குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், இளங்குழந்தைகளைச் சிறைப்பிடித்தான். யானைக்காலில் வைத்து அவர்களுக்கு மரணதண்டனை தரவும் முனைந்தான். மன்றுகண்டு அழுத புன்றலைச் சிறாஅர், தம்மைக் கொல்ல வந்த யானையைக் கண்டு சிரித்தனர். அவ்வளவு இளம்வயது

மக்களை, காலன் வாய்ப் பறிகொடுப்பதற்கு இருந்த தாயின் துன்பத்தைக் கோவூர்கிழார், அம்மக்களைக் காத்ததன் மூலம் நீக்கினார்.[67] தாய்மை நெஞ்சத்துப் புலவரால் தந்தையை இழந்த சிறுவர்கள் காப்பாற்றப்பெற்றமை, தாய்க்கு அமைதி அளித்திருக்கும் எனலாம்.

கோப்பெருஞ்சோழனின் மக்கள் அவனையே எதிர்த்து அரசுரிமை கேட்டுப் போரிட்டனர். மன்னன் புல்லாற்றூர் எயிற்றியனார் கூற்றில் உள்ள அறம் கருதிப் போர் தவிர்ந்தான். எனினும் மானம் கருதி வடக்கிருந்தான். இறக்கவிருக்கும் தந்தைக்கும் இயல்பறியாப் பிள்ளைகட்கும் இடைநின்ற தாயின்நிலை இருதலைக்கொள்ளி எறும்பு போன்றது என்பதை உய்த்துணரலாம். நட்புகருதிப் பிசிராந்தையாரும், பொத்தியாரும் வடக்கிருந்தபோது அவர்தம் புதல்வர் பொறுப்பும் தாய்க்கே கடமையாக இருந்திருக்கும் எனக் கருதலாம்.[68]

கடவுள் தொடர்பான தாய்-மகன் செய்திகள்

புற இலக்கியங்களில் கடவுள் தொடர்பான தாய்சேய் பற்றிய கருத்துகளும் இடம்பெற்றுள்ளன.

> "தொல்காப்பியர் கூறுகின்ற சேயோன், முருகனாக மட்டும் இல்லாமல், தாய்க்கடவுளின் வழிபாடாக வளர்ந்த பல கதைகளை எல்லாம் ஒன்றுசேர்த்து அந்தத்தாய்க் கடவுளின் பிள்ளையாக மட்டும் வளர்ந்ததன்றி, அந்தத்தாய்க் கடவுள் சிவனின் மனைவி ஆனபோது, சிவனின் பிள்ளையாகவும் பிற குழந்தைத் தெய்வங்களின் வேற்றுப் பெயராகவும் வளர்ந்ததைக் காண்கிறோம்."[69]

என்று தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் கூறுகிறார். தாய்க்கடவுளின் வழிபாட்டில், அத்தாயின் மகனாக முருகனைக்காட்டும் காட்சியைத் திருமுருகாற்றுப்படை,

"மலைமகள் மகனே மாற்றார் கூற்றே
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ
இழையணி சிறப்பிற் பழையோள் குழவி"[70]

என்று நவில்கிறது.

"பைம்பூண் சேஎய் பயந்தமா மோட்டுத்
துணங்கையஞ் செல்வி"[71]

என்று பெரும்பாணாற்றுப்படை தாயையும் மகனையும் போற்றுகிறது. இக்காலச் செயற்கைமுறை கருத்தரித்தல் போன்று முருகன் கார்த்திகை மகளிரிடம் பிறக்கிறான். முருகன் பிறந்தபோது அசுரர்களுடன் சிறந்தோரும் அஞ்சினர். இந்திரனை வென்றதற்கு அக்கினி சேவலும், குபேரன் மயிலும், எமன் ஆடும் முருகனுக்குப் பரிசாகத் தந்தனர்.[72] பெரும்பெயர் முருகனைப் பெற்றதால் சிறப்புப் பெற்ற கொற்றவை போன்று, கருடனைப் பெற்ற வினதையும் சிறப்படைகிறாள். தன் மூத்தாள் கத்தருவின் அடிமையாக விளங்கும் தாயின் அடிமைத்தனையை, அமிர்தம் கொண்டுவந்து தருவதன் மூலம் நீக்கிய மகன் கருடன்.

"வயங்குபூ ணமரரை வௌவிய வமிழ்திற்
பயந்தோ ளிடுக்கண் களைந்த புள்ளினை"[73]

என்று தாயின் அவமானத்தைப் போக்கிய கருடன் பாராட்டப்படுகிறான். இச் செய்திகளைப் பரிபாடல் வழி அறியலாம்.

புற இலக்கியங்களில் தாய் மகனை அதிகம் நேசித்து வளர்க்கிறாள். போர்ப்பயிற்சியில் மகன் சிறந்து விளங்கச் செய்கிறாள். தான் பசித்திருப்பினும் மகன் துன்பப்படச் சகியாதிருக்கிறாள். எக்காரணத்தால் கணவன் இறப்பு நிகழினும், தன் துன்பம் பாராது மகனை வளர்ப்பதில் முழு கவனம்

செலுத்துகிறாள். தான் தவித்துத் தனித்து வாழ வேண்டியிருப்பினும் மகன் வீரமரணம் எய்துதலைப் புகழாகக் கொள்கிறாள். மகனும் தாயிடம் மிக்க அன்புடையவனாக உள்ளான். வயதான மூதாட்டியாகும் வரையிலும், அவளைப் பின்னரும் தன் பொறுப்பில் வைத்துக் காக்கும் கடமை உணர்வு மிக்கவனாக இருக்கிறான்.

## 3.3 தாயின் தவநிலைச் செயல்கள்

### புதல்வனின் இன்றியமையாமை

மங்கலமாகிய மனைமாட்சியின் நன்கலமாவது நன்மக்கட்பேறு. மனிதர் பெறும் பேறுகளில் அறிவறிந்த மக்கட்பேறே மிகச்சிறந்தது என்பது வழிவழி வழங்கிவரும் கருத்து. 'குழந்தை இயற்கையின் படைப்பு' என்பார் கவி தாகூர். குழந்தை குடிக்கு விளக்கு; குலம் விளங்க வைப்பது; இம்மையில் புகழும், மறுமையற்ற சிறப்பும் தருவது என்பன சங்ககாலக் கருத்துகளாய் நிலவின. எழுபிறப்பும் துன்பம் துடைக்கும், பழிபிறங்காப் பண்புள்ள குழந்தையாக மகன் பிறத்தலையே மக்கள் பெரிதும் விரும்பினர். எதிர்காலப் பாதுகாப்பாவான் மைந்தன் என்பதுடன் 'புத்' என்னும் நரகத்தில் இருந்து மீட்பவனும் புத்திரனே என நம்பினர்.

> "தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
> பொன்போற் புதல்வன் பெறாஅ தீரும்"[74]

அரண்சேர்ந்து தம் உயிர்காத்தல் அக்கால அறநியதியாவதும் புகழ்சால் புதல்வன் பிறந்தபின்னரே பொத்தியார் வடக்கிருக்க இசைவு தரப்பட்டதும் தென்புலத்தோர் கடன் இறுக்கும் கடமை குறித்ததே.

> "குடும்பத்தைப் பாதுகாக்கும் நல்ல ஆண்மக்கள் 'பொன்போல் புதல்வர்' எனப்பட்டனர். புதல்வர் பெறாதவர் நாட்டுக்குச் செய்ய வேண்டிய கடமையினைச் செய்யாதவராகவே கருதப்பட்டனர்.

காரணம் காட்டியுள்ளது. குழந்தை பெறாத பெண் 'மலடி' என்றழைக்கப்-படுகிறாள். இப்பட்டம் தவிர்க்கப் பெண்கள் கடவுளை,

"கருவயி றுறுக" என இறைஞ்சுகின்றனர்[77]

"கிழவர் கிழவிய ரென்னாதேழ் காறும்
மழவின் று மல்லற்கேன் மன்னுக"[78]

என வையையாற்றையும் கடவுளாக எண்ணி வேண்டுகின்றனர். கடவுள் அருளாலேயே குழந்தை பிறக்கும் என்பதால் தவம் இருந்தும், தான தருமங்கள் செய்தும் விரதம் காக்கின்ற பெண்களை நாட்டுப் பாடல்கள் காட்டுகின்றன. முற்பிறவியில் செய்த பாவமே இக்குறை என்று நம்பும் மகளிரை,

"மைந்தனும் இல்லாமல் மாபாவி ஆனார்கள்
பிள்ளையும் இல்லாமல் பெரும்பாவி ஆனார்கள்
குழந்தை குரல்கேளாக் கொடும்பாவி ஆனார்கள்"

என்னும் பாடல் காட்டுகிறது. அதை நீக்கச் சாலைபோடல், சத்திரம், மடல் கட்டல், குளம் வெட்டல், கோபுரம் கட்டல் எனத் தங்கள் சக்திக்கேற்றவாறு நன்மைகள் செய்தனர். கண்ணில் கண்ட கோயில் எல்லாம் கை எடுத்துக் கும்பிட்டார்கள்; காணாத கோயிலுக்கும் காணிக்கை அனுப்பினார்கள்; இலையிலே சாதம் உண்டால் என்னதவம் என்று சொல்லித் தரையை மெழுகிச் சாதம் உண்டார்கள் என்னும் பாடல் மேலும்,

"மைந்தனை வேண்டியல்லோ மாளிகை மறந்தார்கள்?
புத்திரனை வேண்டியல்லோ பூமியை மறந்தார்கள்?
அவர்மேல் ஆலம் விழுதோடி அறுகு முறைத்திடவும்
அரகரா என்று சொல்லி அகோரதவம் பண்ணினார்கள்"

என்ற அவர்கள் தவத்தைக் காட்டுகிறது. வட்டிலிலே போட்ட சாதம்

வாரியிறைக்கவும், தண்ணீருக்குப் போகையிலே தடம்மறிக்கவும் பிள்ளை இல்லாத குறை தாயின் நெஞ்சைத் துளைக்கிறது.

"மழைபெய்த வாசலிலே – நான்
மைந்தனடி காணேனே!
மைந்தனடி காணேனே – நான்
மறுகி அழுகிறேனே!"

என்னும் தாயின் வேதனையை உள்ளவாறே நவிலும் நாடோடி இலக்கியம் வாழ்வில் ஒவ்வொரு கட்டத்திலும் மைந்தன் இல்லாக் குறையைத் தாய் உணர்வதை எடுத்துக்காட்டுகிறது.[79]

புத்திரகாமேட்டி யாகம்

பொருள்வளம் மிக்க அரசர்கள் புத்திரன் பிறக்க விரும்பி யாகம் நடத்துதலைப் புத்திரகாமேட்டி யாகம் என்றழைத்துள்ளனர். இராமாயணத்திலும் மகாபாரதத்திலும் தசரதன், துருபதன் போன்றோர் பிள்ளைவரம் வேண்டி யாகம் செய்ததைக் காணமுடிகிறது. அதுபோலப் பெருஞ்சேரல் இரும்பொறை மகனை வேண்டித் தன் தேவியுடன் வேள்வி செய்கிறான். மான்தோலில் அமர்ந்த முனிவர் வழிகாட்டச் செய்த வேள்வி குறித்து,

"கேள்வி கேட்டுப் படிவ மொடியாது
வேள்வி வேட்டனை யுயர்ந்தோ ருவப்பச்
சாறயல் கடுக்குந் தாழிருங் கூந்தல்
வேறுபடு திருவி னின்வழி வாழியர்"[80]

எனப் பதிற்றுப்பத்து சான்றளிக்கிறது. வேள்வியின் பலனாகச் சிறந்த மகனையும் பெறுகிறான் மன்னன்.

"காவற் கமைந்த வரசுதுறை போகிய
வீறுசால் புதல்வற் பெற்றனை யிவணர்க்
கருங்கட னிறுத்த செருப்புகன் முன்ப"[81]

என அவனை வாழ்த்தும் புலவர்,

"வண்மையு மாண்பும் வளனு மெச்சமும்
தெய்வமும் யாவதுந் தவமுடை யோர்க்கென"[82]

என்பதை ஒப்புக்கொள்கிறார்.

குடிகளைக் காத்தற்குப் பொருந்திய அரசின் துறைகளை முற்றுக் கற்ற, வேறொருவர்க்கு இல்லாத சிறப்பு அமையப்பெற்ற புதல்வனைப் பெற்றதாகவும், அதனால் பிதிரர்க்கு அருங்கடன் இறுத்ததாகவும் இச் சேரமன்னன் பாராட்டப்படுகிறான். கடவுள் அருளும், வேள்விகளும் பொய்த்து மகப்பெறாத பெண் சமுதாயத்தால் பெரும் அவமதிப்புக்கு ஆளாகிறாள். மலடியைக் குடும்பத்தவர் மட்டுமன்றி சமுதாயமும் ஒதுக்கி வைத்தனர்.

தாயாகும் பெண்மை

பெண்ணிடம் பிறவியிலேயே தாய்மைக் கூறுகள் உருவாகின்றன. தாய்மை என்னும் உயர்ந்த நோக்குக்காகவே ஒவ்வொரு திங்களும் பெண் உடற்கூறியல் சார்ந்த மாற்றங்களை அனுபவிக்கிறாள். ஒவ்வொரு மாதவிலக்கிலும் ஒரு பெண் உளவியல்படி ஒருவகை அழுத்தத்திற்கும் சோர்வுக்கும் உட்படுகிறாள். அந்தச் சமயத்தில் அவள் விலக்கப்பட வேண்டியவள் - கலந்தொடா மகளிர் - என்று சமுதாயம் கற்பிக்கும் சில பாதிப்புகளுக்கும் ஆளாகிறாள். இவையனைத்தையும் ஒரு பெண் தாய் ஆவதற்காகவே பொறுத்துக் கொண்டு மகவு ஈனத் தவம் கிடக்கிறாள். தன்னில் ஒரு பகுதி ஆகிய மகவைப் பேணும் அந்த இயல்பு,

உடல்சார்ந்து அதற்குரிய வாய்ப்புகள் இல்லை எனினும், அவளிடம் மலராமல் போய்விடுவதில்லை. குழந்தை பெறாவிட்டாலும் கனிவு, இரக்கம், மென்மை ஆகிய பண்புகள் கொண்ட அவளும் ஒரு தாயே என்பதைச் சமுதாயம் ஏற்க மறுக்கிறது.

உறுதியாகக் குழந்தை பிறக்காது என்ற நிலையில் குடும்பத்தாரால் பெண் வெறுக்கப்படுகிறாள். அதிகமாகக் குழந்தையை நேசிக்கும் பெண் மனமுறிவு ஏற்பட்டுப் பைத்தியம் ஆதலும், குழந்தையின்மையால் ஏற்படும் விளைவுகளை எதிர்நோக்கும் வன்மையின்றித் தற்கொலை செய்வதும் வாழ்க்கையில் நடைபெறுகின்றன. குழந்தை பெறாத மனைவி கணவனால் கைவிடப்படுவதையும், வீட்டைவிட்டு வெளியேற்றப்படுவதையும் காணமுடிகிறது.

கணவன் சோர்பு காத்தல்

மனைவியை வெறுத்து ஒதுக்க முடியாமலும் குழந்தையைப் பெறுவதற்கு மிகவும் விரும்பும் நிலையிலும் உள்ள கணவனோடு வாழவேண்டிய பெண் சிந்திக்க வேண்டியவளாகிறாள். தான் மகப்பெறாததால் சமுதாயத்தில் தலைவனுக்கு ஓர் இகழ்வு ஏற்படுகிறது. தான் உயிராய் மதிக்கும் கணவன் ஏறுபோல் பீடுநடை நடக்க வேண்டுமே தவிர, சோர்வுபடக்கூடாது என்பது மனைவியின் எண்ணமாகிறது. மக்கள் இல்லாதோர்க்கு வாழ்நாளில் எந்தப்பயனும் இல்லை என்பதை உணரும் அவள், கணவன் இரண்டாம் திருமணம் செய்யத் தானே வேண்டுகிறாள்; அல்லது கணவன் இரண்டாம் மணம்செய்ய விரும்பும்பொழுது தடைசெய்யாதிருக்கிறாள். அப்படி நடந்த ஒரு திருமணத்தை ஐங்குறுநூறு,

"மயில்க ளாலப் பெருந்தே னிமிரத்
தண்மழை தழீஇய மாமலை நாட
நின்னினுஞ் சிறந்தன ளெமக்கே நீநயந்து

நன்மனை யருங்கடி யயர
வெந்நலந் சிறப்பயா மினிப் பெற் றோரே"

என்ற பாடல்மூலம் குறிப்பிடுகிறது.[83]

பின்முறையாக்கிய பெரும்பொருள் வதுவை

குழந்தைக்காக என்று மணக்கும் பெண்ணும் நல்ல இணையான உயர்குடியினளே. மணம்முடிந்து வரும் அவளை, முதல் மனைவி விளக்கு முதலிய மங்கலப்பொருள்களுடன் சென்று வரவேற்கிறாள். கணவன் விரும்பும் மகப்பேறு இரண்டாம் மனைவியால் கிட்டுவதால் அவள் 'மகன்தாய்' ஆகிறாள். மகப்பேறு அற்ற தன்குறையை, அவள் தீர்த்தலால், முதல் மனைவி தன்நலம் சிறக்க அவள் வந்ததாகக் கருதி வாழ்த்தித் தாய்போல் தழுவிக்-கொள்கிறாள்.

இரண்டாம் மணம் குழந்தைப்பேறு மட்டுமே கருதி நடப்பது அரிது என்பதால் 'அருங்கடி' எனப்படுகிறது. மக்கட்பேறே பெரும்பொருளாதலின் அதற்காகச் செய்யப்பட்டது என்பதால் 'பெரும்பொருள் வதுவை' எனவும் கூறப்படுகிறது. காமமே பொருளாகச் செய்யப்படும் திருமணத்தால் பெறும் குழந்தைகளுக்குத் தந்தைபால் உரிமையோ, அவர்க்குத்தாம் செய்யும் கடமையோ எங்கும் வலியுறுத்தப்படவில்லை. எனவே, இல்லறக் கடமைக்கென அறமே பொருளாகப் பின்னால் செய்யப்படும் இம்மணம் 'பின்முறை ஆக்கிய பெரும்பொருள் வதுவை' எனச் சிறப்பிக்கப்படுகிறது.

மயில்களாகிய கேளிர் உவக்கவும், பெரிய தேனீக்களின் இன்னிசை போல மக்கள் மழலை பேசவும் மாமலையில் பெய்த தண்மழை போலத் தலைவனைத் தழுவி வந்தவள் பின்முறை வதுவையாள். பல்வேறு காரணங்களுக்காகத்

தலைவன் கூடப் பிரிவதுண்டு. என்றும் பிரியாது தன்னுடன் இருக்கும் தங்கையாகிய அவள், கணவனைவிடத் தனக்கே மிகவும் சிறந்தவள் ஆகிறாள்.

> "எதிர்பார்த்திருந்த மக்கட் செல்வத்தை ஈன்று
> கணவன் கருத்தை முற்றுப்பெறச் செய்ததால்
> தலைவி தங்கையாக வந்தவளைச் சிறப்பாகக்
> குறிப்பிட்டு, கணவன் அவளைச் சிறப்புச் செய்து
> ஏற்றது போலத் தானும் ஏற்றுக் கொள்கிறாள்."[84]

என்பார் புலியூர்க்கேசிகன்.

மனையோளின் சிறப்பு

ஒரு தலைவனுக்குக் காமம் காரணமாகப் பல தலைவியர் இருப்பினும் அவருக்கு முதல்மனைவி போன்ற எந்த உரிமையும் வழங்கப் பெறவில்லை. பின்முறை வதுவை ஏற்படும்போது ஒரு தலைவனுக்கு இரு தலைவியர் என்றநிலை ஏற்படுகிறது.

"தலைவியர் இருவர் என்னும் கருத்து அகப்பொருள் மரபுக்கு மாறானதாகும். காமக்கிழத்தி 'மனையோள் ஒத்தவளே' அன்றி மனையோளாதல் இல்லை; மனைக்கிழத்தி ஆதல் இல்லை. ஒருடம்பிற்கு இரண்டு தலைகள் இல்லாமை போல ஒரு தலைவனுக்கு இரு தலைவியர் இருத்தல் பொருந்தாது."[85] என்கிறார் ஈ.கோ. பாஸ்கரதாஸ். மகனைப் பெறாத தாயைப் பின்னிறுத்தி, மகனைப் பெற்ற இரண்டாம் தலைவி, முதலிடம் பெற்றுத் தலைவனுக்கோர் தலைவியாக உரிமை செலுத்துகிறாள். மிகவும் உயர்ந்த 'மனையோள்' என்ற நிலையை மகப்பெறாத பெண் விட்டுக்கொடுக்க நேர்கிறது. தற்காலத்திலும் கணவனின் அன்பை, அண்மையை விரும்பும் மனைவி, தானே முன்வந்து இரண்டாம் மணம் செய்து வைப்பதைத் தற்காலச் சிறுகதை இலக்கியம் மூலம் ஆய்வாளர் வெளிப்படுத்துகின்றனர்.[86]

கணவனின் பொறுப்பு

இருவரை மணந்த தலைவன் தன் அன்பில் திரியாதிருந்து இரு மனைவியரையும் ஒப்ப வைத்து நடத்தல் வேண்டும்; குழந்தை இன்மையால் முதல்மனைவியை இரண்டாம் மனைவியும், இரண்டாவதாக வந்தவள் என்பதால் பின்முறைக் கிழத்தியை முதல் மனைவியும் குறைவாக மதிப்பிட்டுவிடாமல் பார்த்துக்கொள்வது கணவனின் பொறுப்பு.

"பின்முறை ஆக்கிய பெரும்பொருள் வதுவைத்
தொன்முறை மனைவி எதிர்ப்பா டாயினும்"

"தாய்போற் கழறித் தழீஇக் கோடல்
ஆய்மனைக் கிழத்திக்கும் உரித்தென மொழிப"

"அவன்சோர்பு காத்தல் கடனெனப் படுதலின்
மகன்தாய் உயர்பும் தன்னுயர் பாகும்
செல்வன் பணிமொழி இயல்பாக லான"[87]

என இரண்டாம் திருமணத்தில் முதல்மனைவி, இரண்டாம் மனைவி, கணவன் நிலைகளைத் தொல்காப்பியர் விளக்கியுள்ளார். முதல்மனைவியை ஒதுக்கி மகனைப் பெற்ற இரண்டாம் மனைவிக்குச் சிறப்புதரக் கணவன் விரும்புதல் இயல்பு. இதற்குச் சங்க இலக்கியம் சான்றளிக்கவில்லை. சங்கத்தை அடுத்துவரும் சிலப்பதிகாரம் இப்படி ஒரு நிலையைச் சுட்டிக்காட்டுகிறது. மாலதி என்னும் அந்தணப்பெண் மகப்பெறா நிலையில் இரண்டாம் மனைவியின் குழந்தைக்கு வளர்ப்புத்தாய் ஆகிறாள்.

கணவன் இரண்டாம் மனைவியுடன் வெளியே செல்கிறான். பால்தரும்போது குழந்தை விக்கி இறக்கிறது. இயற்கை மரணமாயினும் மாற்றாளும் கணவனும் தன்னை எவ்வாறெல்லாம் பழிதூற்றுவார்கள் என்றெண்ணி அலமருகின்றாள் மாலதி. குழந்தையை உயிர்ப்பிக்க அவள் படும் அவலநிலை, குழந்தை பெறாத தாயின் எச்செயலும் குற்றமாகவே படும் என்ற சமுதாயக்கணிப்பைக் காட்டுகிறது.[88]

ஐங்குறுநூறு காட்டும் தாயின் நிலையும் செவிலியின் நிலைக்குத் தள்ளப்பட்டு, தாழ்வாகக் கருதப்பட்டிருக்கலாம் என்ற ஊகத்தை இப்பாடல் ஏற்படுத்துகிறது.

குழந்தையை வளர்க்க மறுமணம்

முதல்மனைவி குழந்தை பெற்றபின் இறந்துவிட, அம்மகவை வளர்ப்பதற்கென்றே இரண்டாம் திருமணம் நடைபெற்றிருக்கிறது என்னும் அரிய சான்றையும் ஐங்குறுநூறு அளிக்கின்றது.

புலியால் கொல்லப்பட்ட பன்றியின் குட்டியை அதன் தந்தை காப்பாற்றும் என்னும் உள்ளுறை தந்தை குழந்தையை வளர்க்கும் பொறுப்பு உடையனாதலைக் காட்டுகிறது. தாயிழந்த தன்குட்டியை ஒரு சமயம் காக்கும் பன்றி மறுபொழுதில் அதைப்பிரிந்து அது ஏறுவதற்கரிதான உயர்ந்த மலையுச்சியில் உள்ள குவட்டின்கண் கவலையற்று உறங்குகிறது என்னும் உள்ளுறை தாயை இழந்த மகவுக்குத் தந்தை முற்றிலும் தாயுமானவராக நடந்துகொள்ள முடிவதில்லை என்றும் காட்டுகிறது.[89]

"புறவணி நாடன் காதன் மடமகள்
ஒண்ணுதல் பசப்ப நீசெலிற் றெண்ணீர்ப்
போதவிழ் தாமரை யன்னநின்
காதலம் புதல்வ னழுமினி முலைக்கே"[90]

என்னும் பாடல் தாய் இறப்பின் நேரும் நிலையை நேரே காட்டுகிறது. பொருள் வயிற் பிரியக் கருதும் தலைவனைத் தடுக்க நினைக்கிறாள் தோழி. அவன் பிரியின் தலைவி இறப்பது உறுதி. தாய் இறப்பின், தலைவனின் அன்புக்குரிய மகன் முலைக்கு அழுவான். அழும் புதல்வனுக்கு மற்றொரு ஊட்டுந்தாயைத் தலைவன் மணம்புரிந்து அழைத்து வரலாம்; தலைவனுக்கு மனைவியும் புதல்வனுக்குத் தாயும் கிடைக்கலாம். ஆனால் தலைவியின் பெற்றோரான புறவணி நாடனுக்கு அவள் ஒரே ஒரு காதல் மடமகள்; அம் மகளை இழப்பது இரங்கத்தக்கது; அப்பெற்றோரும் இரங்கத் தக்கவர் ஆதலின் தலைவியைப் பிரியத் தலைவன் ஆராய்ந்து துணிய வேண்டும் என்பது

தோழியின் கருத்து. இப்பாடலின் மூலம் இளங்குழந்தையை விட்டு இறக்கும் தலைவியைப் பிரிந்த தந்தையர், தனித்து வாழத் துணியாது, அம் மகவுக்கென்று இரண்டாம் மணம் புரிந்து மாற்றாந்தாயைக் கொண்டுவந்தனர் என்பது தெரிய வருகிறது. முலைத்தாய், ஊட்டுந்தாய், கைத்தாய், பாராட்டுந்தாய், செவிலித்தாய் என்று எந்த வகையிலேனும் குழந்தைக்குத் தாயர் அமைந்து வளர்ப்பு நடை பெற்றிருக்கின்றது என்பதை இப்பெயர்கள் காட்டுகின்றன.

மாற்றாந்தாயால் வளர்க்கப்படும் குழந்தையின் மன இயல்பு, மூத்தாள் குழந்தையை வளர்க்கவரும் இளம் பெண்ணின் மனநிலை, இரண்டாம் மனைவியின் வருகையால் முதல்மனைவியின் இரங்கத்தக்கநிலை ஆகியன குறித்த சான்றுகள் சங்க இலக்கியத்தில் இல்லை. தாய் என்னும் உயர்நிலையை அடையப் பெண் மேற்கொள்ளும் முயற்சிகள் – கடவுள் வழிபாடு, நோன்புகள், வேள்விகள், ஊர்ப்பழியை ஏற்று உள்ளுக்குள் புழுங்குதல், தன் கணவனின் இரண்டாம் மணத்திற்குத் தானே ஆதரவாய் இருத்தல், இரண்டாம் மனைவிக்குத் தன் இடத்தையும் உரிமை–களையும் விட்டுத்தருதல், தன் நிலை தாழ்ந்த பின்னும் கணவன் மேல்கொண்ட அன்பால் அங்கு தொடர்ந்து வாழ்தல், தனக்கு ஏற்படும் இழிவுகளைச் சகித்துக் கொள்ளல் ஆகியவற்றால் உடலால் அன்றி உள்ளத்தால் மட்டுமே தாயாகும் பெண்ணின் வாழ்வே தவவாழ்வாக அமைகிறது.

"குன்றக் குறவன் கடவுட் பேணி
இரந்தனன் பெற்ற எல்வளைக் குறுமகள்" [91]

என்றபடி கடவுள் அருளால் பெண் பிறப்பினும், ஆண் மகவு பெறாதது பெருங்–குறையாகவே இருந்துள்ளது. அன்றிலிருந்து இன்றுவரையும் ஆண் வமிசவாரிசு ஆகக் கருதப்படுவதால் கருவுற்ற தாய் ஆண் மகவைப் பெறவேண்டும் என்றே எதிர்பார்க்கப்படுகிறாள். பெண் குழந்தையைப் பற்றிய பிறப்பு, வளர்ப்பு குறித்து அதிகம் செய்திகள் இடம் பெறாத தன்மையாலும் மகளைப் பற்றிய

செய்திகள் குறிப்பிடும் இடங்களில் தாயின் சிறப்பு வெளிப்படுவதாலும் சங்ககாலத்திலும் மகனைப் பெறும் தாயின் மதிப்பு உயர்ந்துள்ளதைக் காணமுடிகிறது. தாயும் மகளும் கருவில் தொடங்கும் உறவு இறுதிவரையிலும் தொடர்ந்து நிற்பதைச் சங்க இலக்கியம் வழி அறியமுடிகிறது.

***

## அடிக்குறிப்புகள்

1. திருக்குறள் - 69.
2. ஐங். 309:3-5.
3. ஜி.ஜான்சாமுவேல், திறனாய்வுச் சிந்தனைகள், ப. 53.
4. குறுந். 8 : 4-6.
5. அகநா. 226, 246; ஐங். 71.
6. சாலினி இளந்திரையன், சங்க அக இலக்கியங்களில் பாத்திரங்களின் பண்போவியம், முதல் கருத்தரங்கு ஆய்வுக்கோவை, ப. 3.
7. ஐங். 158 : 201.
8. கலித். 82 : 10-11; 83 : 23; அகநா. 16.
9. நற். 330 : 6-11.
10. அகநா. 276.
11. கலித். 86 : 11-14.
12. அகநா. 66.
13. குறுந். 45 : 3-5.
14. மே.ப.நா. 10 : 1.
15. நற். 221 : 11-13.
16. குறுந். 93 : 3-4.
17. ஐங். 98 : 4.

18. குறுந். 40 : 1.

19. நற். 8 : 9-10.

20. ஐங். 373 : 1, 4-5.

21. நற். 293 : 6-9.

22. ஐங். 399.

23. மே.ப.நூ. 280 : 4-5.

24. ஆ. இராமகிருட்டிணன், அகத்திணைமாந்தர்-ஓர் ஆய்வு, பக். 219-20.

25. குறுந். 161.

26. கலித். 51.

27. சி. பாலசுப்பிரமணியம், தமிழ் இலக்கிய வரலாறு, ப. 143.

28. புறநா. 100, 96, 92.

29. மே.ப.நூ. 191 : 3.

30. மே.ப.நூ. 137 : 14-15.

31. சிறுபாண். 192; மலைபடு. 185.

32. பெரும்பாண். 478-479.

33. பதிற். 20 : 26-28.

34. பரி. 8 : 57.

35. புறநா. 5 : 7.

36. மே.ப.நூ. 4 : 18-19.

37. மே.ப.நூ. 160 : 22-24.

38. திருக்குறள், 656.

39. புறநா. 159 : 1-5.

40. மே.ப.நூ. 196 : 10.

41. மே.ப.நூ. 198 : 3-5.

42. மே.ப.நூ. 183 : 3-4.

43. நா. செயராமன், 'ஈன்றதாய்', ப. 13.

44. புறநா. 312 : 5-6.

45. செந்துறைமுத்து, சங்ககாலச் சமுதாயச் சிந்தனைகள், ப.73.

46. புறநா. 80, 83.

47. மே.ப.நூ. 77, 78.

48. மே.ப.நூ. 279.

49. மே.ப.நூ. 86 : 4-6.

50. மே.ப.நூ. 315.

51. மே.ப.நூ. 276-277.

52. மே.ப.நூ. 278 : 4-9.

53. மே.ப.நூ. 310.

54. மே.ப.நூ. 273:3-4

55. மே.ப.நூ. 296 : 4-5.

56. மே.ப.நூ. 19 : 13-15.

57. புறப்பொருள் வெண்பாமாலை, 176.

58. புறநா. 23 : 18-22; உ.வே.சா. உரை, பக். 62-64.

59. L.S.S.O' Malley, Indias' Social Heritage, p. 148.

60. நற். 353 : 1-2.

61. புறநா. 125 : 1.

62. சி. நாச்சிமுத்து, பருத்திப்பெண்டிர் - ஒரு பழைய வழக்கும் இன்றைய அதன் வடிவமும், 24-வது கட்டுரை, ஆய்வுத்தொகை, ப. 281.

63. சொ. மல்லிகா, நெசவாள மகளிர், மலைவாழ்மகளிர்தம் சிக்கல்கள்- எம்.ஃபில் ஆய்வேடு, ப. 91.

64. B.G. Gokhele, Ancient India, History and Culture, p.128.

65. புறநா. 254.

66. பட்டினப். 245-6.

67. புறநா. 46.

68. மே.ப.நா. 213, 218, 223.

69. தெ.பொ. மீனாட்சிசுந்தரனார், பத்துப்பாட்டு ஆய்வு (புறம்), ப. 34.

70. திருமுருகு, 257-259.

71. பெரும்பாண். 458-459.

72. பரி. 5 : 49-62.

73. பரி. 3 : 15-16.

74. புறநா. 9 : 3-4.

75. செந்துறை முத்து, சங்ககாலச் சமுதாயச் சிந்தனைகள், ப. 80.

76. வில்லிபாரதம்.

77. பரி. 8 : 106.

78. மே.ப.நூ. 11 : 129.

79. சி.வா. ஜகந்நாதன், நாடோடி இலக்கியம், பக்.54-58.

80. பதிற். 74 : 1-4.

81. மே.ப.நூ. 74 : 20-22.

82. மே.ப.நூ. 74 : 25-26.

83. ஐங். 292.

84. புலியூர்க்கேசிகன், ஐங்குறுநூறு (குறிஞ்சி, பாலை) உரை, ப.168.

85. ஈ.கோ. பாஸ்கரதாஸ், அகப்பொருள் பாடல்களில் தலைவி, ப.81.

86. தமிழ்ச் சிறுகதைகளில் பெண்கள் பிரச்சனைகள், டாக்டர்.தேவதத்தா (பதிப்பாசிரியர்), ப. 95.

87. தொல். பொருள். நச்சினார்க்கினியர் உரை, நூற்பாக்கள் 172-174, பக். 260-262.

88. சிலப்பதிகாரம்-கனாத்திறம் உரைத்த காதை.

89. ஐங். 265, 268.

90. மே.ப.நூ. 424.

91. மே.ப.நூ. 257.

*****

## 4.1 களவு வாழ்வு

தன்னிகரற்ற தாயன்பின் விளைவாகவே குடும்ப உறவுகளில் தாய்க்கும் குழந்தைக்கும் இடையே காணப்படும் உறவு நெருக்கம் மிகுந்ததாகக் காணப்படுகிறது. பெண்குழந்தையின் வளர்ப்பில் தாயின் பொறுப்பு மிகக் கூடுதலாக உள்ளது. பெண் குழந்தை பிறப்பு பற்றிய செய்திகள் இல்லையெனினும் சங்க இலக்கியம் பெண் மகவைப் போற்றிய தன்மையைக் குறிப்பிடுகிறது. மகப்பேறு இல்லாது வேண்டித் தவமிருந்து பெறும் பெற்றோர்க்குப் பெண்ணும் சிறப்பான செல்வமே. அதனால் அருமையாகப் பெற்ற மகள்,

"நல்கூர்ந்தார் செல்வ மகள்"[1]

"குன்றக் குறவன் கடவுள் பேணி
இரந்தனன் பெற்ற வெள்வளைக் குறுமகள்"[22]

எனப் போற்றப்பட்டிருக்கிறாள். அதுபோல் வளர்ப்பும் பெருமையாகவே சொல்லப்பட்டிருக்கிறது.

"அன்னை காக்கும் தொன்னலம்"

"யாய் நயந்தெடுத்த ஆய்நலம்"

"தாயோம் பாய்நலம்"

"யாய் மறப்பறியா மடந்தை"[3]

என்னும் அடிகள் அதனை விளக்கி நிற்கின்றன. படிப்படியான மகள் வளர்ச்சியில் மிகுந்த கவனம் செலுத்தும் அன்னை, அவளது களவை அறியவும், அறத்தொடு நிற்குமுன் இற்செறிக்கவும், வெறியாடல் நிகழ்த்தவும் செய்கிறாள். மகளின் களவு வாழ்வு அன்னை அறியாமல் நடக்கிறது. அதை ஊகிக்கும் அன்னையும் அதற்குத் தக எடுக்கும் முயற்சிகளில் இற்செறித்தல் முதன்மை பெறுகிறது.

பருவத்தில் அழகு மிகல்

இளமைப் பருவத்தில் அழகு மிகுந்து விளங்குதல் பெண்ணின் உடற்கூற்று இயல்பு.

"அம்மெல் லாகம் நிறைய வீங்கிக்
கொம்மை வரிமுலை செப்புட னெதிரின
யாங்கா குவள்கொல் பூங்குழை"[4]

எனும்படி பேதைப் பருவம் கடந்து பெதும்பைப்பருவம் அடைகிறாள் பெண். இனி வெளியில் பலர்கண்படச் செல்வது கூடாது எனத் தாய் அறிவுறுத்துகிறாள்.

"முலைமுகஞ் செய்தன முள்ளெயி றிலங்கின
தலைமுடி சான்ற தண்டழை உடையை
அலமரல் ஆயமொ டியாங்கணும் படாஅல்
மூப்புடை முதுபதி தாக்கணங் குடைய
காப்பும் பூண்டிசிற் கடையும் போகலை
பேதை யல்லை மேதையங் குறுமகள்
பெதும்பைப் பருவத் தொதுங்கினை புறத்தென
ஒண்சுடர் நல்லில் அருங்கடி நீவி."[5]

இற்செறிக்கப் படுதல் பருவம் வந்த மகளிர்க்கு இயல்பே என மகளே உணரும்வண்ணம் தாய் எடுத்துரைக்கிறாள். எப்போதும் வெளியில் சென்று திரிந்த நிலை மாறுகிறது. மலர் கொய்தல், நீராடல், தினை காத்தல், பால்தயிர் முதலியன விற்றல் போன்ற சில காரணங்களுக்காக மட்டுமே மகள் வெளிச்செல்ல அனுமதி கிட்டுகிறது.

தலைவியின் களவு மணம்

தலைவி உடலால் வளர்ந்தது போலவே உள்ளத்தாலும் வளர்கிறாள்; பருவ உணர்வுகளுக்கு ஆட்படுகிறாள். எதிர்பாராது, ஊழ்வயத்தால் சந்தித்த ஓர்

இளைஞனிடம் ஈடுபாடு கொள்கிறாள். அந்த இளைஞனும் தலைவியைக் கண்ட அளவில் காதல் கொள்கிறான். அவளைத் தன் தலைவியாக ஏற்றுக்கொள்ள விரும்புகிறான். யாரும் அறியாவண்ணம் தலைவனும் தலைவியும் தம்முள் தாமே எதிர்ப்பட்டுக் களவு மணம் கொள்கின்றனர். செம்புலப் பெயல்நீர் போல இருவர் அன்புடை நெஞ்சமும் தாம்கலக்கின்றன. இயற்கையாக நேரும் இக்கூட்டம் இயற்கைப் புணர்ச்சி, காமக்கூட்டம், காமப்புணர்ச்சி, களவுப் புணர்ச்சி என்று கூறப்பெறுகிறது.[6]

1. புதுமணம் கண்டு ஐயுறல்

தலைவன் தரும் மலர்கள், தழையாடை ஆகியவற்றாலும், அவனுடன் கூடுதலாலும் உண்டாகும் மன, உடல் வேறுபாடுகளைத் தலைவியால் மறைக்க முடிவதில்லை. புதுமணம் பெற்ற தோள், கூந்தல், தழையணிந்த நாற்றம் இவை கண்டு உணரும் தாய் தோழியிடம் வினவுகிறாள்.[7]

"பலமலர்களை மேய்ந்து அலுத்த வண்டுகள்
இவள் கூந்தலை நாடினவே அன்றி
வேறொன்றுமில்லை"[8]

என்று பதில் கூறுகிறாள் தோழி. மனம் அமைதி பெறாத தாய், மகள் நெற்றியின் ஒளிகண்டு அச்சம் தரும் செய்தியும் உண்டு போலும் எனக் கடுகடுக்கிறாள்.[9] தோள் மணம் பெற்ற மகளை நோக்கிப் 'பண்டும் இம்மணம் உடையையோ?' என்று கண்ணால் கொல்பவள்போல் கேட்கிறாள். அப்போதும்;

"விறகின் புகையால் வந்த சந்தன மணம்"[10]

என அதை மறைக்கிறாள் தோழி.

2. உடல் அழகு மிகுதல்

தலைவனுடைய கூட்டத்தால் மகள் உடல் புது அழகு பெறுகிறது; பின்னிய பின்னல் நெளிந்து விடுகிறது; மார்பில் பொன்போன்று தேமல் ஏற்படுகிறது. புணர்ச்சியால் கண்ணுருத்து எழுதரு முலையும் நோக்கி 'முன்னைவிட நீ பெரும் அழகாக இருக்கிறாய்' எனப் பலமுறை தலைவியைத் தழுவுகிறாள் தாய்.

"பின்னுவிட நெறித்த கூந்தலும் பொன்னென
வாகத் தரும்பிய சுணங்கும் வம்புவிடக்
கண்ணுருத் தெழுதரு முலையு நோக்கி
யெல்லினை பெரிதெனப் பன்மாண் கூறிப்
பெருந்தோ ளடைய முயங்கி நீடுநினைந்
தருங்கடிப் படுத்தனள் யாயே"[11]

என்றபடி தாய் ஐயுறும்படி மகள் நிலை உள்ளது.

3. தனிமை விரும்பல்

தலைவனை அடிக்கடி சந்தித்து மகிழமுடியாத நிலையில் தலைவியின் துயரம் அதிகமாகிறது. தனிமையில் இருத்தலை மிகவும் விரும்புகிறாள். தோழியருடன் சுனையும் ஆடாமல் தனியே வருந்துதலும், தாயுடன் அன்றித் தனித்து உறங்குதலும் அன்னையின் கவனத்திற்குரியதாகிறது.

4. துயிலாதிருத்தல்

தனியே படுப்பினும் கண் துயிலாதிருக்கிறாள் தலைவி. துயர்ப்படும் தலைவியைப் பொருட்படுத்தாது உறங்கும் மற்றவர்களைக் குறித்து,

"நனந்தலை உலகமும் துஞ்சும்
ஓர்யான் மன்ற துஞ்சா தேனே"[12]

"ஏன் துயிலவில்லை என்று உசாவாத
மக்களையும், நெடிய இரவையும் உடைய

இந்த ஊர் எனக்கு இனி உறைபதி
அன்று"[13]

என்று நினைக்கிறாள். அதை ஊகித்துணரும் தாய்,

"துஞ்சாயோ என் குறுமகள்?"

என வினவ,

"கான்கெழு நாடனை நினைந்த தனக்குக்
கண்ணும் படுமோ?"[14]

எனத் தனது நெஞ்சுக்குள் உரைத்துக் கொள்கிறாள் மகள்.

5. உண்ணாதிருத்தல்

பொன்செய் வள்ளத்தில் தரினும், தேனொடு சேர்த்துத் தரினும் தீம்பால் உண்ணாது மகள் தவிர்க்கிறாள். அம்பொரிக் கலந்த பாலும் பல என உண்ணாது மறுக்கிறாள். உண்ணும் அளவு முன்பைவிடக் குறைகிறது; அல்லது உண்ணத்தரும் பால் அப்படியே மறுக்கப்படுகிறது என்பதைத் தாயால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. கடுங்குரலெடுத்துக் கூவுகிறாள்.[15]

6. உடல் அழகு குலைதல்

உண்ணாதும் உறங்காதும் துயரில் தலைவியின் உடல் அழகு இழக்கிறது. பலர்புகழ் கொல்லிப்பாவை போன்ற அழகுடைய தலைவியின் தோள்கள் தொல்கவின் தொலைந்தன. அதைக்கண்டு நாளும் அன்னை அருந்துயர் உறுகிறாள்.[16]

7. வளை கழலல்

மெய் இளைத்தலால் வளை கழல்கிறது. கோடீர் இலங்குவளை நெகிழ்த்த பீடுகெழு குரிசிலை எண்ணி இளைக்கும் மகளைத் தாய் உற்று நோக்குகிறாள். அதைக் காணும் மகள் அஞ்சுகிறாள். ஆய்வளை ஞெகிழ, அயர்வுமெய் நிறுப்ப, நோய்மலி

வருந்துதலை அன்னை அறியின் உயிர் வாழேன் என்கிறாள் குறுந்தொகைத் தலைவி. போரவைக் கோப்பெருநற்கிள்ளியைக் காதலித்த நக்கண்ணையும், தன்வளை கழலலுக்கு யாய் அஞ்சுகிறாள். எல்வளை நெகிழ்த்த தலைவன் மலைக் காற்று பட்டால் பசலை கொண்ட மெய்யின் வெப்பநோய் சிறிது தணியும் என்பது நற்றிணைத் தலைவியின் கணிப்பு. ஆனால் ஐயுற்ற தாய் நெருங்கோர் எல்வளை தலைவியின் கையைவிட்டு ஓடியதைக் கண்டு இற்செறித்து வைக்கிறாள்.[17]

8. பசலை பூத்தல்

பசலை அடுபால் போன்று மேனியில் பூக்க, அன்னை சுடுவான் போல மகளை நோக்குகிறாள். அயற்பெண்டிரும் பசலையை அறிந்து கொள்கின்றனர். வைகல் தோறும் பசலை நோய் மிகுதலால் அன்னை அமரா முகத்தினள் ஆக இருக்கிறாள். பல நாட்களாகத் தலைவியின் அழகிய நெற்றியில் பரவிய பசலை கண்டு வருந்தும் தாயும் உண்டு.[18]

9. கண்ணீர் வரல்

தலைவனைச் சந்திக்க இயலாத தலைவி கண்ணீர் விடுகிறாள்; தேம்புகிறாள். தாய் அறியக்கூடாது என்று எவ்வளவு முயன்று கரப்பினும் அவள் நிலையைக் கண்ணீர் உரைத்து விடுகிறது.

"கரப்பவும் கரப்பவுங் கைம்மிக்கு
உரைத்த தோழி உண்க ணீரே"[19]

என்னும் தலைவியின் கண்ணீர் அன்னையையும் துயர் உறச் செய்கிறது. மகளைத் தேற்றி,

"அழாதே! நின் இலங்கெயிற்றை முத்தம்
கொள்வேன்"[20]

என்கிறாள். அன்னையின் அன்பால் நெகிழ்ந்த மகள் தன் துயர்க்குத்

தலைவன் மார்பு காரணம் என்று சொல்லவந்து, பிறகு தன் நினைவுவரச் சொல்லாது விடுக்கிறாள். அன்னை காக்கும் தொன்னலம் சிதைதலைக் காண்டொறும் கண்கலுழ்கிறது. அதனாலும் அவள் கொண்ட காமம் மறைத்தற்கு அரியதாகிறது.[21]

10. திணைக்காவல் நிறுத்தல்

திணைக்காவலுக்குப் புனம் சென்ற மகளை ஐயுறுகிறாள் தாய். நேருக்குநேரே வினவாது,

> "கிளியின் குரலும் மகளின் குரலும் ஒன்று போலவே உள்ளன; இவள் கிளிகடிதலால் கிளிகள் அஞ்சி ஓடாது, அனைத்தையும் உண்ணுகின்றன. இவள் காவலால் விளை பயன் ஒன்றுமில்லை."

என்று கூறித் திணைப்புனக் காவலை நிறுத்துகிறாள். கிளிகடியாது எங்கு சென்றனை என வினவும் தாயிடம் மகள் புனலாடிய உண்மையைக் கூற, மறுநாள் முதல் காவலுக்குச் செல்ல அனுமதியில்லை.

கிளி ஒப்ப வேண்டிய மகள் அங்கு தலைவனுடன் ஊசலாடுகிறாள்; தழையணிந்து விளையாடுகிறாள். உடலில் நாற்றமும், நுதலில் பசலையின் தோற்றமும் கொண்ட மகளைக் கண்டு யாரும் கூறாமலேயே களவு அறிந்து வெய்ய உயிர்க்கிறாள் தாய். ஆயினும் களவு உண்டா என வினவாது பிறிதொன்று சுட்டி இற்செறிக்கிறாள்.[22]

11. அலர் எழுதல்

தோழியின் உதவியால் தலைவனைத் தலைவி பகற்குறியில் சந்தித்து மகிழ்தலை ஊராரும் சுற்றத்தாரும் கவனிக்கின்றனர். புதியதோர் இளைஞன் வந்து செல்லும் நோக்கம் அவரால் உய்த்துணரப்படுகிறது. இச்செய்தியினைத்

தங்களுக்குள் உரையாடியும், அன்னையிடம் உரைத்தும் அலர் பரப்புகின்றனர். ஊரவர் கூறும் அலரைத் தாய் நம்பவில்லை. இருப்பினும் மகளை வினவாமலும் இருக்க முடியவில்லை.

'அன்னாய்' என மகளை விளிப்பதன் மூலம் செய்தி உண்மையா என வினாத்தொடுக்கிறாள். அவ்வொரு விளியே உள்ளத்தை நடுங்கச் செயினும் களவுத் தலைவி உண்மையை மறைக்கிறாள். ஊரார் உரைப்பதைக் 'கொடுமை' என்கிறாள். காதலன் ஒருவன் இருக்கிறான் என்று ஊர் அலரெழத் தாய் கண்ணையே கோலாய்க் கொண்டு வருத்துகிறாள். இடியொலிபோலக் கடுஞ்சொல் கூறுகிறாள்; சிறு கோலால் அலைக்கவும் செய்கிறாள். அறனில்லாத அழுங்கலூர் அலர்கூற அறனில் அன்னையும் மகளை அருங்கடிப் படுத்துகிறாள்.[23]

இவ்வளவு செய்தும் தலைவி தன்களவை ஒப்பவில்லை. அதனால் அலர்கேட்டு வெகுண்ட தாயை நோக்கி ஊரலர் கூறும் பெண், தான் அல்லள் என மகள் தேற்றுகிறாள். அதற்கு ஏற்பத் தோழியும்,

> "தந்தை வீட்டில் இருக்கும்போது தலைவி களவுத் தலைவனைக் காண வெளிச்செலும் அளவு துணிந்தவள் அல்லள். தலைவி போன்று தாய் நோக்கிய உருவம் அங்கே அன்றி வேறில்லை. இரவில் தனித்திருக்கவும், கூகை குழறினும் அஞ்சும் தலைவி, களவு மேற்கொள்ளாள். அதனால் அவளை அலைத்துத் துன்புறுத்தாதே!"[24]

எனத் தாயை வேண்டுகிறாள். அன்னை புதிதாக அணிவித்த நெடுங்குழை தந்த வருத்தம் என்று ஊராரும் நம்பும் வண்ணம் மகள் நடந்து கொள்கிறாள்.[25]

12. தலைவன் தேர் வரல்

களவை மகள் மறுத்தும் இற்செறிக்கத் தலைவன் வரும் தேரும் காரணம் ஆகிறது.

"ஏதிலான் தேரொன்று நெய்தல் மலர்சிதையும்படி
அடிக்கடி வருதலால் நீங்கள் வெளிச்செல்லாதீர்"

"நீங்கள் விளையாடும் பெருந்துறையில் இரவு,
பகல் எந்நேரமும் தேர் ஒன்று வருவதாகப்
பெண்டிர் கூறுகின்றனர். வெளிச்செல்லாதீர்"

எனப் பொதுவாகக் கூறுகிறாள். எங்கோ தேர்வரும் எனக் கயமகளிர் அலர்தூற்ற, அன்னை கடிகொண்டனள் என்னும் மகளுக்கு தாயின் கட்டளை பிடிப்பதில்லை.

"ஏதோ ஒருநாள் தேர்வந்து சென்றது என்று அலைக்கும் தாய்
எனக்கு மட்டும் வாய்த்தாள்; பிறமகளிரது தாயர் ஐயப்படாததால்
அவர் நற்பாலோர்"[26]

என்கிறாள்.

13. வெளிச்செல்ல அனுமதி மறுத்தல்

விளையாட வெளிச்செல்லவும் தாய் அனுமதி மறுக்கிறாள். தலைவனுடன் விளையாடியதன்றி வேறொன்றும் செய்யாத போதும் தாய் பூப்பறிக்கச் செல்லாதே எனத் தடை விதிக்கிறாள். இளையோரை ஓரையாடாமல் வீட்டில் வைத்திருப்பது நன்றன்று எனத் தாய்க்கு எடுத்துரைப்பார் இன்மையால் இற்செறிக்கப்பட்டுள்ளோம் எனத் தலைவியும் தோழியும் வருந்துமாறு அன்னை எதற்காகவும் வெளியே விடுவதில்லை.[27]

கடுமையாக இற்செறிப்பதால் பகற்குறியிலும் இரவுக்குறியிலும் வரும் தலைவனால் தலைவியைச் சந்திக்க இயலவில்லை. கடலன்ன காமத்தாள் ஆயினும் தலைவி அன்னைக்கும் அலருக்கும் அஞ்சி, இற்செறிப்பை ஏற்று நிற்கிறாள்.

"பருவம் வாய்க்கப்பெற்ற பெண், செல்வத்தகுதி
மிக்க குடியினள் கடுமையாகப் பாதுகாக்கப்
பட்டிருக்கின்றாள் என்பது உண்மையே"[28]

என்பர் ஆய்வாளர் கு.வெ. பாலசுப்பிரமணியன்.

14. இரவிலும் அன்னை உறங்காதிருத்தல்

அன்னையின் காவல் இரவிலும் தொடர்கிறது. தலைவி சற்று தூக்கத்தில் அசைந்தாலும் விழித்துக் கொள்கிறாள். நெடுநேரம் தூங்காது விழித்திருக்கும் அன்னையால் குறிஞ்சித் தலைவன் வறிதே பெயர நேர்கிறது.[29] இரவில் வரும் தேர் ஓசை கேட்டு எழுந்தால் அன்னை அறிந்துவிடுவாள் எனத் தலைவி வெளிச்செல்லாது இருக்கிறாள். தலைவி தூங்கிவிட்டாலும் போர்க்கள ஊரைப்போல அன்னை துயிலாது காக்கிறாள்.

"அன்னையும் கனைதுயில் மடிந்தனள்"[30]

என்னும் தலைவியின் கூற்றில் தலைவனைப் பார்க்க முடியும் என்ற மகிழ்ச்சியைவிட அன்னை தூங்கியது குறித்த நிம்மதியே அதிகம் தொனிக்கிறது.

15. காப்பின் கடுமை

இற்செறிப்பு கடுமையாக இருப்பதால் தலைவியின் காதல் குறைவதைவிட மேலும் அதிகம் ஆகவே செய்கிறது. மெய்தோய் நட்பால் உடலில் ஏற்பட்ட மாறுபாடு கண்டதால்தான் தாய் இற்செறிப்பு செய்தாள் என்பது மகளுக்கும் தெரிகிறது. இருப்பினும் கடுமையான காவலைத் தாங்க முடியாததால் அன்னை அறனில் யாய் ஆகிறாள். குடந்தை நிதிக்கு வைத்த காவலைவிட அதிகம் காப்பு வைக்கும் தாய், சூரர மகளிரின் காப்பை ஒத்த தந்தையின் காப்பிடம், நன்னன் உதியனின் கருவூலப் பொன்னை விட அதிகக் காப்பு எனக் காப்பின் கடுமை உணர்த்தப்படுகிறது.[31] காமத்தை ஆற்ற இயலாத தலைவி, தலைவனைப்

பிரிந்திருப்பதை விட இறத்தலும் நன்று என்னும் வண்ணம் காப்பு கடுமையாக உள்ளது.[32] இருப்பினும் அது குறித்துச் சிறிதும் கவலாது இரவிலும் காணவரும் தலைவனின் ஆற்றருமை குறித்துத் தலைவி கலங்குகிறாள்.

தலைவன் இரவில் வந்து தாழிட்ட கதவைத் திறக்க முயலும் ஒலியைத் தலைவி போலத் தாயும் கேட்கிறாள். தலைவி எழுந்து சென்றுவிடக்கூடாது என்பதால் வலைப்பட்ட மயில்போல் தலைவி நடுங்குமாறு அவளைத் தழுவிக் கொள்கிறாள். அதனால் தலைவனைச் சந்திக்க முடியாத தலைவி,

"நன்மயில் வலைப்பட் டாங்கியாம்
உயங்குதொறு முயங்கு மறனில் யாயே"[33]

என்கிறாள்.

நாடன் வருவானோ என்று எப்போதும் அன்னை அமரா முகத்தள் ஆக இருக்கிறாள். நாடன் இரவில் வாராதிருந்தும் வரும்வரும் என்று யாய் கூறுகிறாள் எனத் தோழி, தலைவன் கேட்குமாறு தலைவியிடம் கூறுகிறாள். சூழல் சரியாக இல்லை என்பதைப் புரிந்து கொள்ளும் தலைவன் குரங்கு போல ஓடிவிடுகிறான்.[34] ஒருநாள் இரவில் தலைவனைக் கண்டுவிடும் தாய் பலத்த ஆரவாரம் செய்து தன் காவல் எப்படிப்பட்டதென்று காட்டுகிறாள். அன்றிலிருந்து அவள் உறங்குவதில்லை. அவள் தன்மையை,

"ஒருநாள் நகைமுக விருந்தினன் வந்தெனப்
பகைமுக ஊரின் துஞ்சலோ இலளே"[35]

என்கிறாள் மகள். மகள் சுனையாடி உடல்வேறுபாடு அடைந்தது என்பதை நம்பாத தாய் 'இன்றும் சுனையாடின் வேறுவித மாகுமோ?'[36] என நகைப்பது தலைவிக்கு நடுக்கத்தைத் தருகிறது.

"களவும் கைம்மிக வளர்ந்தன் றன்னையும்
உட்கொண் டோவாள் காக்கும்"[37]

என்பதாகத் தாய் எப்போதும் காவல் காக்கிறாள்.

மகளின் உடல்மெலிவு கண்டு வினவும் போது கிடைக்கும் மறுமொழியில் நம்பிக்கையின்மை தோன்றும்போதும், தினைக்காவலில் அக்கறைகாட்டாத மகள், அங்கு செல்லத் துடிப்பதும், தனித்துப் புலம்புவதும் தலைவன் முயக்கம் விரும்பும் காலம் வந்தபிறகு தாயின் முயக்கம் வெறுப்பதும் தாய்க்கு ஐயம் தரும் சூழல்கள் ஆகின்றன. ஐயம் ஏற்பட்ட பிறகு மகளின் சிறு வேறுபாட்டையும் நுணுக்கமாக அறிகிறாள். அம்பலும் அலரும் வெளிப்பட அதற்கு நாணுகிறாள். மகளை இற்செறித்து இரவும் பகலும் வெளிச்செல்லவிடாது காக்கிறாள். அதற்கான காரணத்தை மகளிடம் மறைமுகமாகவும் வெளிப்படையாகவும் கூறுகிறாள். எக்காரணம் கொண்டும் குடும்பப் பெருமைக்கு மாசுவரக் கூடாதென்றுதான் மகளை இற்செறிக்கிறாள். இவற்றால் உள்ளத் தவிப்பும், குற்றம் கண்டவிடத்து மகளைத் தண்டிக்கும் தகைமையும் தாயிடம் காணப்படுகின்றன என்பதை அறியலாம்.

களவைத் தடுக்கத் தாய் எடுக்கும் நடவடிக்கைகளுக்கு ஏற்பத் தலைவியும் தன்னைப் பாதுகாத்துக் கொள்கிறாள். அலருக்கும், தாயறிதலுக்கும் அஞ்சும் மகள் களவு வாழ்விற்கு முடிவு காண விழைகிறாள். இச்செறிப்பின் கடுமை காரணமாகவே தலைவி அறத்தொடு நிற்க முடிவு செய்கிறாள்.

## அறத்தொடு நிற்றல்

தாய் தனது மகள் ஒரு தலைவனைத் தானே தேர்ந்தெடுக்கும் அறிவு வளராதவள்; இன்னும் உலக அனுபவம் அற்ற சேய் நிலையில் உள்ளவள் என்றே கருதுகிறாள். களவில் ஈடுபட்டுவிடக்கூடாது என்று முன் எச்சரிக்கையுடன் இற்செறிக்கவும் செய்கிறாள். அன்னையின் கடுங்காப்பையும் மீறி கன்னிமகள் காதல் கொண்டு, கற்புக்கடம் பூண்கிறாள். மனதால் இணைந்த தலைவனுடன்

ஊரறியத் திருமணத்தாலும் இணைய விரும்புகிறாள். வரைவு முயலாத தலைவன் களவு நீட்டிக்க ஊரில் அலர் எழுகிறது. பருவம் அடைந்த மகள்மீது தேவையின்றி அலர் எழுவதை அன்னைதடுக்க என்னுகிறாள்; களவு இருப்பின் குடிப்பெருமை காக்க விரும்பியும் மகளை இற்செறிக்கிறாள்.

இற்செறிப்பால் தலைவனைச் சந்திக்க இயலவில்லை. மகளது தவிப்பு மன அளவிலும், உடல் அளவிலும் வெளிப்படுகிறது. உணவும் உறக்கமும் முன்போல் இயல்பாக இல்லை. செயல்களில் மாறுதல் தெரிகின்றது.

"நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்
செய்முறை மறைப்பினும் செலவினும் பயில்வினும்
புணர்ச்சி யெதிர்ப்பா டுள்ளுறுத்து வருஉம்
உணர்ச்சி ஏழினும் உணர்ந்த பின்றை
மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொருள் நாட்டத் தானும்,"[38]

தோழி தலைவியின் மாறுதல்களை அறிவதுபோலச் செவிலித்தாயும் அறிகிறாள்.

ஐயுற்ற செவிலி நேரடியாகச் சிலபொழுது மகளிடம் கேட்கிறாள். மகள் அஞ்சி மறைப்பினும், நாணத்தால் உரையாதிருக்கவும் கூடும் என்பதால் தோழியிடம் வினவுகிறாள்.

"உற்றுழி யல்லது சொல்லலின் மையின்
அப்பொருள் வேட்கைக் கிழவியி னுணர்ப"[39]

எனத் தொல்காப்பியர் களவைக் குறிப்பாலுணரும் செவிலி தோழியை வினவியறிவாள் என்பதைக் குறிப்பிடுகிறார். தலைவியின் களவை எப்படியேனும் தாய்க்கு அறிவிக்க வாய்ப்பு நாடி நிற்கும் தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்கிறாள்.

அறத்தொடு நிற்றல் – பொருள்

தலைவி, அன்பிற் சிறந்த தலைவன் ஒருவனைத் தன் தலைவனாக ஏற்ற மறைவுத் தொடர்பினை அறத்தின் வழிநின்று வெளிப்படுத்துதல் அறத்தொடு நிற்றல் எனப்படும். இதற்கு, 'அறம்' என்பது 'தக்கது', தக்கதனைச் சொல்லி நிற்றல் எனவும், 'அறம்' என்பது 'கற்பு', கற்பின் தலை நிற்றல் எனவும் பொருள் கொள்வர் இறையனார் களவியல் உரையாசிரியர்.[40] செவிலி இங்ஙனம் வினவி அறிதலையும், தோழி அறத்தொடு நிற்றலையும் நம்பியகப்பொருள்,

"எறிவனை வேற்றுமைக் கேதுவி னாலும்
வெறிவிலக் கியவழி வினாவினும் பூவே
புனலே களிறே யென்றிவை பாங்கி
யேது வாகத் தலைப்பா டியம்பும்"[41]

என்று கூறும்.

அறத்தொடு நிற்றல் நிகழும் காலம்

மகளின் மெலிவு எதனால் ஆயிற்று என்று தாய் ஐயுற்று வினவும் போதும், வெறியாட்டு நிகழும் சூழலிலும், அயலார் வரைவு வேண்டிவரும் நிலையிலும், தலைவன் வரைவுடன் வர அதனைத் தமர் மறுத்த நிலையிலும் தோழி அறத்தொடு நிற்கிறாள்.

1. தாய் ஐயுற்று வினவும்போது தோழி அறத்தொடு நிற்றல்

தலைவியின் ஆற்றாமை தாங்க இயலாத பொழுது தோழி தாய்க்கு அறத்தொடு நிற்கிறாள். அதற்குத் தலைவியின் ஒப்புதல் தேவைப்படுகிறது. தலைவியே தாய்க்குக் கூறும்படி தோழியைத் தூண்டலும், தோழி கேட்டும் கூறாதே எனத் தடுத்தலும் நிகழ்ந்துள்ளன.

1.1 தலைவியே அறத்தொடு நிற்கக் கூறுதல்

முல்லைக்கலித் தலைவியை ஆயர் தலைவன் விரும்புகிறான். கொல்லேறு தழுவியே ஆயர்மகளை மணக்க முடியும் என்று அவனிடம் தெரிவிக்கத் தோழியிடம்

வேண்டுகிறாள் தலைவி. அத்துடன்,

"எந்தையும்,
யாயும் அறிய உரைத்தீயின், யானுற்ற
நோயும் களைகுவை மன்"[42]

என்றும் கூறுகிறாள். தனது நோயை அறிந்து கொண்ட தாய்க்கு அது தணியும் வழியை அறத்தொடு நின்று தெரிவித்தல் தோழியின் கடன்.

"துயர்மருங்கு அறியாத அன்னைக்கு இந்நோய் தணியுமாறு இது என" உரைத்தல் செய்யாத தோழியைக் 'கொடியை' எனக்கடிந்து கொள்கிறாள் தலைவி.[43]

தலைவனைக் கண்ணால் கண்டதால் வந்த காமநோய் தீர்ப்பார் யாரும் இல்லை. குப்பைக் கோழிகளின் தனிப்போர் போல அந்நோய் தானே அழிந்தால் அன்றி வேறுவழி இல்லை என்று தோழியிடம் குறிப்பாகச் சொல்லித் தாயிடம் அறத்தொடு நிற்க வேண்டுகிறாள்.[44] தோழியும் தாய்க்கு எடுத்துரைக்கிறாள்.

1.2 தாய்க்குச் செப்பாதே எனல்

மிகுந்த நாணம் உடைய தலைவி தான் நாடனிடம் கொண்ட காதலைத் தாய்க்கு அறிவிக்க விரும்புவதில்லை. தோழியிடம் தனக்குக் காமநோய் என்பது அன்னைக்குத் தெரியக்கூடாது என்று கேட்டுக்கொள்கிறாள். நாடன் நட்பை அன்னைக்கு 'அறிவிப்பேன் கொல், அறிவியேன் கொல்' என்று இருமனம் கொண்டு தடுமாறுகிறாள். இருப்பினும்,

"யாக்கை,
இன்னுயிர் கழிவ தாயினும் நின்மகள்
ஆய்மலர் உண்கண் பசலை
காமநோயெனச் செப்பா தீமே"[45]

என்று கேட்டுக்கொள்கிறாள்.

காப்பு மிகுதியால் ஆற்றாமையுடன் துன்பம் கொண்டு தவிப்பதைவிட தாயிடம் உண்மை கூறுவதே நல்லது எனத் தலைவயிடம் தோழி கூறுகிறாள். தாய் ஐயுற்று வினவும்போதெல்லாம் உண்மைபோலப் பொய்பேசி மறுத்துக்கொண்டே இருப்பதில் பயன் இல்லை. "நீ என்னைக் கொன்றாலும் சரி; பொறுத்துக் கொண்டாலும் சரி; நான் அறத்தொடு நின்றுவிட்டேன்" என அவளுக்குத் தேறுதல் சொல்லும் தோழியும் உண்டு.[46]

தலைவி கேட்டுக்கொள்வதாலும், மறுத்தாலும் அவள்நிலை தாங்க இயலாது போகும் எனத்தோழி நினைப்பதாலும், தாய் ஐயுற்று வினவுதல் அறத்தொடு நிற்க நல்வாய்ப்பாக அமைகிறது.

## 1.3 உடல்வேறுபாடு கண்டு வினவல்

தலைவியின் உடல் சங்குபோல் வெளுக்கிறது. காமநோய் கொண்டால் மட்டுமே உடல் வெளிரும். ஒருவேளை காமநோயோ எனத் தாய் தோழியை வினவுகிறாள். தோழி அதுவேதான் என அறத்தொடு நிற்க, ஐயுற்றது சரியே எனத் தாய் தெளிகிறாள்.

நுதல் பசந்து, உடல் மெலிந்து, கடலொலி கேட்கும்போதெல்லாம் தலைவனது தேர்மணி ஓசையோ எனக்கருதி உறங்காதிருக்கிறாள் தலைவி. அவள் நிலை கண்ட தாய் தோழியை வினவ, அவள் அறத்தொடு நின்று உறுதிப்படுத்துகிறாள்.

தலைவன் குன்றம் நோக்கி நோக்கித் தன் ஆற்றாமையை மறைத்துக் கொள்கிறாள் தலைவி. முகில்படிந்து மலை மறையும்பொழுது கண்ணீர் மல்கும் மகளைத் தாய் ஐயுறுகிறாள். தலைவியின் வேறுபாடு எற்றினானாயிற்று என்று மகளைப் பலமுறை வினவுகிறாள். தோழியின் கூற்றால் தான் நினைந்தது சரியே எனத் தெரிந்ததும் கோபத்தால் அவள் கண் சிவக்கிறது.[47]

1.4 பூத்தரு புணர்ச்சி

தலைவியின் மாற்றத்திற்குத் தலைவன் தந்த பூக்களும் காரணமாவதைத் தோழி கூறுகிறாள்,

"ஒருநாள் யாங்கள் விளையாடுமிடத்தே
ஒரு தோன்றல் தந்த கோங்கம்பூவால்
இது விளைந்திருக்குமோ? சிறிதும் யானறியேன்"

என்று தானறியாமல் நேர்ந்த பூத்தருபுணர்ச்சி பற்றிக் கூறுகிறாள். அறிந்த புணர்ச்சி பற்றிக் கூறும்போதும்,

"சுனையில் மலர்ந்த நீலப்பூ தந்து கூடிய தலைவன் சால்பு
அளந்தறிதற்கியலாது. பால் வரைந்தமையால் தாமே
எதிர்ப்பட்டுக் கூடிய இருவரும் மீண்டும் சேர வரைவு
முயலவேண்டும். இற்செறிக்கப்பட்ட தலைவி நீலப்பூவை
நோக்கி அழுதற்கு அதுவே காரணம்"

"அன்னையே உன்மகள் பாலும் உண்ணாது பழங்கண் கொண்டு
நனிபசந்தனள் எனவினவுதி. வேங்கை கொய்யும்போது
'புலி, புலி' எனும் பூசல் எழுப்பினோம். வரிபுனை
வில்லுடன் வந்த குன்றுகிழவோன், புலியன்று எனத் தெரிந்தான்.
மீளும்போது தலைவியைப் பன்முறை நோக்கிச் சென்றாள்.
அவனைக் கண்டு, 'இவள் மகனே' என்னும் தலைவியின்
கருத்தை மதிவல்லோர் உணர்வர்"

என்று விளக்கமாகவே எடுத்துரைக்கிறாள்.[48]

1.5 தேரில் வந்த நெய்தல் தலைவன்

அலர் எழுதலால் ஐயுற்று வினவும் தாயிடம்,

"புகார்த் தெய்வத்தின்மீது சூளிட்டுக் கூறுவேன்.
நாங்கள் கடலாடி, சிற்றில் இழைத்துச் சிறு

> சோறட்டு விளையாடும் காலத்துத் தேரில் ஒரு
> தோன்றல் வந்தான். இழிந்த கொழுமீன்வல்சி
> எனினும் உண்டு, தங்கிச் செல்ல விழைந்தான்.
> நாங்கள் மறுத்தோம்; 'யான் போகவோ?' என்று
> கேட்டுக்கொண்டே, தலைவியைக் குறித்த
> நோக்கமொடு பார்த்துத் தன் தேரின் கொடிஞ்சி
> பற்றி நின்றான். அவனால் போலும் இந்நோய்
> மகளுக்கு வந்தது"[49]

என்று கற்புக்கடம் பூண்டதைத் தெரிவிக்கிறாள்.

"துறைவன் வந்த தேரின் குதிரைகள், காலில் சுறாமீன் தாக்கியதால் புண்பட்டன. குதிரைகள் இளைப்பாற வேண்டித் தலைவன் சோலைமணலில் தங்கியிருந்தான். அங்கே ஆயத்துடன் விளையாடிய தலைவி, உப்பின் குப்பை ஏறி வருதியில் எண்ணினாள். அத்தலைவனுடன் நின்மகளை இவ்வூர் இணைத்து யாண்டும் பழிதூற்றித் திரிவது கொடுமை. இவ்வளவிற்கும் நின்மகள் அப் புதியவனைக் கண்டு அஞ்சினாளேயன்றி அவனை விரும்பி நோக்கினாளும் இல்லை. அதனால்நின் மகள் தவறிலள்; அவளை அலைக்காதே"[50] எனக் குறிப்பாகவும் எடுத்துக் கூறுகிறாள் தோழி.

## 1.6 தாயின் ஐயம் தெளிவாக்கப்படுதல்

தோழியின் கூற்றுக்களால் ஐயம் நீங்கி, தாய் மகளின் மனத்திற்கு ஆவன செய்ய உடன்படுகிறாள். தலைவியின் வருத்தம், தாயின் வரைவுநேர்தலால் மறைகிறது. வரைவுடன்பட்ட தாய்,

> "தலைவன் வரைவு வேண்டி வருவானா?
> மகள் மணம் தடையின்றி நடக்குமா?
> தலைவன் நற்குடிப்பிறந்தவன்தானா? கொண்ட
> சூள் மறவாது காப்பானா? அவன் தன்
> மகளிடம் கூறிய திறம் யாது?"

எனப் பலவாறு எண்ணிப் பதைக்கிறாள். இவ்வாறு ஐயுறுதற்கேற்ற மடமையும் தாயிடம் உண்டு என்பதை,

"உயிரு நாணு மடனு மென்றிவை
செயிர்தீர் சிறப்பின் நால்வர்க்கும் உரிய"

என்ற நூற்பா உரையில்,

"உம்மை ஐயமாதலின்... செவிலி
பிறரை வரைகின்றானோ எனத் தலைவியை
வினவலும் பிறவுமாம்"[51]

என்கிறார் நச்சினார்க்கினியர்.

தாயின் மனத்தவிப்பை மகளும் உணர்கிறாள். தலைவன் நற்குடிப் பிறந்தவனே; தான் கொடுத்த வாக்கைக் காப்பவனே எனத் தன் தாயின் ஐயம் நீங்குமாறு தாய்க்கு எடுத்துக் கூறுகிறாள்.

"தன்கடற் சேர்ப்பன் எம்தோள் துறந்தனனாயின்
அவன் நயக்கும் வண்ணம் வேறொருதோள்
உண்டோ? நம்தோள் அத்துணையளவு சிறப்பற்றது
அல்லவே? அவனும் அவற்றைப் பெரும்பேறாகவே
மதித்துள்ளான். அவன் விரைந்துவாராமைக்குக்
காரணம் வரைபொருளேயன்றி நம்மை மறத்தல்
இல்லை"

"நீ ஐயுறுமாறு அவர் எம்மைத் துறந்தாராயின்
எம்மை அவர் நினைத்தலும், அந்நினைவு
எம்நெஞ்சில் அவரை நினைப்பித்தலும் செய்யா.
ஆதலின் நீ வறிதே ஐயுறல் வேண்டா"[52]

என்கிறாள் தோழி.

தலைவன் வரவை ஐயுற்ற செவிலியை மகிழ்விக்கும் வண்ணம் தலைவன் தேர் வருகிறது. மகளின் மெலிவு குறித்து அவலமுற்ற தாயின் நெஞ்சைத் தன்பக்கம் இழுக்க முயலும் தோழி ஒவ்வொரு முறையும்,

"அன்னை வாழி வேண்டன்னை"[53]

என விளிக்கிறாள். தலைவன் வரைவொடு வரைதலால் தலைவியின் நோய்க்கு மருந்தாகிய கொண்கன் என்றே அழைக்கப்படுகிறான். தலைவியும் தாயும் பட்ட துயரம் முற்றும் நீங்க, தேர்மணிக் குரலுடன் பலரும் அறிய அவன் தேர் வந்ததைச் சுட்டிக்காட்டுகிறாள் தோழி. தண்ணந்துறைவன் வரைவொடு வந்ததைக் கண்டதும் வெளுத்திருந்த தலைவியின் நெற்றி பொன்னெனச் சிவக்கிறது. அதைத் தோழி தாய்க்குக் காட்டி மகிழ்விக்கிறாள்.

தலைவனின் உயர் பண்பு கண்ட தாயர் ஆற்றவும் மனம் மகிழ்கின்றனர். தலைவன் மணம் செய்ததும் மகளது மாமைக்கவின் சிறந்து பொருந்திவிட்டது. மகளின் மனமும் உடலும் இழந்த நலத்தை மீண்டும் பெறக் காரணமாகிய வரைவால் தாய் மனம் நிறைகிறாள். அன்னை வினவத் தோழி உண்மையை உரைக்கத் தாய் மணம் நடைபெற ஆவன செய்கிறாள்; அன்னைக்கு உரைக்கத் தேவை இல்லை எனத் தலைவி கருதும் சூழலில் தோழி அறத்தொடு நிற்கத் தலைவி தன் இசைவு தருவதில்லை.

2. <u>வெறியாடலின் போது அறத்தொடு நிற்றல்</u>

தலைவி, தோழியிடமிருந்து தக்க பதில் பெறமுடியாத தாய் மகளின் நோய் இன்னதென அறியக் கட்டு, கழங்கு மூலம் குறிபார்க்கிறாள்.

> "மகளின் உடல்நோய்க்குக் காரணம்
> அறிய முடியாத ஆர்வமிக்க தாய்,
> மகள் அணங்கால் வருத்தப்பட்டாள்
> எனக் கருதுவாள்"[54]

என்கிறார் கே.கே. பிள்ளை.

2.1 அகவன் மகளிர்

வெறிபாடிய காமக்கண்ணியார் வெறியாடலில் தலைவியின் நிலைகுறித்து அகநானூற்றில் குறிப்பிடுகிறார். முதலில் தாய் முதுபெண்டிரான அகவன்மகளிரை அழைத்துக் குறிகேட்கிறாள். இவர்கள் ஆடுமகள், கணிக்காரிகை, சாலினி என்கிற தேவராட்டியர், செம்முதுபெண்டிர், வெறியாடுமகளிர் என்றும் அழைக்கப்பட்டுள்ளனர்.[55]

2.2 கட்டு

அகவன் மகளிர் முறத்திலே பிடிநெல்லை இட்டு எதிரே தலைமகளை நிறுத்தித் தெய்வத்திற்குப் பிரப்பிட்டு வழிபாடு செய்து, அந்நெல்லை நந்நான்கு ஆக எண்ணி, எஞ்சியவை ஒன்றிரண்டு மூன்றளவும் முருகணங்கெனவும் நான்காயின் பிற நோயெனவும் கூறுவதைக் 'கட்டு' என்பர்.

"குன்ற நாடன் பிரிவிற் சென்று
நன்னுதற் பரந்த பசலைகண் டன்னை
செம்முது பெண்டிரொடு நெல்முன் னிறீஇக்
கட்டிற் கேட்கும்"[56]

என்பதால் தோழி தலைவியிடம்,

"நாம் தினை காக்கச் சென்று குறுகிளி
கடிந்த இந்நோயைப் பெற்றிருக்க, குறிகூறும்
பெண்டிர் இதை அணங்கு என்பரோ?
கட்டும் நெடுவேள் என்னுமோ?"[57]

என வினவுகிறாள்.

"செறிந்திலங் கெல்வளை நெகிழ்ந்தமை நோக்கிக்
கையறு நெஞ்சினள் வினவலின் முதுவாய்ப்
பொய்வல் பெண்டிர் பிரப்புளர் பிரீஇ
முருக னாரணங் கென்றலின்"[58]

நெடுவேள் பேண இவள் நோய் தணியும் என்னும் முதுவாய்ப் பெண்டிரின் கூற்றை ஏற்று அன்னை வேலனை அழைத்து வெறியாட முயல்கிறாள்.

குறிஞ்சிப்பாட்டு நச்சினார்க்கினியர் உரையில் தலைவியின் விறலிழை நெகிழ்த்த வீவருங் கடுநோய் எதனாலாயிற்று என்பதைத் தாய்,

"அகலுளாங்க ணறியுநர் வினாயும்"

என்ற அடிக்கு,

"அகன்ற இடத்தையுடைய ஊரிடத்துக்
கட்டினாலும் கழங்கினாலும் எண்ணி-
யறிவாரை வினாவி, அவர் தெய்வத்தான்
வந்த வருத்தமென்றலின்"[59]

என்று குறிப்பிடுவதால் கட்டிற் கேட்பது பழங்கால வழக்கம் என்பது புலனாகும். இம்முறை பிற்கால இலக்கியமான பெருங்கதையில்,

"கட்டறி மகடூஉக் கடிமுறத் திட்ட
வட்ட நெல்லு மாண்பில் பெரிதென"[60]

எனப் பயின்று வந்துள்ளது. குறவஞ்சி இலக்கியத்தில் கட்டுவிச்சி குறிகூறும் முறை விரிவாக விளக்கப்படுகிறது.

அகவன் மகளிர் நெடுவேள் அணங்கிற்று எனக் குறிகூறுமுன் தடுப்பதற்குத் தோழி முயல்கிறாள். குறிகூறுமுன் அகவன் மகளிர் பாடல்பாடும் முறையை அதற்குப் பயன்படுத்திக் கொள்கிறாள். தெய்வத்தை வணங்கிப் பாடும் அகவன் மகளிரை நோக்கி,

"தலைவன் குன்றம் பாடும் பாடலை
இன்னும் பாடுக"[61]

எனக் குறிப்பாகக் கூறி, அக்குறிப்பிட்ட மலைகிழவோனே தலைவியின் நோய்க்குக் காரணம் என உணர்த்துகிறாள்.

## 2.3 கழங்கு

கழங்கு என்பதும் குறிபார்க்கும் ஒருமுறையாகும்.

"கழற்சி வித்துப் பலவற்றை முருகன்முன்
போகட்டு வேலன் தன் தலையில் ஆடைசூடிக்
கையிற் பல தலைகளிற் சிறு பைகளைக்
கட்டிய கோலொன்றேந்தி அக்கோலால்
கழங்கு வித்துக்களை வாரியெடுப்புழிக்
குறிப்புக் காணுகின்ற ஒருவகைக் குறி"[62]

என நற்றிணை உரையாசிரியர் தெரிவிக்கிறார். கழங்குக் குறிபார்க்கும் வேலனை,

"அறுவை தோயும் ஒருபெருங் குடுமிச்
சிறுபை நாற்றிய பஃறலைக் கொடுங்கோல்
ஆடுவ தறியும் முதுவாய் வேல
கூறுக மாதோநின் கழங்கின் திட்பம்"[63]

என அகநானூற்று அன்னை வருணிக்கிறாள்.

பெய்யப்பட்ட புதுமணலில் கழற்சிக் காய்களை இட்டும் பார்ப்பதுண்டு.

"பெய்ம்மணல் வரைப்பிற் கழங்கு படுத்து"[64]

"பெய்ம்மணன் முற்றங் கவின்பெற இயற்றி
... ... ... வேலன்
கழங்கினா னறிகுவது"[65]

என்றபடி கழங்கு குறி சொல்வது பொய்க்காது என நம்பினர்.

"பொய்படு பறியாக் கழங்கு"[66]

என அதனைப் பாராட்டினர்.

தலைவியின் துன்பம் ஒருசிறிதும் இன்னது என்று அறியாத வேலனைத் தாய் அழைத்திருக்கிறாள். பலவாகிய பிரப்புக்களைப் பரப்பி வைத்து, மணல் பெய்த முற்றத்தில் மெய்ம்மை கூறும் கழங்கினால் நோய் தணியின் நன்று என்றிருக்கின்றனர் தலைவியும் தோழியும்.

"நன்னுதல் பாய படர்மலி அருநோய்
காதலன் தந்தமை அறியா துணர்த்த
வணங்குறு கழங்கின் முதுவாய் வேலன்
கிளவியின் தணியின் நன்றுமன்"[67]

"அத்துடன் நாம் காதலித்தும் அவன் காதலின்றி இன்னும் வரையாதிருப்பது எக்காரணத்தினாலோ என்றும் வினவுவோம்"[68] என்கிறாள் தோழி.

## 2.4 கன்னம் தூக்குதல்

கழங்கு, நோய் முருகனால் வந்தது என்று குறிப்பிட்டால் அதற்குக் கன்னம் தூக்குதல் உண்டு.

"பொய்யா மரபி னூர்முது வேலன்
கழங்குமெய்ப் படுத்துக் கன்னந் தூக்கி
முருகென மொழியும்"

"பொன்னகர் வரைப்பிற் கன்னந் தூக்கி
முருகென மொழியும்"[69]

எனவரும் பாடல்களில் 'கன்னம்' என்பது நோய்தணிதற்குப் பண்ணிக் கொடுக்கும் படிமம் என்று உ.வே. சாமிநாதையரும்,

"நோய் தணிதற்குப் பண்ணிக் கொடுக்கும் மந்திரத்தகடு
உள்ளே வைத்துக் கட்டிய தாயத்து"( Talisman )

என்று ஔவை சு. துரைசாமிப் பிள்ளையும் கூறுகின்றனர்.[70]

> "இது தெய்வத்தானாயிற்றோ, பிறிதொன்றினான் ஆயிற்றோ எனத் தெய்வம் பராவி, அக் கழற்காய்களை எண்ணிப் பார்த்தல் கழங்கு மெய்ப்படுத்தல் என்றும், கழற் காய்களைத் தொகுத்து அவற்றிற்கு மஞ்சட் காப்புக்கட்டி 'இம்மையல் தீருங்காறும் இக்காப்பினை அணிந்திருக்க' எனக் கட்டுவது கன்னம் என்றும் கூறுப"

என்பது ஔவை சு. துரைசாமிப்பிள்ளையின் உரை விளக்கமாகும்.

கட்டிலும், கழங்கிலும், கன்னம் தூக்கியும் நோய் தீரவில்லை என்பதால் முருகு அணங்கிற்று என்றே அகவன் மகளிரும், வேலனும் கூறிவிடுவர். தலைவியின் துயரம் இது என அறியாதவன் வேலன் என்பதை அறியாத தாயும் அதை நம்பி, வெறியாடலுக்கு ஆவன செய்கிறாள்.

## 2.5 வெறியாடல்

வெறியாடல் குறித்து நா. செயராமன்,

> "வேலைக் கையிலே உடையவன் வேலன் எனப்படுவான். இவன் முருகனை வழிபடும் பூசாரியாவான். மறியறுத்துக் குரவை ஆடிச் செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி மாலை சூட்டி வேலன் வெறியாடுவது வழக்கம். பெண்ணும் வெறியாடுவது உண்டு. வெறியாடல் என்பது முருகனை வழிபடும் முறைகளுள் ஒன்று. முருகனை வழிபட்டால் தலைவியின் நோய்தீரும் எனக் கருதித் தலைவியின் தாய் வேலனை அழைத்து வெறியாடுவாள். வெறியாடலுக்கு முன்போ, வெறியாடலின் போதோ தோழி தாய்க்கு அறத்தொடு நிற்பாள்"[71]

என்று கூறுகிறார்.

## 2.6 வெறியாடலுக்கு முன் அறத்தொடு நிற்றல்

வெறியாடலுக்கு முன் அறத்தொடு நிற்க தலைவியிடம் தோழி அனுமதி வேண்டுகிறாள்.

"நாம் அறிவித்தாலன்றி நம்நோய் இன்னதென
அறியாதிருக்கும் அன்னை அருந்துயர் உறுகிறாள்.
அதனால் வெறியாடல் முதலிய நமக்கு
நாணுத்தரும் செயல்களைச் செய்யுமுன்
சேய்மலை நாடன் செய்ததே இந்நோய்
எனக் கூறிவிடுவோம்"

"சுனைப்பூ பறித்து, மாலை தந்து காந்தள்
கண்ணி தந்து தலைவன் அருளியது இந்நோய்.
நெடுவேளால் வந்திருக்கும் என அன்னை
நம்புகிறாள். தன்னால் வந்தது அன்று என
அந்நெடுவேள் கண்ணின் குறிப்பாலோ,
கனவிலோ சென்று அன்னையிடம் கூறினால்
ஏதம்உண்டோ?"[72]

நெடுவேள் அப்படிக் கூறாததால் தான் கூறுதலே சரியாகும் என்கிறாள் தோழி. நேரடியாகத் தாயிடம் துணிந்தும் கூறுகிறாள்.

"கடவுளைப் பேணுதலைத் தவிர, தலைவியின்
களவைப் பற்றி வேறொன்றும் அறியாத
வேலன், வெறி என்றே கூறுவான். நோய்க்கு
மருந்தும் கூறான்; அவன்பால் கேட்பது
அறிவின்மை. அதை மனங்கொள்ளாது மகளது
புதுமலர் மழைக்கண் புலம்பிய நோய் இன்னதென
அதன்முதல்நாடி வாய்ப்பச் செய்க"[73]

எனத் தொடங்குகிறாள். தன்னைத் தாய் நேரடியாக வினவவேண்டும் என்ற குறிப்பு இதில் தொனிக்கிறது.

அன்னையின் அமரா நோக்கம், வாடை மாலைதரும் வருத்தம், வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவனின் காலநீட்டிப்பு இவற்றால் வருந்தும் தலைவி, தலைவனது குன்றம் பார்த்துத் தன்னை ஆற்றிக் கொள்கிறாள்.

"அசோகந் தழையைத் தந்து, தினைப்புனத்தில் தலைவியின்
அன்பன் ஆன ஒருவன் உளன். அதை அறியாது அலரி
மாலையை முருகனுக்குச் சூட்டி வெறியெடுத்து மயங்குகின்றது
இவ் அழுங்கலூர்"

"வெறி எடுப்பதற்குப் பதிலாக நம் படப்பைத் துறுகல் ஏறி
தலைவன் நாட்டுப் பூக்கெழு குன்றத்தைப் பார்த்தாலே
தலைவியின் நோய் தணியும்"

"இளமை தீர்ந்தனள் என்று அருங்கடிப்படுத்துக் காத்த போதும்
பசலை நோயுற்றனள் மகள். உண்மையை உணராது தெய்வம்
பேணி வருந்திய நெஞ்சுடைய அன்னையே! என் தோழியை
மீண்டும் ஒருமுறை தினைப்புனம் காத்துவருமாறு சொல்வாயானால்
தான் இழந்த நலத்தை மீண்டும் பெறுவாள்"[74]

என்றின்ன கூறித் தோழி வெறி விலக்குகிறாள்.

தாயிடம் தலைவிக்கும் தோழிக்கும் இயல்பான அச்ச உணர்வு இருந்தாலும் நாணத்தின் காரணமாகவும் வெறியாடலுக்கு முன் அன்னையிடம் நேரடியாக அறத்தொடு நிற்காமல் சில வினாக்களைத் தொடுப்பதன் மூலமும் தன் குறிப்பை வெளிப்படுத்துவது உண்டு.

"உண்டுறை யணங்கிவ ளுறைநோ யாயிற்
றண்சேறு கள்வன் வரிக்கும் ஊரற்கு
ஒண்டொடி நெகிழச் சாஅய்
மென்றோள் பசப்ப தெவன்கொ லன்னாய்"

"பெருந்துறையில் கண்டு இவளை அணங்கு
உறச்செய்தவன் அருந்திறற் கடவுள் ஆகிய

முருகன் அல்லன்! ஏனெனில் அவன்
நெய்தல் நறுமலர் மாலையன்!"[75]

என்று தெளிவாக்குகிறாள் தோழி. அவள் கூற்றில் இருந்து மகளுக்குத் தலைவன் இருக்கிறான் என அறிகிறாள் தாய். அப்பொழுது,

"மகள் தேர்ந்த தலைவன் அவளுக்கு
ஏற்ற உயர்ந்த உள்ளத்தனாய் இருப்பானோ?"

என்ற கவலை தாய்க்கு ஏற்படுகிறது. அதைத்தன் கூற்றால் மாற்றுகிறாள் தோழி.

"தண்ணறு நெய்தற் றளையவிழ் வான்பூ
வெண்ணெ லரிநர் மாற்றின ரறுக்கு
மெல்லம் புலம்பன் மன்றவெம்
பல்லித முண்கண் பனிசெய் தோனே"[76]

என்றபடி ஐங்குறுநூற்றுத் தலைவன் நெல்லை அரியும்போது நெய்தல் பூவைக் களையாது விடும் நற்பண்பினன். பிறர்க்கு நன்மை செய்பவனே அன்றி வருத்தம் தரத்தக்கவன் அல்லன். விரைவில் வரைதற்கு வருபவனே என உள்ளுறை வைத்துக் கூறுகிறாள்.

தோழியையோ, தலைவியையோ ஏதும் வினவாது வேலனை வரவழைத்து, தாய் வெறியாடலைச் செய்ய முனையும்போது தோழி தலைவி, வேலன், முருகன் இவர்களை வினவுவாள் போன்று அறத்தொடு நிற்பதும் உண்டு.

2.7 வெறியாடலின் பொழுது அறத்தொடு நிற்றல்

2.7.1 தலைவியிடம் வினவல்

நாடனிடம் தான் கொண்ட நட்பை அறியாத வேலனைத் தாய் வரவழைத்துள்ளாள். அன்னையின் அறியாமையை எண்ணி நகைக்கும் தலைவியைத் தோழி 'செறியெயிற்றோயே' என விளிக்கிறாள்.

"வெறியாடும் வேலன் நாடுகெழுநெடுந்தகை
ஆகிய நம் தலைவன் குன்றத்தைப் பாடாமல்
விட்டுவிட்டால், இவ்வெறியாடல் அவனுக்கு
என்ன பயனைத் தரும்?"[77]

என்கிறாள் தோழி. தலைவன் குன்றம் பாடினால் தலைவி மகிழ்வாள்; அவள் களவு வெளிப்படும்; தாயும் வரைவு நிகழ்த்த நோய் மறையும்; வேலன் தனது வெறியாட்டால் நன்மை விளைந்தது கண்டு மகிழ்வும், பொருளும் அடைவான். அவ்வாறு அவன் பாடாது ஒழியின், வேலன் பொய் கூறினான்; அவன் வெறிய-யர்ந்தும் நோய் தணியவில்லை என்ற பழியன்றோ அவனுக்கு வாய்க்கும் என்பது தோழியின் குறிப்பு. ஒன்றும் அறியாத வேலனை, அன்னை ஆகுவது அறிவன் என்று முழுவதும் நம்புகிறாள். எதுபற்றி வெறியாடினும் வேலன் இறுதியில் அந் நோய்க்குக் காரணம் 'முருகன்' என்றே கூறுவான். அவன் கூறும் அப்பெயர் தாம் விரும்பும் அருவரை நாடனுடைய பெயராக இருக்குமோ? என்றும் தோழி வினவுகிறாள்.[78] அதைக் கேட்கும் தாய் நாடன்யார் என அறிய முயல்வாள் என்பது தோழியின் கருத்து.

2.7.2 கழங்கிடம் வினவல்

கழங்கினால் இவள் நோயை அறிதற்கியலும் என வேலன் கூறியதைத் தாய் நம்புகிறாள்.

"கழங்கினா னறிகுவ தென்றால்
நன்றா லம்ம நின்றவிவள் நலனே"[79]

என்று கூறுவதன் மூலம் தோழி வெறிவிலக்குகிறாள். தலைவியது நின்றநலம் என்பது தலைவனுக்கு உரிமை பூண்ட கற்பறமே அல்லது, வெறியாடலின் விளைவு அன்று. வெறியாடுதற்குப் பதிலாக இவள் நோயை நாமறிந்து தலைவனுக்குத் தரவேண்டும் எனத் தாய்க்கு அறத்தொடு நிற்கிறாள்.

"சூர்மலை நாடனை அறியாத முருகன்
என்று கழங்கினால் அறிவிக்கும் வேலன்,
நோய்செய்தானை விடுத்து முருகனைக்
கூறிய குற்றத்திற்கு ஆளாகிறான்; ஆதலின்
வேலன் இரக்கத்திற்குரியவன்! வாழிய!"[80]

என வாழ்த்தும் தோழியின் செயல் தாயின் கவனத்திற்குரியதாகிறது.

கழங்கு என்றும் பொய் கூறாதது; இப்போது கூறிற்றோ என நேரடியாகக் கழங்கிடம் பேசுவதுபோல் தாய்க்குக் கூறுகிறாள்.

"பொய்படு பறியாக் கழங்கே! ...
அண்டகை விறல்வே ளல்லனிவள்
பூண்டாங் கிளமுலை அணங்கி யோனே"[81]

என்னும் தோழியின் நேரடிக் கருத்து கவனிக்கப்படுகிறது.

வேலன் பொய்யா மரபினன் என்றே குறிகேட்க அழைக்கிறார்கள். ஈண்டு அவன் கழங்கும் உரை பொய்த்தமை வியப்பு. விறல்வேளான முருகன் அணங்குறுவிக்கவில்லை; அண்டகையே தலைவியை முயக்கத்தால் வருத்தியவன் என்று உண்மை செப்புவதால் தலைவனுடன் கூட்டம் உண்மையை வெளிப்படுத்துகிறாள். கழங்கு கூறுவது உண்மையே என வேலன் மெய்ப்படுத்தினால், அது இளமை, அழகு, மணம் உடைய தலைவனுக்கும் பொருந்தும்; அந்த வகையில் வேலன் பொய்யா மரபினன் என ஏற்றுக்கொள்ளலாம் எனத்தோழி கருதுகிறாள்.

"நாடற்குக்
காதல் செய்தும் காதலம் அன்மை
யாதெனிற் கொல்லோ தோழி வினவுகம்
பெய்ம்மணல் முற்றங் கடிகொண்டு
மெய்ம்மலி கழங்கின் வேலற் றந்தே"[82]

எனக் கழங்கிடம் காதலன் இன்னும் வரைய வராத காரணம் வினவுவாள் போலக் கழங்கை முன்னிறுத்தி, வெறிவிலக்கி அறத்தொடு நிற்கிறாள்.

### 2.7.3 வேலனிடம் வினவல்

கழங்கு பொய்த்துக் கோட்டம் காட்டியபின் வெறியாடல் நடக்கிறது. வேலன் மறி கொன்று வணங்குகிறான். உயிரற்ற பொம்மைப் பெண்புலியாயினும் காமத்தால் புணரும் ஆண்புலி வாழும் நாடன் உண்மை அன்பின்றி காமம் மட்டுமே உடையனாய் களவை நீட்டிக்கிறான். அதனால் வந்த நோயை வேலன், வெறியாடல் தீர்க்கும் என நம்புகிறான். மறி அறுத்து அன்னை அயரும் முருகு தலைவியின் பொன்னேர் பசலைக்கு உதவாது எனத் தோழி அறிவாள்,

"வேலன் இன்னியங் கறங்கப் பாடிப்
பன்மலர் சிதறிப் பலிகொடுத்துப்
பரவினால், நாடன் மார்பு பெறாது
உற்ற பசலை நோய் தீரும் என்றால்
அதனினும் கொடியது ஒன்றில்லை"[83]

எனத் தலைவியிடம் பேசுகிறாள்.

தினைப்புனத்தில் கிள்ளை கடிந்தோன் தந்த நோய் இது என அறியா அன்னை, தன் மகள் துன்பம் அறிய வேண்டுமென வேலனை அழைக்கிறாள். அவனோ சிறுமறியைக் கொல்கிறான். அவ்வுயிரைக் காக்க வேண்டுமெனில் இழந்த அழகை மீட்கத் தலைவனை நாடிச் செல்லவேண்டும் அது முடியாதே என வருந்துகிறாள் தலைவி.

மலைகெழு நாடன் மணவாததால், வந்த நோயை வேறாக உணர்ந்ததால்,

"அன்னையும் பொருளுகுத் தலமரும் மென்முறிச்
சிறுகுள கருந்து தாய்முலை பெறாஅ
மறிகொலைப் படுத்தல் வேண்டி வெறிபுரி

ஏதில் வேலன் கோதை துயல்வரத்
தூங்குமாயின் அதூஉம் நாணுவல்"[84]

என்று தன்பொருட்டு மறி கொலையாதல் குறித்தும் தான் நாணுவதாகக் கூறுகிறாள். நேரடியாக வினாத் தொடுத்து வேலனையும் தடுக்க முயல்கிறாள்.

"முருகயர்ந்து வந்த முதுவாய் வேல
சினவ லோம்புமதி வினவுவ துடையேன்"

எனப் பணிவாக வேண்டுகிறாள். சிறுமறி கொன்று, குருதியை நெற்றியிலே தடவி, பலிகொடுப்பானாயின், அப்பலி தலைவியை வருத்தும் சிலம்பனின் மார்பைச் சென்றடையுமா என்பது போல,

"சிலம்பன் ஒண்தார் அகலம் உண்ணுமோ
பலியே?" என்கிறாள் குறுந்தொகைத் தோழி[85]

இப்படி பலி தருவதற்குமுன் வெறிவிலக்கும் தோழி,

"அன்னை தந்த முதுவாய் வேலன்
நம்நோய் 'முருகனால் வந்தது; தனி
மருந்து அறிவேன்' என்றால் நாம்
அவனிடம் 'நும் இறை காட்டுவிலங்குகளை
வேட்டையாடுமோ?' என வினவலாம்."[86]

என்கிறாள்.

2.7.4 முருகனிடம் வினவல்

தலைவியின் துன்பம் தாங்காத தோழி, வேலனிடம் கேட்பது போல முருகனையும் கேட்கிறாள்.

"சூரரமகளிர் ஆடுகின்ற மலைநாடனைப்
புணர்ந்ததால் ஏற்பட்ட இக்காமநோய்,
முருகனே, உன்னால் ஏற்பட்டது அன்று
என்பதை அறிந்தும் வேலனால் நீ வேண்டப்
படுகிறாய்! ஆதலால் கடவுளாக இருப்பினும்
உறுதியாக நீ அறியாமை உடையவனே!
இம்மடமையுடன் நீ நெடுங்காலம் வாழிய!"

என்பது நற்றிணைத் தோழியின் வாக்கு.

"மடவை மன்ற வாழிய முருகே"[87]

எனக் கடவுளையே மடவை எனக் கூறியதால் தாயின் கவனம் ஈர்க்கப்படுகிறது.

தலைவியின் நோய் தன்னால் உண்டாக்கப் பட்டதன்று எனத் தெரிந்தும் முருகன் வேலனின் பலியை ஏற்பான் எனில் அவன் மடமையுடையோன். இப்போது தான் அறிவித்த களவை அன்னை உணர்ந்தும், வரைவிற்கு முயலவில்லை எனில், அவளும் அறநெறி நில்லா மடமைக்கு உரியவள் என்பது தோழி உணர்த்தும் குறிப்பு.

தாயின்மீது கொண்டிருக்கும் மதிப்பினாலும், வயது காரணமாகவும் தோழி, தாயிடம் பேசும்போது நயந்தும், பயந்தும் பேசுகிறாள். கட்டுவிச்சி, கழங்கு, வேலன், முருகன் இவர்களிடம் உரையாடும்பொழுது சில கடிந்துரைகளைப் பயன்படுத்துகிறாள். இப்படிப்பட்ட பாடல்களை ஆராயும்பொழுது, தாய் தலைவியின் களவை இன்னும் உணராதிருத்தல், உண்மைநிலை என்ன என்று ஆராயாது கட்டு, கழங்கு, வெறி போன்ற வெற்றுச் செயல்களில் காலத்தையும், பொருளையும் ஒருங்கே பயனின்றிச் செலவிடல் ஆகியவை தோழிக்கு ஒருவித ஆற்றாமையைத் தருகிறது என்பது புலப்படும். எனவே தொழி தனக்குக் கிடைத்த வாய்ப்புகளை எல்லாம் மிக நன்முறையில் பயன்படுத்தி அறத்தொடு நிற்கிறாள் என்பது தெளிவாகிறது.

வெறியாடலுக்கு அஞ்சும் தலைவியின் நிலை

தனக்கும் குலத்திற்கும் பழிதரும் செயலாக வெறியாட்டைக் கருதுகிறாள் மகள். தலைவன் வரைவு வேண்டி வந்துவிட்டால் வெறியாட்டைத் தவிர்த்துவிடலாம் என்பது அவள் எண்ணம். எனவே தோழி மூலம் தலைவனுக்கு வெறி அச்சுறுத்தப் படுகிறது. தாய் வெறியாடும் அளவிற்கு மகளது சோர்வு வெளிப்பட்டமையும், வெறியாட்டில் களவு வெளிப்படாவிடில் தலைவியை இழக்கவும் நேரிடும் எனபதும், களவு வெளிப்பட்டால் தலைவனைப் பற்றிய கணிப்பு தாயின் மனதில் தாழ்ந்துவிடும் என்பதும் தலைவனுக்கு உணர்த்தப்படுகின்றன.

> "வெறியாடல் கருத்துக் கொண்ட பாடல்கள்
> அனைத்தும் தலைவன் சிறைப்புறமாக
> இருக்கும் பொழுது கூறியதாகவே
> பாடப்பட்டுள்ளதைக் காணும் பொழுது,
> அவனை அச்சுறுத்தி வரையத் தூண்டும்
> மறைமுகமான உத்தியாகவே தோழி
> இதனைப் பயன்படுத்தி இருக்கலாம் என்ற
> முடிவுக்கு வரத் தோன்றுகிறது."[88]

என்கிறார் டாக்டர் இராம. சண்முகம்.

வெறியாடலில் களவு வெளிப்பட்டாலும் துன்பம்; வெளிப்படாவிட்டாலும் துன்பம் என்ற நிலையில் தலைவனைத் தூண்டி வரைவு முடுக்கும் தலைவி, வெறியாடலுக்கு மிகவும் அஞ்சும் நிலையைப் பல பாடல்களில் காணலாம்.

வெறியாடலுக்கு அஞ்சாத தலைவி

வெறியாடலை ஒரு பொருட்டாக மதியாது அதைப்பார்த்து நகைக்கும் மகளும் உண்டு. வெறிஎடுக்கும் பொழுது உண்மையாகவே தான் நெடுவேளால் அணங்கியது போன்ற தாய் நினைக்குமாறு நடந்துகொள்கிறாள். நாடனுடன்

தான் கொண்ட நட்பை வேலன்தான் அறியான் எனில் தாயும் அதை அறியாதது நகைப்புக்குரியது.

"மலைநாடன் நம் இல்லோர் செய்யும்
பெருநகைப்புக்கு இடமான வெறியாடல்
முதலிய செய்கைகளைக் காணவிரைந்து
வரட்டும்"[89]

என்று தலைவன் வருகை களவை வெளிப்படுத்தி, வெறியின் பயனின்மையைக் காட்டட்டும் என்கிறாள்.

கான்கெழுநாடன் மார்பு தந்த வருத்தம் மகளை மெலிவித்தது. அதை அறியாத முதுவாய்ப் பெண்டிர் கூற்றை நம்பி, பலி தந்து தாய் முருகாற்றுப்படுத்துகிறாள். மகள் அதுபோலவே நடந்து கொள்கிறாள். அன்று இரவே தலைவன்வர, அவனுடன் இன்னுயிர் குழைய முயங்கி, இழந்த நலம் பெறுகிறாள் தலைவி. வெறியாடலால் மகள் நலம் பெற்றதாகத் தாய் எண்ணுகிறாள். அவளது அறியாமையையும், வெறியாடலையும் நினைத்து மகள் சிரிக்கிறாள்.

"நக்கனெ னல்லனோ யானே யெய்த்த
நோய்தணி காதலர் வரவீண்
டேதில் வேலற் குலந்தமை கண்டே"[90]

என்பது அவள் எள்ளற் குறிப்பு.

<u>வெறிஎடுத்தும் நோய் தீராமை கண்டு தாய் வருந்தல்</u>

கட்டுவிச்சி, வேலனை வினவி, அவர்கள் சொன்னபடி வெறியாடல் முதலிய வழிபாடுகள் நடத்தியும் நோய் தீரவில்லையே எனக் குறிஞ்சிப்பாட்டுத் தாய் மிக வருந்துகிறாள். நீர்த்துறையிடத்தே நிலைபெற்றுள்ள முருகனுக்குக் கையுறையாகக் கள்ளும், கண்ணியும், வெள்ளாடும் செலுத்தியும் நோய்தணியாதது கண்டு அகநானூற்றுத் தாய் வருந்தி அழுகிறாள்.

நோய்க்கு மருந்தாகாத வேற்றுப் பெருந்தெய்வம் பலவுடன் வாழ்த்தி, மறியறுத்து தினைப்பலி கொடுத்தாள் தாய். தலைவனுக்குக் கற்புக்கடம் பூண்ட தலைவியோ, வெறியாட்டில் முருகனை வணங்கவில்லை. அதனால் பெண் பேய் கொள்ளப்பட்டாள் என்று தாய் வருந்துகிறாள், அவள் வருத்தம் தீர்க்கத் தலைவி விரும்புவது இல்லை. இரவுக்குறியில் தலைவன் வருவதால் தலைவி சிறிது நலம்பெற்றுள்ளாள். இனி இரவிலும் தலைவன் வாராதிருத்தல் நன்று; அது தலைவிக்கு அரும்படர் எவ்வம் தரும். ஆயினும் வேலனால் மகள்நோய் தணியாது என்று தாய் உணர்ந்துகொள்ள அதுவேவழி. வெறிஎடுத்தும் நோய் தணியாத காரணத்தைத் தாய் ஆராயப்புகுவாள்; அதனால் இன்று துன்பம் பயப்பினும் பின்பு நலம் பயக்கும் என்று தலைவி நினைக்கிறாள். தோழியோ தாயின் வருத்தம் தீர்க்க விரும்பி அறத்தொடு நிற்கிறாள்.

தலைவி களவுமணம் புரிந்ததை அறியின் தாய் சினப்பாள்; இன்னும் அறியாவிடின் பழியாகும் என்பதால் துணிந்து தலைவிக்கு ஏற்பட்ட களிறுதரு புணர்ச்சி பற்றிக் கூறுகிறாள் குறிஞ்சிப்பாட்டின் தோழி. தினைக்காவலில் களிறால் ஏற்பட்ட துன்பம் போக்கிய தலைவன் களவு இரவிலும் தொடர்கிறது. தாய் துஞ்சாமை, காவலர், நாய் துஞ்சாதிருத்தல் ஆகியவற்றால் சந்திப்பு நிகழவில்லை. தலைவன் வரும் ஆற்றருமை குறித்தும், அவனை இரவுக் குறியில் காணமுடியாதது குறித்துமே தலைவி வருந்துகிறாள் என்பதைத் தாய் அறிகிறாள்.

"நேரிறை முன்கை பற்றி நுமர்தர
நாடறி நன்மணம் அயர்கம் சின்னாட்
கலங்கல் ஓம்புமின் இலங்கிழையீர்" [91]

என நன்மொழி கூறிய தலைவன் உயர்ந்தவன் எனவும் தாய்க்கு உணர்த்துகிறாள் தோழி.

தாயின் வருத்தம் தீர மகள் பண்டை நிறமான மணிமருள்மேனி பெறவேண்டும்; அதற்கு வரைவே வழி எனத் தலைவனையும் வரைவு கடாவுகிறாள் தோழி.

'தலைவன் கேண்மை அறிந்தும் தாய் வெறியாடி இருப்பின், வேங்கை மலநாள் பூத்தது போல் நமக்கு மணப்பருவம் வரும்'[92] எனத் தலைவியையும் ஆறுதல் படுத்துகிறாள்.

தாய் வரைவு முயலல்

வெறியாட்டில் தோழி அறத்தொடு நிற்பதாலும், வெறியாடிய பின்னும் நோய் தீராததால் தலைவன் ஒருவன் உளன் எனத் தெளிவதாலும் தாய் வருத்தம் தீர்கிறாள். மகள் விரும்பியவனை மணம் முடிக்க முயற்சிகள் செய்கிறாள்.

"துறைவனைப்,
பெரிய கூறி யாயறிந் தனளே"[93]

என்றபடி இதுவரை முருகன் என நினைத்திருந்தது துறைவனே எனத் தாய் அறிந்தாள்; இனி வரைவுக்கு உரிய நாளும் குறித்தாள்; தலைவன் மார்புறும் நாள் அணிமையில் உள்ளது எனத் தான் வெறியாட்டில் அறத்தொடு நின்றதன் நன்மையைத் தோழி, தலைவிக்குக் கூறுகிறாள்.

மகள்மீது தாய் கொள்ளும் பாசமே வெறியாடல் நிகழ்த்தக் காரணம். அப்போது தோழி அறத்தொடு நின்றதால் களவுத் தலைவனை அறிந்து கொள்கிறாள். வரைவு வேண்டித் தலைவன் வரும் போது தந்தை தமர் எதிர்ப்பினும் தாய் எதிர்ப்பது இல்லை. வெறியாட்டை எதிர்க்கும் மகள் நாணம், குலப்பழி குறித்த அச்சம் காரணமாகவே தன் தோழியை அறத்தொடு நிற்கவைக்கிறாள். களவு கற்பாக விரும்பும் தாயும் மகளும் ஒருவரை ஒருவர் உணர்ந்துகொள்கின்றனர். தாய் ஐயம் தெளிய, மகளின் வரைவுக்கு ஆவனசெய்வதில் மகளும் மனம் மகிழ்கிறாள்.

3. நொதுமலர் வரைவில் அறத்தொடு நிற்றல்

உயர்ந்த குடியிலே தோன்றிய தலைமகளை மணம்புரிந்து கொள்ளப் பலர் விரும்புவது இயற்கை. அழகும், செல்வமும், நல்லியல்புகளும் கொண்ட தலைவியை நொதுமலர் மணம்பேசி வருகின்றனர்.

"உயிராக் காலத்து உயிர்த்தலும் உயிர்செல
வேற்றுவரைவு வரின்அது மாற்றுதற் கண்ணும்"[94]

எனத் தொல்காப்பியர் குறிப்பிடுவது போல உயிர் தனது உடம்பினை விட்டு நீங்குவது போலும் துன்பமுண்டாக அயலார் தன்னை மணம் பேச வந்த நிலையில் அதனை மாற்றுதற் பொருட்டு அறத்தொடுநிலை நிகழும்.

"நொதுமலர் வரையும் பருவ மாயினும்"[95]

எனும் இறையனார் களவியல் உரையும் தோழி, தலைமகள் ஆற்றாமை கண்டு, நொதுமலர் வரைவைத் தடைசெய்யும் நோக்கில் அறத்தொடு நிற்பாள் என்று உரைக்கும்.

3.1 <u>தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்றல்</u>

இதுவரை களவைத் தோழிக்கே கூட வெளியிடாத தலைவி நொதுமலர் வரைவில் வேறு வழியின்றி அறத்தொடுநிற்க நேர்கிறது.

"யானும் ஓர் ஆடுகள மகள்; என் கையின்
கோடீர் இலங்குவளை நெகிழ்த்தவனும்
ஓர் ஆடுகள மகனே. அவனைப் போர்புரி
மறவர் சேரிகளிலும், மகளிர் துணங்கை
ஆடும் இடங்களில் சென்று தேடியும்
இப்போது காணேன்"[96]

என்கிறாள் தலைவி. குலமகளிர் செல்வதற்கு மறுக்கப்பட்ட துணங்கையாடும் இடத்திலும் காணமுடியாத தலைவன் அயலார் மணம்பேச வந்திருக்கும் வேளையில் வருவான் என்பது அரிது. அவன் வந்து மணம் பேசும்வரை, அயலார் மணம் பேசி வருதலைத் தடுத்து நிறுத்துமுகமாகவே தலைவி தன் களவினை வெளியிடுகிறாள். தன் தலைவன் மாண்தக்கோன்; மல்வீரன் எனினும்

பல்லூர் விழாக்களில் சென்று துணங்கையும் ஆடுபவன்; ஆதலின் தன் ஒருத்தியால் தலைவனைத் தேடி அடைய இயலாது. இந்நிலையில் தோழியே நொதுமலர் வரைவிலிருந்து காப்பாற்றி, தலைவனைச் சேர்த்து வைக்கமுடியும் என்னும் தலைவியின் உணர்வு இதில் வெளிப்படுகிறது.

மகளின் காதலை அறியாத கலித்தொகைப் பெற்றோர் வேறு ஒருவனுக்கு மணம் செய்ய எண்ணுகின்றனர். அப்போது தலைவி உடனே தன் தோழியிடம் களவை வெளிப்படுத்தி தலைவனுடனான வரைவிற்கு உதவ வேண்டுகிறாள்.

"அல்லல் களைந்தனன் தோழி நம்நகர்
அருங்கடி நீவாமை கூறின் நன்றென
நின்னொடு சூழ்வல் தோழி நயம்புரிந்து
இன்னது செய்தாள் இவளென
மன்னா உலகத்து மன்னுவது புரைமே"[97]

என்றபடி உதவும் தோழி உலகத்தாரால் புகழ்ப்படுவாள் என்றும் கூறி கற்புநெறி காக்க வேண்டுகிறாள்.

## 3.2 தலைவனை வரைவுகடாவல்

நொதுமலர் மணம்பேசி வருதலைத் தலைவன் அறியமாட்டான். அவனை வரைவுகடாவ இது ஒரு நல்வாய்ப்பு எனத் தோழி கருதுகிறாள்.

"நீ நயந்த தலைவி நொதுமலர் வரைவு
வந்ததாலும், தன்வேட்கையைத் தானே
கூறலாகாத ஆற்றாமையாலும், நாண
மிகுதியாலும் கண்ணீர் பெருக்கினாள்.
இனியும் நீ வரையாதிருப்பது நன்றல்ல"[98]

எனத் தலைவனை வரைவு முயலத் தூண்டுகிறாள்.

இன்னொரு தோழி தலைவனை,

"சிறுநனி வரைந்தனை கொண்மோ"[99]

என்று வற்புறுத்துகிறாள். பரதவர் கொண்டுவரும் மீனுக்காக நாரை காத்திருத்தல் போலத் தலைமகளை நாடிச் சான்றோர் வேற்று வரைவு குறித்து வந்துள்ளனர். "நீ சிறிது காலம் தாழ்ப்பினும் தொண்டியன்ன நலமுடைய தலைவிக்கு அயலார் வரைவு நடந்துவிடும்" எனக் குறிப்பாகக் கூறுகிறாள்.

புதுமணல் பரப்பி, மனைக்குச் செம்மண் பூசி, எருமைக்கோடு நட்டுப் பெற்றோர் வேற்று வரைவுக்கு ஏற்பாடு செய்தனர். செய்தியை அறிந்த தலைவன் வாளா அழுதுகொண்டிருத்தலை அறிகிறாள் கலித்தொகைத் தலைவி.

"விரிநீர் உடுக்கை உலகம் பெறினும்
அருநெறி ஆயர் மகளிர்க்கு
இருமணம் கூடுதல் இல்இயல் பன்றே"[100]

எனத் தலைவனுக்கு எடுத்துக்கூறி மணம் பேசி வரத் தோழியை அனுப்புகிறாள். வரிமணல் முன்துறையில் சிற்றில் புனைந்து ஆடியபோது தலைவனுடன் ஒருமணம் நடந்துவிட்டது. இனி பெற்றோர் செய்யவிரும்பும் மணம் நடக்காது என்பதைத் தெளிவுறுத்தத் தலைவன் வரவேண்டும். அதற்கு அறத்தொடு நிற்பதற்கு அயலார் வரவு துணைபுரிகிறது. தலைவியின் மதிப்பும் பெருமையும் தலைவனை விட அயலாருக்கு அதிகம் தெரிந்து உள்ளதென்று இடித்துக்காட்டவும் நொதுமலர் வரைவு ஒரு உத்தியாகப் பயன்பட்டிருக்கிறது.

## 3.3 தோழி அறத்தொடு நிற்கத் தலைவியை வற்புறுத்தல்

தோழி அறத்தொடு நிற்கத் தலைவியின் அனுமதி வேண்டி வற்புறுத்துகிறாள்.

"தலைவனிடம் சொல்லி அவன் மணம் பேசி வருவதற்குமுன், வேற்று வரைவு வேண்டி வந்தோரைத் தடுத்து நிறுத்தல் வேண்டும். ஏதிலர் தலைவியை வேண்டி மணஞ் செய்ய விடுக்கும் தூது பலவாயின. உன்தோற்றம் கண்டு, ஐயம் கொண்டு அன்னையர் வினவின் அறத்தொடு நின்றுவிடு."[101]

எனத் தலைவியிடம் கூறுகிறாள்.

"நின்மார்பமர் இன்துணையாம் தலைவன்
நடுநாள் நம்மனைவந்து பெயர்வான்
என்பதை இனியும் மறைக்கக்கூடாது. நீ
அறத்தொடு நிற்க இயலாதெனின் நான்
நிற்பேன். நம் கதவு திறப்பல் வேண்டும்."[102]

என மறைவான ஒழுக்கத்தை நொதுமலர் வரையப் புக்க காலத்திலாவது வெளியிட்டுவிட வேண்டும் என உறுதியாய்க் கூறுகிறாள் குறுந்தொகைத்தோழி. அத்துடன் தாய்க்குக் கேட்கும்படியாகத் தலைவியிடம்,

"நின்னுடைய அறிவுமுதிரும் பருவத்தில்
என்னுடைய இல்லத்திற்கு இல்லறம் நடத்த
வருக என்று உன்னுடைய கூந்தலை
நீவிய தலைவன் இன்று எங்குள்ளானோ?"[103]

என்றும் பேசுகிறாள்.

## 3.4 தோழி தாய்க்கு அறத்தொடு நிற்றல்

அலரும் இற்செறிப்பும் களவைக் கற்பு ஆக்குவதற்குரிய துணைச்செயல்கள், ஆனால் நொதுமலர் வரைவு தலைவியின் கற்பிற்கு ஊறு விளைவிப்பது. அதனால் தோழி காலம் நீட்டிக்காது அறத்தொடு நிற்கிறாள். அதுவரை குறிப்பாகப் பேசிவந்தவள் வெளிப்படையாகப் பேசுகிறாள்.

"ஒவ்வொரு நாளும் தேரோடு வரும் தலைவன் மீண்டும்
வரும்போது வறிதே பெயரமாட்டான். தலைவியை
வேற்று வரைவுக்கு உட்படுத்தினால் சுறா கிழித்த
வலைபோல அவள் இறக்கநேரும். அதனால் அவள்
விரும்பும் தலைவனுக்கே மகட்கொடை நேரவேண்டும்."[104]

என்னும் தோழி அன்னையை வாழ்த்திப் பாடுகிறாள். தலைவியை முன்னர் கூட்டுவித்த சூழ், திருமணத்தையும் அவனோடுதான் முற்றுவிக்கும் என்று அதனையும் வாழ்த்துகிறாள்.

"அன்னை வாழிவேண் டன்னை புன்னைப்
பொன்னிறம் விரியும் பூக்கெழு துறைவனை
என்னை என்றும் யாமே யிவ்வூர்
பிறிதொன் றாகக் கூறும்
ஆங்கு மாக்குமோ வாழிய பாலே"[105]

என்ற தோழியின் கூற்றில் உண்மை அறிகிறாள் தாய்.

"பொன்போலும் அரும்புகளால் ஆகிய மாலை
அணிந்த தலைவன் எனக்கும் உடுத்தத் தழையாடை
தந்தான், பூத்தரு புணர்ச்சிக்கு உதவிய,
பொன்போல் அரும்பிய அவை என்ன மரங்களோ?"

"நாங்கள் பூப்பறித்து விளையாடிவிட்டுக் கான்யாற்றில்
நீராடியபோது தலைவி வெள்ளத்தில் அழுந்தினள்.
அப்போது தேரில் குறுகவந்த தலைவன் அவளைக்
காப்பாற்றினன். புனல்தரு புணர்ச்சியால் அவனால்
தீண்டப்பட்டு அவனுக்கே உரிமையாகிவிட்ட இவள் உயிர்,
அவன் பெயரொடு பொருந்திவிட்டது. ஆதலால்
ஏதிலர்க்குப் பேச்சுப்படில் உயிர்நீப்பள்"[106]

என்று அறத்தொடு நிற்கிறாள் தோழி.

## 3.5 தாய் வினவ, தோழி அறத்தொடு நிற்றல்

தன் மகளுக்கேற்ற மணவாளன் வந்தான் என மகிழ்வுடன் மணப்பேச்சுக்களில் கலந்து கொள்கிறாள் தாய். ஆனால் மகிழ்ச்சியற்ற மகளின் நிலைகண்டு திகைக்கிறாள். மகளுக்கு ஒரு தலைவன் இருக்கக்கூடும் என்று எண்ணவும் இயலாத நிலையில் மகள் பாலும் அருந்தாது பட்டினி கிடப்பதும், கண் கலுழ்வதும், மேனி வேறுபடுவதும் கண்டு தோழியை வினவுகிறாள்.

> "தலைவி தன்னுந் துறைவனை விரும்பினள். அவன் நல்கினால் பால் அருந்துவள்; நனி நாண் உடையவள் ஆதலின் தாய்க்கு மிக அஞ்சுகிறாள். ஓங்குமலை நாடனின் மலர்ந்த மார்பில் பாயல் கொள்ள மிக விரும்புகிறாள். திருவிறல் வியன்மார்பில் முயங்காது கழியும் நாளில் தலைவி மிகவும் கலுழ்வாள். நொதுமலர் வரைவு கண்டஞ்சும் இவள் நிலை எனக்கும் வருத்தமாக உள்ளது."[107]

என்று தோழி மூலம் மகளின் நிலையறியும் தாய் நொதுமலர் வரைவை உடன் நிறுத்துவாள். செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நிற்க, நற்றாள் தந்தைக்கு அறிவித்துத் தலைவனை யாரென வினவி, அவனுக்கு மணம் நேர்வர்.

## 4. தலைவன் வரைவு எதிர்கொள்ளாது தமர் மறுத்தல்

தொடர்ந்து இரவுக்குறியிலும், பகற்குறியிலும் சந்திக்க இயலாததால் தலைவிக்கு ஏற்படும் ஆற்றாமை பற்றி அறியும் பொழுதும், வெறியச்சுறுத்தித் தோழி வரைவுகடாவும் பொழுதும், நொதுமலர் மணம்பேசி வருதலை அறியும் பொழுதும், தலைவன் தன் சுற்றத்தினருடன் மணம்பேசி வருவான். இத்தலைவன் தன் மகளின் நலத்திற்கும் குடிப்பெருமைக்கும் ஏற்றவன் அல்லன் எனக் கருதும் பெற்றோர் மணம் மறுத்தலும் உண்டு. இதுபோன்ற நேரங்களில் இத்தலைவனுக்குத் தான் தலைவி கற்புக்கடம் பூண்டாள் என்பதைக் குறிப்பாகவோ, வெளிப்படையாகவோ உணர்த்தத் தாய்க்குத் தோழி அறத்தொடு நிற்பாள்.

"அவன் வரைவு மறுப்பினும்
முன்னிலை, அறனெனப் படுதலென் றிருவகை"[108]

ஆகத்தோழி அறத்தொடு நிற்பாள் என்கிறார் தொல்காப்பியர். இறையனார் களவியலுரையும்,

"வரைவெதிர் கொள்ளாது தமரவண் மறுப்பினும்"[109]

என்று இதை வலியுறுத்துகிறது.

4.1. தமர் மறுக்கத் தலைவியின் வருத்தம்

தலைவன் வரைவுடன் வந்தும் களவை அறியாத தமர் மறுத்துவிட்டனர். தனது எண்ணம் நிறைவேறாத வருத்தத்துடன் தலைவன் திரும்பினன். தலைவியோ தன் கற்பு நலம் சிதையுமே என மிகவும் வருந்துகிறாள். அதைக் காணும் தோழி வரைவொடு வந்தவனே தலைவியின் களவுத் தலைவன் என அறியச் செய்வதைத் தன் கடமை என உணர்கிறாள்.

"குன்றநாடன்,
பணிக்குறை வருத்தம் வீடத்
துணியின் எவனோ தோழிநம் மறையே?"[110]

எனத் தாய்க்குத் தெரிவிக்கத் தலைவியின் இசைவு பெறுகிறாள்.

"இடக்கண் துடிப்பதாலும், முன்கையில் வளை செறிதலாலும் நமக்கு நல்ல நிமித்தங்களே தோன்றின. தமர்மறுத்தலால் இப்போது சென்ற தலைவன் மீண்டும் தன் சுற்றத்தை உடம்படுவித்துக் கொண்டு வரையவருவான்; நினைத்தவற்றிற்குக் குறைவரின், அதற்கு வெகுண்டு முடிக்கும் குணத்தால் தலைவன் புலிபோல்பவன். ஆகவே வருந்தாதே!"[111]

எனத் தலைவியைத் தேற்றுகிறாள்.

தாய்க்கு அறத்தொடு நிற்கும் தோழி,

"அன்னையே! மழைமிகுந்து பெய்தாலும்,
காவலர் நன்கு காவல் செய்தாலும் அஞ்சாது
வந்த தலைவனைத் தழுவியும் கூட உன்
மகள் பசலை கொள்வது எதனால்?"

"பெருந்திருவுடைய ஊரனுக்குத் தன் நினைவுகளைத்
தந்த இவள் அழகான கவினை இழந்தது
எதனால்?"

"மலைநாடனும் அறவோனுமாகிய தலைவன்
தமர்தாமே வரவும், நாம் மகட்கொடை
நேராமல் விலகுதற்குக் காரணம் என்ன?"[112]

என வினாத்தொடுக்கிறாள். இவை தாயைத் துணுக்குறச் செய்யினும், மழை, காவல் போன்ற இடையூறுகளைத் தலைவன் கடந்து வந்து மகளைச் சந்தித்த வீரமும், காதலும் அவளைச் சிந்திக்க வைக்கின்றன.

4.2 தலைவனின் குடிப்பெருமை

அன்னை தலைவன் குடிப்பெருமையை அறிய விரும்புவாள் என்பதைத் தோழி நன்கறிவாள்,

"கொடுப்பின் நன்குடைமையும் குடிநிரலுடைமையும்
வண்ணமும் துணையும் பொரீஇ யெண்ணா
தெமியேந் துணிந்த ஏமஞ்சா லருவினை"[113]

என்னும் குறிஞ்சிப்பாட்டின் தோழி அதை உணர்ந்து, தலைவன் பண்புநலன்களை விளக்குகிறாள்.

"பிறப்பே குடிமை ஆண்மை யாண்டொடு
உருவு நிறுத்த காம வாயில்

நிறையே யருளே யுணர்வொடு திருவென
முறையுறக் கிளந்த ஒப்பினது வகை"[114]

என எல்லா வகையிலும் தலைவன் சிறந்தவன்.

"நிரல் அல்லோர்க்குத் தரலோ இல்"[115]

என்னும் கொள்கையுடைய பெற்றோர், இவ்வகையில் நன்கு ஆராய்ந்த பின்னரே மகட்கொடை நேர்வர். தம் குடிமைச் சிறப்பைப் பெரிதாகக் கருதும் பெற்றோர், தலைவனை மறுப்பதால் அது கெடும் என்று உணராதிருக்கின்றனர்.

"வித்திய விதையிடத்துத் தோன்றிய
வெண்முறையைக் கள்வன் அறுக்கும்
என்பதால், தாம்பயந்த மகளிடத்தில்
தோன்றும் தம் குடிமைச் சிறப்பினை,
வரைவெதிர் கொள்ளாது, தமர் அவன்
மறுத்துச் சிதைக்கின்றனர்"

"தலைவன் விரும்பினால் பசுப்போன்ற
பெண்களைத் தன் மனைவியாகப்
பெறுவான். பல பிறப்புகளிலும்
இவளுக்கே கேள்வனாகிய உழுவலன்பு
பற்றி இவளை நாடித் தன் தண்ணளியை
நல்கினன்"

"நீவிர் மறுத்தால் அவனாவது வேறு பெண்டிரை
மணக்கக்கூடும். ஆயின் நும்மகளோ
இவனன்றிப் பிறர் வேண்டாள்; நாடன்
நல்காவிடில் உயிரும் வாழாள்"[116]

என உள்ளுறை உவமைகள் மூலம் தோழி நிலைமையை விளக்குகிறாள்.

தலைவன் தலைமகளை மணப்பதற்காக உடையார் முன் இல்லார் போன்று வேண்டியும் தமர் மறுத்துவிட்டனர். நாடன் இரந்தும் தன்குறை முடிக்கப்பெறாது

பெயர்ந்து போய்விடுவானாயின், தலைவியின் இனிய உயிரின் நிலைமை யாதாகும் என வினவும் தோழி உயிரினும் செயிர்தீர் கற்புச் சிறந்ததெனக் கருதும் தலைவி இறக்கக்கூடும் என்பதை அறிவுறுத்துகிறாள்.

முற்றும் எதிர்ப்பு வரும் நேரத்தில் தோழி வெளிப்படையாகவே அறத்தொடு நிற்கிறாள்.

"குன்றக் குறவன் காதல் மடமகள்
அணிமயி லன்ன வசைநடைக் கொடிச்சியைப்
பெருவரை நாடன் வரையு மாயிற்
கொடுத்தனெ மாயினோ நன்றே
யின்னு மானாது நன்னுதல் துயரே" 117

தலைவனும் பெருவரை நாடன்; தானே வேண்டி வந்தான்; தலைவியும் அவனை நினைந்து படும் துயரம் பெரிது. இப்போது மறுத்துவிடில் அத்துயரம் இன்னும் மிகும்; திருமணம் நடப்பதே இருவர் குடிக்கும் நன்று என்னும் தோழியின் கூற்றினால் 'இவனினும் நல்ல நம்பியைத் தேர்தல் அரிது' என்னும் உண்மையைத் தாய் உணர்கிறாள்.

## 4.3 தாய், தந்தைக்கு அறத்தொடு நிற்றல்

தோழி, செவிலி இருவரும் அறத்தொடு நிற்க உண்மையறியும் நற்றாய் தந்தைக்கு அறத்தொடு நிற்கிறாள். தந்தை மறுப்பினால் வரைவு வேண்டி வந்த சான்றோர் வருந்தினர். தலைவியின் அழகிற்கு விலையாக வளம்வாய்ந்த கோசரின் நியமம் என்னும் ஊரினைக் கொடுத்தாலும் ஏற்காத தமர், செம்மாந்த மனநிலை உடையவர். பெண்கேட்டு வருவோரிடம் உடனே உடன்படாது தலைவனின் தகுதியும் தரமும் அறிந்தே உடன்படுவர் என்பதைத் தாய் அறிவாள்.

"சான்றோர் வருந்திய வருத்தமும் நுமது
வான்தோய் வன்ன குடிமையும் நோக்கித்

திருமணி வரன்றும் குன்றம் கொண்டவள்
வருமுலை யாகம் வழங்கினோ நன்றே
அஃதான்று.

அடைபொருள் கருதுவிர் ஆயின் குடையொடு
கழுமலம் தந்த நற்றேர்ச் செம்பியன்
பங்குனி விழவின் உறந்தையொடு
உள்ளி விழவின் வஞ்சியும் சிறிதே"[118]

கற்புக்கடம் பூண்ட மகளைத் தரமறுப்பின் தமது வான்தோய்வன்ன குடிக்கு இழிவு நேரும் என்பதை மறைமுகமாக உணர்த்துகிறாள் தாய். தன்மகளுக்கு அடைபொருளாக எண்ணினால், உறந்தையும் வஞ்சியும் கூடச் சிறியனவே. தலைவன் வீட்டார் எப்பொருள் தரினும் ஏற்றுக்கொண்டு உடன்படலே நன்று என்பது தாயின் கருத்து.

கற்பென்னும் இல்வாழ்க்கையில் எவ்வாறு கணவன் தெய்வமாக மதிக்கப்-பட்டானோ, அவ்வாறே களவிலேயும் கொள்ளப்பட்டான். கலித்தொகைத் தலைவி மழைவளம் தரும் கற்பினைப் பூண்டதாகத் தோழி அறிவிக்கிறாள். ஆற்று வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்ட தலைவியைத் தன் மார்போடு அணைத்துக் கரை சேர்த்தான் தலைவன். அன்றே புனல்தரு புணர்ச்சியால் அவன் மனைவியானாள். காட்டுநாட்டு மன்னன் மகனான தலைவன், தலைவிக்கு ஏற்றவனே ஆயினும் தமர்தர மறுத்தனர். அவளை அயல் மணப்படுத்தினால் இயற்கை பொய்க்கும்,

"வள்ளி கீழ்வீழா; வரைமிசைத் தேன்தொடா
கொல்லை குரல்வாங்கி ஈனா"[119]

என்று தோழி அச்சுறுத்துகிறாள். எல்லா மகளிரையும் போன்று தலைவிக்கும் கேள்வனே தொழக்கூடியவன் என்று தாய்க்குக் கூறுகிறாள்.

"அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட
என்னையர்க்கு உய்த்துரைத்தாள் யாய்"[120]

என்றபடி தாய் குறிப்பாகப் புலப்படுத்துதலை,

"தந்தையும் தன்னையும் முன்னத்தின் உணர்ப"[121]

என்கிறார் தொல்காப்பியர். செய்தி அறிந்த தந்தையும் தனயரும் முதலில் சினம் கொண்டு வில்லும் அம்பும் நோக்கினர். பின்பு மனம்மாறி மணம் செய்துதர ஒப்பினர். பால்வயத்தால் இணைந்த இருவரிடமும் குற்றமில்லை என உணர்ந்ததால் சினம் ஆறித் தலைசாய்த்திருந்தனர்.

நற்றாய் களவு உண்மையைத் தந்தை தனயரிடம் வெருட்சி பிறவாத முறையில் நயம்படக் கூறுவதலாலும், தாயின் குறிப்பைத் தந்தை உரிய முறையில் உணர்ந்து கொள்வதாலும், அறத்தொடு நிற்றல் உரிய முறையில் உரியோரால் நிகழ்த்தப் பெறின் தலைவியின் மணம், அவள் விரும்பும் தலைவனுடன் நடக்கும் என்பதைச் சங்கப் பாடல்கள் காட்டுகின்றன.

4.4 தாயின் மணமுயற்சி

அறத்தொடு நிற்றலால் மகளுக்குரிய தலைவனை அறியும் தாய், வரைவுக்குரிய முயற்சிகளை மகிழ்வுடன் மேற்கொள்கிறாள். தலைவன் மணம் பேசிவரத் தமர் உடன்படுகின்றனர்.

சேய் உயர் வெற்பன் வருகையால், பசலை, அம்பல், மாயப்புணர்ச்சி எல்லாம் நீங்கத் தலைவியின் எழில் பொலியத் தோழி வாழ்த்துகிறாள்.

"மென்தோள் கிழவனும் வந்தனன்; நுந்தையும்
மன்றல் வேங்கைக் கீழிருந்து
மணம் நயந்தனன் நம்மலைகிழ வோற்கே"[122]

என்றவாறு மணம் நடக்கிறது.

அறத்தொடு நிற்க இயலாத நிலையில் தலைவன் தரும் பூக்களும் அவ்வுதவியைப் புரிகின்றன. காதலனது முல்லைமாலைத் தலைவியின் தலையில் வந்து விழ அவள் விருப்புடன் சூடிக்கொண்டாள். தோழி அதைப் பாராட்டி மகிழ, தாய் அறிந்தால் சினப்பாள் என அஞ்சுகிறாள் தலைவி, ஆயின் தந்தையும் தாயும் தெய்வமே தன் மகளுக்குத் தலைவனைப் பூவின் மூலம் காட்டியது எனத் திருமணத்திற்கு உடன்பட்டனர்.

ஆட்டிடையர் மகனைக் காதலித்த தலைவி, அவன் தந்த மலரைக் கூந்தலில் மறைத்து வைத்தாள். வெண்ணெய் தேய்த்துத் தலைவாருவதற்குச் செவிலி அவள் கூந்தலை விரிக்க, பூ கீழே விழுந்து களவைக் காட்டித் தருகிறது.

"அன்னையும் அத்தனும் இல்லரா, யாய்நாண
அன்னைமுன் வீழ்ந்தன்று அப்பூ"[123]

என்றபடி தாய் தந்தையரும் அதைப் பார்த்துவிடுகின்றனர். நாணம் கொண்ட தாய் தலைவியை ஏதும் கேட்பது இல்லை; சினந்து கொள்வதும் இல்லை. நெருப்பைக் கையால் தொட்டவர், கைகளை உதறிக் கொண்டு ஓடியது போல வீட்டை விட்டு வெளியேறிச் செல்கிறாள். அன்னைக்கு அஞ்சிய மகளும் வீட்டை விட்டு சோலையில் சென்று ஒளிந்துகொள்கிறாள். அவளைத் தேடி வரும் தோழி,

"நீ விரும்பிய ஆட்டிடையர் மகனுக்கே
உன்னைத் திருமணம் செய்ய விரும்பினர்.
அதற்கே அன்னையும் மற்றவரும் இரவு
பகலாகத் திட்டமிட்டு வதுவையும்
இன்று நம்மனையிலேயே அயர்வர்" [124]

என்று நற்செய்தி கூறுகிறாள்.

4.5 தாயின் மனதைத் தலைவி ஐயுறல்

தலைவன் மணம் பேசிவரத் தமர் உடன்படுவாரா என்ற ஐயம் தலைவிக்கு ஏற்படுகிறது. தாய் இயல்பை முற்றும் அறியாத கன்னியின் மனம் தாயையே ஐயுறுகிறது. களவொழுக்கக் காலத்தில் மகளை இற்செறித்தும் புறம்போகாதவாறும் தடுத்துக் கொடுமை செய்தவள் அன்னை. இப்போது தமர்பேசி வரும்போது மகட்கொடை நேரத் துணைசெய்வாளோ? தலைவன் வீட்டில் நடக்க வேண்டிய வதுவை மணமும் தன் வீட்டிலேயே நடக்கட்டும் என்று கூறுவாளோ? தலைவன் வீட்டாருக்குத் தன் வீட்டுச் சிறப்பு மிகுதியாகப் புலப்படும் வண்ணம் சுற்றத்தாருடன் இணைந்து சிறப்புச் செய்வாளோ? என வேண்டாத சிந்தனைகளில் மூழ்கி தன் தாயை மிகக் கொடியவளாக உருவகப்படுத்தும் மகளையும் சில பாடல்கள் எடுத்துக்-காட்டுகின்றன.

தாய் செய்யும் மறத்திற்கும் அன்பே துணை என்பதைக் களவுக் கன்னி அறியாவிடினும் தோழி அறிகிறாள். தன் காதலைத் தடைசெய்த ஒரு செயலினா-லேயே தாய் கொடியவள் ஆகாள் என்று தலைவியின் பேதைமையை மாற்றுகிறாள். 'மகள் திருமணம் தாயின் கடமையன்றோ! அவள் அதைச் சிறப்பாகவே நடத்துவாள்' என்று விளக்கித் தேற்றுகிறாள், தாயின் பாதுகாப்பு மகளுக்கு வெறுப்பைத் தந்ததைத் தாயும் அறிவாள். இருப்பினும் தாய் அறத்தொடு நின்றபின் மணம் மறுப்பதில்லை. களவைக் கற்பாக்கும் அறச் சிந்தனையுடன் மணம் முடிக்கவே எல்லா வகையிலும் முயல்கிறாள். தமரும் அவள் கூற்றை ஏற்று மகட்கொடை நேர்கின்ற செயலைத் தோழி மகிழ்வுடன் தெரிவிக்கிறாள்.

"நம்மொடு சிறுதினைக் காவலனாய்
இருந்து நின்தோள் நெகிழவும், நுதல்
பசப்பவும், கவின் தொலையவும்
காரணமாய் இருந்த குன்ற நாடனுக்கே
நமர் நன்மணம் அயர்வர்" [125]

"உருமிசைப் புணரி யுடைதருந் துறைவர்க்கு
உரிமை செப்பினர் நமரே"[126]

என்னும் உவப்பான செய்தி சொல்லும் தோழி முதலில் 'உவந்தேன்' எனத் தொடங்குகிறாள். ஓர் ஆடவனுக்குரிய அனைத்துப் பொருள்களினும் சிறந்தவை பற்றி மனைவிக்கு 'உரிமை' என்ற பெயர் அமைகிறது. கொடைக்குரி மரபினோர், கொளற்குரிய தலைவனுக்குத் தலைவியை அவன் உரிமையாக்கி மகிழும் இயல்பினர் என்பது இதில் உணர்த்தப்படுகிறது.

தலைவன் வரைவதற்குரிய முயற்சிகளை எடுத்துக் கொண்டிருப்பினும், விரைந்துவாராது இருக்கிறான்; அதற்குத் தமர் பொறுப்பாகார். நாடன் வரின் உடன் மணம் முடிக்கவே உடன்பட்டுள்ளனர் என்று தலைவியின் ஐயம் நீக்குகிறாள் தோழி.

"துறைதொறும் பரக்குந் தூமணற் சேர்ப்பனை
யானுங் காதலென் யாயுநனி வெய்யள்
எந்தையுங் கொடீஇயர் வேண்டும்"[127]

என்னும் அவளது கூற்றில் தலைவி ஐயம் கொண்ட தாய்தான் மிகவும் விரும்பித் தலைவனை ஏற்றாள் என்பது தெளிவுறுத்தப்படுகிறது.

"பல்வேறு செல்வங்களை உடையநம் அருமைத் தந்தையும் நம் பெருமானுக்கு உன்னைக் கொடை நேர்ந்தனன். இத்தனை நாள் தூற்றிய அம்பல்பெண்டிர் இப்போது அவனோடு சேர்த்து உன்னைப் புகழ்கின்றனர். இற்றைநாள்காறும் நம்மைக் கடிந்த நம் அன்னைதானும் நினது தோள்களுக்குப் பொருந்தியவன் அந்நம்பியே என்கின்றாள். அதனால் சான்றோர் குறிப்பிட்ட திருமணநாள் வல்லே வருக என நாம் இல்லுறை வணங்குவோம்"[128]

என்னும் அகநானூற்றுத் தோழி போல பிற தோழியரும் கால நீட்டிப்புக்குத் தாய் காரணம் இல்லை எனத் தலைவியின் மனங்கொள்ளுமாறு உரைக்கின்றனர்.

கடவுளை வணங்கி வேண்ட வைக்கின்றனர். தலைவியின் மனத்தவிப்பு குறித்துத்,

"தண்டுறை யூரன் வரைக
எந்தையும் கொடுக்க எனவேட் டேமே"[129]

எனப் பின்னாளில் தலைவனிடமும் கூறும் தோழியை ஐங்குறுநூற்றில் காணலாம்.

<u>அறத்தொடு நின்றதன் பயனில் தோழி மகிழல்</u>

தோழி, தான் அறத்தொடுநின்றதால் ஏற்பட்ட திருமணத்தைப் பெருமையுடன் நினைத்துக் கொள்கிறாள்.

"நாம் இதுகாறும் ஒளித்துவைத்த களவை, நம் தந்தையும் தாயும் உணருமாறு நான் வெளிப்படுத்தியதால் மலைகெழு வெற்பன் வந்து வரைவை வேண்டினன். நமரும் நன்மைசெயும் கொள்கையராதலின் மனத்திற்கு உடன்பட்டனர். இம்மயக்கத்தை உடைய ஊரும் அம்பல் தூற்றுவதை ஒழித்து நம்முடன் ஒன்றாயிற்று"[130]

"நம் கற்புக்குப் பங்கம் வருமோ என்று நீ சோர்நசைந்தனையவளாய் நடுங்கியதைக் கண்டு ஆற்றாமல் நான் பரிந்து அறத்தொடு நின்றதன் விளைவே இப்போதைய திருமணம்"[131]

என்ற தோழியின் கூற்று அறத்தொடு நிற்பதால் நலமே விளையும் என்பதை எடுத்துக்காட்டுவதாய் அமைகிறது.

களவு வாழ்வில் இற்செறிப்பு, தாய்க்கும் மகளுக்கும் இடையே வேற்றுமை ஏற்படுத்துகிறது. அன்பு காட்டுவதில் இணை இல்லாத தாயின் அன்பையே மகள் ஐயுற்று நிற்கும் நிலை உருவாகிறது. தான் விரும்பிய தலைவன் வரத் தடைவிதித்தாள் என்னும் ஒரே காரணத்திற்காகக் குழந்தை மனப்பான்மையுடன் தாயுடன் கோபம் கொள்கிறாள். களவு என்பது உலக இயல்பு, அதை அறியாமல் ஊர் அலர்-தூற்றுகிறது என்று நினைக்கும் பேதைப் பருவத்தினளாக இருக்கும் மகளை நினைந்து

தாய் துயர்ப்படுகிறாள். களவின் விளைவை அறியாத மகள், அவளுக்கு உதவும் தோழி இருவரையும் எதிர்த்துப் போராடவேண்டிய நிலையில் தாய் இருக்கிறாள். மகளின் களவை தந்தை அறிந்துவிடாமல், இற்செறிப்பதன் மூலம் தானே காத்து குலப்பெருமைக்கும் பழிவராமல் காக்க முடியும் என நம்புகிறாள்.

களவை வெளிப்படுத்த நாணியும் அஞ்சியும் மகள் மறைக்கும் போது தாய் நடத்தும் வெறியாடல் அதை வெளிப்படுத்த உதவுகிறது. அறத்தொடு நிற்க விரும்பும் மகள் தோழி மூலம் களவை வெளிப்படுத்துகிறாள். ஆற்றாமையாலும், வெறியாடல் தரும் இகழ்வாலும், நொதுமலர் வரவாலும் தமர் தலைவனுக்குத் தர மறுக்கும் நிலைமையாலும் தாங்குதற்கியலாத துன்பம் அடையும் மகள் அறத்தொடு நிற்கிறாள்.

அறத்தொடு நின்றுவிட்டபின் மகளின் களவைக் கற்பாக்குவதில் தாயின் பங்கு அளவிடற்கரியது. மகள் விரும்பியவன் வரைவு வேண்டி வரவும், தமருக்கு உணர்த்தி மணம் செய்து தருகிறாள். தாயின் மனம் உணராத மகள் அவளைத் திட்டுகிறாள்; உணர்ந்தபின் தாயின் அன்பில் கனிந்து அவளை வாழ்த்துகிறாள்.

## 4.2 உடன்போக்கு

இற்செறிப்பு கடுமையாக இருப்பதாலும், ஊரலர் பெருகுவதாலும் தாய்க்கு மிகவும் அஞ்சுவதால் மகள் அறத்தொடு நிற்கவும் துணியாதிருக்கிறாள். தலைவன் மகட்பேசி வந்ததும் தமர் மறுத்தலும், அயலார் வரைவு வேண்டி வருதலும் தலைவிக்கு உயிர்போகும் வேதனை தருகிறது. அதைத் தாங்க இயலாதபோது களவை நீட்டிக்க முடியாத தலைவி, ஒரு முடிவு எடுக்கும் கட்டாயத்திற்கு உள்ளாகிறாள். அதுவே தலைவனுடன் அவன் இல்லத்திற்குத் தமர் அறியாமல் செல்லும் உடன்போக்கு ஆகும். களவின் முடிவு அறத்தொடு நிற்றல் அல்லது உடன்போக்கு என்பதால் அறத்தொடு நிற்க முடியாதபோது உடன்போக்கு நிகழ்கிறது.

களவை அன்னை அறிந்தாள் என்ற அச்சம் ஒருபக்கமும், தலைவன் உறவு நீட்டிக்கும் விருப்பம் மறுபக்கமுமாகத் தலைவி உடன்போகிறாள். 'தலைவி உடன்போக்கு மேற்கொள்ள அச்சமே காரணம்' என டாக்டர் வ.சுப. மாணிக்கமும்,[132]

'அலர், அன்னையின் கடுமொழியிலிருந்து விடுபடவே தலைவி உடன்போனாள்' என்று டாக்டர் திருமதி. தேவகிருபை தியாகராசனும்[133] குறிப்பிடுகின்றனர். உடன்போக்கினைக் 'கொண்டுதலைக் கழிதல்', 'புணர்ந்துடன் போகிய காலை'[134] என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.

ஆணும் பெண்ணும் தம் இளம்பருவத்தில் தோன்றிய காதல் உறவை உயர்வாக மதிக்கின்றனர். தங்களின் மனவளர்ச்சியையும், தனித்தியங்கவல்ல ஆற்றலையும் நிறுவ விரும்புகின்றனர். தாயுடன் மனப்போராட்டம் கொள்ளும் தலைவி, தாய் தன்னைவலிந்து அடக்குவதாக உணர்வதே உடன்போக்கு மேற்கொள்ளக் காரணம். நிறைவேற முடியாமல் கடிவாளம் இடப்பட்ட ஆசைகளின் வலிமையைப் புறஉலக ஆற்றல்கள் கட்டுப்படுத்த முனையும்போது உடன்போகும் எண்ணம் துளிர்க்கிறது.

உடன்போக்கு மேற்கொள்ளக் காரணமான சூழல்கள்

1. தாய்க்கு மிகவும் அஞ்சியோ, நாணியோ அறத்தொடு நிற்க விரும்பாத நிலை.

2. ஊரலர் மிகுந்து இற்செறிப்பும் கடுமையாகும் நிலை.

3. தலைவன் வரைவு வேண்டிவரத் தமர் மறுத்துவிடும் நிலை.

4. ஏதிலர்க்கு மகட்கொடை நேர்ந்து, மணவிழா நடக்கும் நிலை.

இச்சூழல்களில் உடன்போக்கு தவிர வேறு வழியில்லை என்று நெருக்கப்படும்வரை,

தலைவி அதைப்பற்றிச் சிந்திப்பதில்லை. இறுதிவரையிலும் உடன்போக அஞ்சும் தலைவியும் இருக்கிறாள்.

அன்னைக்கு அஞ்சும் மகள்

அன்னையின் கண்டிப்பும், கட்டுப்பாடும் வெறுத்துள்ள நிலையிலும் அறத்தொடு நிற்க அஞ்சுகிறாள் மகள். அன்னையின் சொல்லுக்கும், ஈரஞ்சேரா இயல்பின் பொய்ம்மொழிச் சேரியம் பெண்டிர் கௌவைக்கும் அஞ்சிய தலைவியைத் தலைவன் உடன்போக்கு அழைத்துச் செல்ல உடன்படுகிறான்.[135]

"இவ்வூர் நிரையப் பெண்டிர் கூறும் இன்னாச் சொற்கள் என் மகளுக்குப் புரையஅல்ல" என்று மனதைத் தேற்றி மகள்மீது மிகுந்த நம்பிக்கை வைத்திருக்கும் தாயின் முன், தான் தலைவனை நினைந்து பசலையுற்ற தன்மை வெளிப்படக்கூடாது என்று மகள் அஞ்சுகிறாள்.

"ஆய்வளை நெகிழவும் அயர்வு மெய்நிறுப்பவும்
வருந்தும் நோயினை அன்னை அறியின்
உளனோ தோழி?"[136]

"பைபயப் பசந்தன்று நுதலுஞ் சாஅய்
ஐதாகின்றென் தளிர்புரை மேனியும்
பலரும் அறியத் திகழ்தரும் அவலமும்...
அன்னை முன்னர்யாம் என்னிதற் படலே"[137]

என்று அன்னைக்கு அஞ்சியே தான் போக்கிற்கு உடன்படுவதாக மகள் தோழியிடம் கூறுகிறாள்.

அன்னை அலர் அறிதல்

அலர்வாய்ப்பெண்டிர் கூறுதலை அறிந்து வைத்துள்ள தாய், ஏதொன்றும் அறியாதாள் போல மகளை நோக்கி, "நறிய நாறுநின் கதுப்பு"[138] என்றாள்.

ஒண்சுடர் நல்லில் அருங்கடி நீவியதால், தன்சிதைவு தாயறிதல் அஞ்சியே வெள்வேல் விடலையுடன் மகள் சுரம் படர்ந்து சென்றாள் என்று உண்மையை ஒப்புக்கொள்கிறாள் தாய்.[139]

தலைவியின் சாயலும் இயல்பும் முன்போல் இல்லை என ஐயுற்ற குரலில் கூறி மகளை ஒருமுறை தழுவினள் தாய். அன்றே தாயைப் பலமுறை தழுவிப் பிரிந்து சென்றாள் மகள். "தான் தழுவ வியர்த்தனள்' என்று பிரிந்த மகள், தானாகவே வந்து தழுவியதற்குக் காரணம் பிரிந்து செல்ல முடிவெடுத்ததே எனப் பிறகு தாய் நினைத்துப் பார்க்கிறாள்.[140]

"அன்னையும் அறிந்தன ளலரு மாயின்று
நன்மனை நெடுநகர் புலம்புகொள வுறுதரு
மின்னா வாடையு மலையும்
நும்மூர்ச் செல்கம் எழுகமோ தெய்யோ"[141]

என்றும்,

"சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி
மூக்கின் உச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி
மறுகின் பெண்டிர் அம்பல் தூற்றச்
சிறுகோல் வலந்தனள் அன்னை அலைப்ப
அலந்தனென் வாழிதோழி கானல்
... ... கொண்கனொடு
செலவயர்ந் திசினால் யானே
அலர்சுமந் தொழிக இவ்வழுங்க லூரே"[142]

என்றும் வரும் மகளின் கூற்றுக்கள் அறத்தொடு நிற்க இயலாத வண்ணம் அன்னையின் கண்டிப்பு கடுமையாக இருந்தலையும், ஊரலரின் மிகையையும் காட்டுகின்றன.

உடன்போக்கும் தலைவனும்

தலைவனைச் சந்திக்க இயலாத இற்செறிப்பு தரும் கடுமையில் இருந்து, தலைவியை மீட்க உடன் போக்கே வழி என்கிறான் தலைவன். பழிக்குக் காரணம் ஆயினும் உடன்போக்கே அறிவுடைமையுமாம் என்று தலைவியிடம் கூறுகிறாள் தோழி.[143]

சுற்றத்தார்க்கும் தோழிக்கும் துன்பம் தருதலின் உடன்போக்கு 'இன்னா நீப்பு' எனப்படுகிறது. ஆயினும் தலைவி தலைவனுடன் 'செலவு தலைக் கொண்ட பெருவிதுப்புறுவி' என்றழைக்கப்படுகிறாள்.[144]

பாலைநிலம் என்று தடைசொல்லாத வண்ணம் மழை பொழிந்து தண்ணியதாகட்டும் என்று வாழ்த்துகிறாள் தோழி.

"பாலை நிலமாயினும் யானை புலியைக் கொல்லும் ஆற்றலுடையது; அந்நாடனும் இடையூறுகளை வெல்லும் வீரன்! அதனால் வேறொன்றும் நினையாது பெயர்க!"[145]

"வாகைமர நெற்றுக்களைக் கோடைக்காற்று அலைக்கும் பாலைநிலத்தில் செல்லத் தலைவன் நல்க, நாம் செல்வாம் தோழி!"[146]

"நீயுடம்பட்டதாலேயே, குறியிடத்தில் வந்து தலைவன் நின்றனன். 'இன்று வேண்டாம்; நாளை செல்வாம்' என்று நீ தீயுறு தளிர்போல நடுங்கி ஆகப்போவது ஒன்றுமில்லை. அதனால் செல்க!"[147]

தலைவனுடன் உடன்போக்கு செல்லும் தலைவியின் நாணத்தையும், அச்சத்தையும் மாற்றி, இல்லில் இனி இருக்கமுடியாத நிலையால் உறுதியை ஊட்டி அனுப்பி வைக்கிறாள் தோழி.

தலைவன் உடன் கொண்டு செல்லவரும் நாளையே தலைவியும், தோழியும் எதிர்பார்த்து இருந்தனர் என்பதைப் பின்னொரு நாளில் தலைவன் கேட்கச் சொல்கிறாள் தோழி.

"தண்டுறை யூரன் தன்னொடு
கொண்டனன் செல்க எனவேட் டேமே"[148]

"களவு புறத்தார்க்குப் புலனாயின் அம்பலும் அலருமாம் என்றஞ்சியும், தமரறிவுற்றுக் காப்பு மிகுவிப்பர் என்றஞ்சியும் பிறவகையான் எய்தற் பாலனவாகிய இடையூறு நினைந்தும் யாங்கள் அஞ்சி, 'தண்டுறை யூரன் தன்னூர்க் கொண்டனன் செல்க' என வேட்டோம்"[149] என்ற தோழியின் கூற்றில் தலைவி உடன்செல்ல விரும்பும் சூழலைத் தெளிவாக்குகிறாள்.

உடன்போக்கிற்குத் தலைவன் தயங்குதல்

ஆற்றின் வழி அருமையாலும், தலைவியின் நாணத்தாலும் களவு நீட்டிக்கும் விருப்பாலும் சிலபோது தலைவன் உடன்போக்கினை மேற்கொள்ளத் தயங்குதல் உண்டு. தலைவன் இருமனங்கொண்டு தடுமாறாது ஒரே உறுதிகொண்டு செயல்படக் கருதித் தோழி, அவனை இயற்பழித்தலும் உண்டு.

"அம்ம வாழி தோழி காதலர்
உள்ளார் கொல்நாம் அருளற் றனங்கொல்
விட்டுச் சென்றனர் நம்மே
தட்டைத் தீயின் ஊரல ரெழவே"[150]

காதலர் வருவரெனத் தாம் ஆற்றியிருப்பினும், ஊரவர் அலர் தம்மால் ஆற்றமுடியாதது ஆகிறது என்பதைத் தலைவன் அறியின், அருளுடன் வந்து அழைத்துச் செல்வான் என்பதை மறைமுகமாகச் சுட்டுகிறாள்.

பகலில் பலரும் காணத் தாமே வாய் விட்டு, தலைவனின் ஊர்வினவிச் செல்லலாம் என்னும் வண்ணம், அருங்கடி அன்னையின் காவல் இருப்பதாகச் சொல்லி, தலைவன் வரைவுக்கோ, உடன்போக்கிற்கோ முயலாதது குறித்தும்,

"கானமும் இனியவா நம்மொடு வரினே"[151]

என்று தமது உறுதிப்பாட்டைக் குறித்தும் பேசும் தோழியின் கருத்துணர்ந்து தலைவன் உண்மைநிலை அறிந்து உடன்போக்கு செல்ல இசைவு தருகிறான்.

*தலைவி தயங்குதலும் துணிதலும்*

உடன்போக்கு செல்லத் தலைவன் விரும்பிக் கேட்கும்போது, சிலம்பு கழித்து உடன்வரின் அதைக் கண்டு ஆயம் நோகும் எனத் தலைவி அழுவதும், தக்கபடி எடுத்துக்கூறி அவளை உடன்படவைக்கும் வரை விரையாதிருத்தல் வேண்டும் என்று தோழி தலைவனிடம் வேண்டுவதும் உண்டு.[152] அன்னை அலைத்தல், இற்செறிப்பு இருப்பினும் நாண் அழியும் எனத் தயங்கும் தலைவி, காமம் மேன்மேலும் நெருக்க, நாணழிவு பற்றிக் கவலைப்படாது,

"நாணும் விட்டேம் அலர்கவில் வூரே"[153]

எனத் துணிந்து விடுகிறாள்.

தலைவன் உடன்கொண்டு போகத் தேரொடு வந்தான்; துயிலும் தலைவியை எழுப்ப முயலும் தோழி 'எல்வளை' எனத் தலைவியை அழைக்கிறாள். அவள் விரைந்தெழின் வளைஓசை கேட்கும் என்பதால் தலைவியும் அதை உணர்ந்து தன் பஞ்சலை நீங்கி நுதல் கவினுற உடன் போக்கு செல்ல எழுகிறாள். தோழி 'முகிலின்றி வானம் இருக்கும் காலம் தற்போது அரிதின் வாய்த்தது; காதலனுடன் இடையறாக் கூட்டம் எய்த உடன்போக்கு எழுக!' எனத் தெரியிழையைத் தேற்றி அனுப்புகிறாள்.[154]

உடன்போக அனைத்து ஏற்பாடுகளுடனும் தலைவன் வருகிறான். தலைவியை அனுப்பித்தர வரும் தோழி அவள் எதற்கெல்லாம் வருந்துவாள் என்பதனை நுணுகி ஆராய்ந்து தேறுதலாகக் கூறுகிறாள்.

"வேலுடைய வினைஞர் துணையாக வர, மாலைகளும் தழையாடைகளும் தொடுக்கப்பட்டுள்ளன. பனிப்பருவம் நீங்கி, இளவேனில் தொடங்கியதால், மலர்கள் ஈன்ற மரங்கள் நிறைந்த வழியும் இனியது! அதனால், பூந்தாழிகள்,

வயலைக்கொடி, நொச்சி ஆகியன உன்னால் நீரூற்றப்படாமல் வாடினும் நினையாதே; அன்னை அறியாமையால் உன்னைப் பிரிந்துபடும் அல்லலை நினையாதே; தமையன்மாரின் புலிபோன்ற தலைமைத் தன்மையை நினைத்துக் கலங்காதே!

"நின்னினும் மடவள் நனிநின் னயந்த
அன்னை யல்லல் தாங்கி"

நீ காதலன் அன்பே பெரிதெனச் செல்க!"[155] என்கிறாள்.

"கடு ரலரெழுச் சேரி கல்லென
ஆனா தலைக்கு மறனி லன்னை
தானே யிருக்க தன்மனை"[156]

நீ மலைநாட்டில் தலைவனோடு செல்லும்போது, களிற்றின் அடிச்சுவட்டில் தங்கிய நீரை உண்பது இனிது!" என்றும் அன்னை அலைப்பை மீண்டும் நினைவூட்டுகிறாள்.

தமர்வரைவு மறுத்தலின் உடன்போக்கு

தமர்வரைவு மறுத்தமையால் வேறே செயல்வகை இல்லை; உடன்போக்கு ஒன்றே துணிவு.

"குன்றக் குறவ னார மறுத்தென
நறும்புகை சூழ்ந்து காந்த ளூறும்
வண்டிமிர் சுடர்நுதற் குறுமகள்
கொண்டனர் செல்வர்தங் குன்றுகெழு நாடே"[157]

என்றபடி தலைவியை அழைத்துச் செல்கிறான் தலைவன். ஆனாது அலைக்கும் அன்னையினின்றும் விடுபடுதலை ஒருவகையான துயர்துணிவு ஆகக் கருதுகிறாள் மகள். அறத்தொடு நின்று வரைய இயலாத வண்ணம் அன்னையின் கடுமொழியும், அலைப்பும், சினமும் உள்ளன. மையலுற்ற அன்னை ஐயமின்றிக் கடுங்கூவிளள் ஆகி,

"எவ்வாய்ச் சென்றனை யவனெனக் கூறி
அன்னை ஆனாள்" கழறிச் சிறுகோல்

எடுத்து அடிக்கவும் செய்கிறாள். எங்கோ தேர்வந்தது என்றும் மகளை அலைத்துக் கடுமையாக அடித்ததால் மகள் சென்றாள் என்பதை அன்னையும் ஒப்புகிறாள்.[158]

வரைவு வேண்டி வந்தும் தமர்மறுத்ததால் தேரேறிச் செல்லும் தலைவி 'அறனில் யாய்க்கு' அதை அறிவிக்குமாறு வேண்டுதலில் தாய்மீது தான் கொண்ட வெறுப்பை வெளியிடுகிறாள்.[159]

நொதுமலர் வரைவில் உடன்போக்கு

நொதுமலர் வரைவு வேண்டிவர, ஒப்பும் தமரிடம் அறத்தொடு நிற்பதா, அன்றி உடன்போக்கு நேர்வதா எனத் தடுமாறுகிறாள் தலைவி, நாணம் மீறியது ஆயினும் உடன்போக்கே, கற்பினைக்காக்கும் திட முடிவாகும். தலைவியின் காதல் உணர்ச்சிக்கும், தாயின் குடிப்பெருமைக்கும் இடையே, மௌனமான மனப்போராட்டம் நடக்கிறது. இறுதியில் மகள்,

"நனைவிளை நறவின் தேறல் மாந்திப்
புனைவினை நல்லில் தருமணற் குவைஇப்
பொம்மல் ஓதி எம்மகள் மணனென
வதுவை அயர்ந்தனர் நமரே அதனால்
... ... ... ...
அருஞ்சுரம் சேறல் அயர்ந்தனென் யானே"[160]

என்று உடன்போக்கைத் தேர்ந்தெடுக்கிறாள்.

மகளது எண்ணம் உணராது, 'இன்றுநின் ஒலிகுரல் மண்ணல்' என்று தாய் கூறவும், அறியாத் தேயத்தில் சிறியோனுடன் அன்னையைப் புலந்து உடன்போனாள் என்று பிறகு அன்னை உணர்கிறாள்.

மணப்பருவம் எய்திய மகளிரை மகட்கொடை நேர்ந்ததற்கு அடையாளமாக உறவினர்கள் தம் இல்லத்தில் மங்கலநீராட்டும் சடங்கிற்கு 'மண்ணல்' என்பது பெயர். ஏதிலானுக்கு மகட்கொடை தமர் நேர்ந்தனர் என்று அறிந்த அன்றே உடன்போக்கு நடப்பதால், நிலைமையின் தீவிரம் கருதி நெடியவேலும் சிடுகும் மட்டுமே போதும் என்று தகுந்த முன்னேற்பாடு இன்றியும் தலைவன் உடனழைத்துச் செல்கிறான்.

உடன்போக்கில் தோழி ஓம்படை கூறல்

உடன்போக்கு செல்லத் தலைவியைத் தூண்டி அனுப்பி வைப்பவள் தோழியே ஆயினும், சுற்றமும் ஆயமும் இன்றித் தனித்து அனுப்புதல் அவளுக்கு மன நெகிழ்வைத் தருகிறது. இனி, தலைவனே அவளுக்கு அனைத்துமாய் இருக்க வேண்டும் என்று ஓம்படுத்துரைக்கிறாள்.

"இன்னா செய்யினும் இனிதுதலை யளிப்பினும்
நின்வரைப் பினளென் தோழி
தன்னுறு விழுமம் களைஞரோ இலளே"

"நின்னுடைய பிழையா மொழியைத் தேறி,
நின்னுடன் வரும் தலைவி, இளமைமாறி, வனமுலை
தளர்ந்து, நரை முடித்து முதுமை அடையினும்
நீங்காது இருக்க வேண்டும்"

"இவள் நின்னையன்றி வேறு பற்றுக்கோடு இலள்.
இளமையில் நினக்குப் பலவகையிலும் இன்பம்தரும்
இவளை, இப்போது நீ பேணுதல் உலக இயல்பே.
அவளால் இன்பத்தை அடைய முடியாதிருக்கும்
முதுமைப் பருவத்திலும் இதுபோன்றே பேணுக!"

என்று தானே தாயாகி நின்று ஓம்படை கூறி, தேற்றி, அனுப்பிவைக்கிறாள்.[161]

உடன்போக்கில் தலைவியின் மகிழ்ச்சி

உடன்போக்கு செல்லும் தலைவி, எண்ணித்துணிந்த செயல் என்பதால் சற்றும் தயக்கமோ, மயக்கமோ இன்றி மகிழ்ச்சியுடன் செல்கிறாள். அன்னையை விட்டும், அலர் எழுப்பிய ஊரைவிட்டும் விடுதலையாகும் மனஉணர்வும், தன்னை விரும்பும் தலைவனுடன் கற்பறம் ஆற்றச்செல்லும் அறவுணர்வும் கொண்டிருப்பதால், தாயை எண்ணிக் கலங்காது மகிழ்வுடனே செல்கிறாள்.

முளிஎயிற்றுத் துவர்வாயினள் தலைவனுடன் ஊசலாடி, முருந்தேர் வெண்பல் முகிழ்நகையுடன் விளையாடிச் செல்கிறாள். தலைவன் அவள் மார்பினை அணங்கு என்னும் போதும், கண், மார்பு, தடமென்தோளைப் பாராட்டும்போதும் நாணிக்கண்புதைக்கிறாள். தலைவன் அவள் விருப்பப்படி மலர்பறித்துத் தர, தலையில் சூடியும், பஞ்சாய்ப் பாவைக்கு அணிவித்தும் தலைவன் உள்ளம் மகிழக் காரணமாகிறாள். கன்றுடைய பிடிக்கு உணவூட்டும் வேழத்தைக் காட்டியும், ஆங்காங்கே விளையாடத் தங்கியும் இளைப்பாற்றித் தலைவன் அழைத்துச் செல்வதால் தாயைப்பிரிந்த துயர் ஏற்படுவதில்லை. அத்துடன் தலைவனே வியக்கும் வண்ணம், அவனுக்கு இணையாக, வளையல் ஒலிக்க முன்கையை வீசி, வலிமையுடன் நடந்து செல்கிறாள். உடன்போக்கு குறித்த அவளது உறுதியான எண்ணம் இதனால் புலப்படுகிறது.[162]

தாயை வெறுத்துச் செல்வதால் தன் இழப்பால் தாய் வருந்துவாள் என்னும் நினைவே மகளுக்கு இல்லை. தாய் நயந்தெடுத்த ஆய்நலம் தலைவனுடன் சேர்தலாலேயே கவின்பெற்றது. இச்செறிப்பும், பாதுகாவலும் செய்து, தன் இன்பத்திற்கு இடையூறு விளைத்த நற்றாய், செவிலி, பிறதாயராகிய முதுமகளிரை வெறுத்து, ஆயத்தோர்க்கு மட்டும் தான் ஊர்சென்று சேருதலைக் கூறுமாறு வழியிற் கண்ட அந்தணரை வேண்டுகிறாள்.[163]

தமர் மறுத்தலால் தலைவனுடன் தேர் ஏறி அருஞ் சுரும் கடந்த தலைவி, தன் வெற்றியைத் தாய்க்கு அறிவிக்க நினைக்கிறாள். அறுசெல்மாக்களிடம் 'தாயைப் பிரிதலால் தான் துன்புறவில்லை; தன்னை நயந்து பாராட்டிப் பின்னர் இயற்றவேண்டிய அறச்செயல் அறியாமையால் வரைவு மறுத்து, அதனால் மகளை இழந்த தாய்க்கு அதை உணர்த்த வேண்டும்' என்பதாகக் கூறி அனுப்புகிறாள்.

> "நற்றோள் நயந்து பாராட்டி
> யெற்கெடுத் திருந்த வறனில் யாய்"[164]

என்னும் அவள் கூற்றில் கடமை உணர்வை விட, தாயின் தவறைச் சுட்டும் உணர்வே புலப்படுகிறது. அறனில்யாய் எனினும் செல்லும் வழியில் ஏதும் உண்டோ என்று கவலும் இயல்புள்ளவள் தாய்; கடுங்கட் காளையுடன் தேரேறிச் செல்வதால் அச்சம் தேவையில்லை என்றும் உணர்த்த வேண்டுகிறாள்.

உடன்போக்கறிந்த தாயின் நிலை

"பெண்ணைக் கண்டித்து வளர்க்காதவர் பின்னால் தம் வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொள்ள நேரிடும்" என்பது துருக்கி நாட்டுப் பழமொழி.[165] தன் பெண்ணை அவள் விரும்பிய இடங்களுக்கெல்லாம் அனுப்பித் தந்து முழுஉரிமை கொடுத்திருக்கும் தாயும் மகளை அறிந்து கொள்வதில்லை; மகள்மீது ஐயுற்று இற்செறித்துக் காக்கும் தாயும், அவள் ஓடிப்போகக்கூடும் என்று சிறிதும் நினைப்பதில்லை. தன் காவலை மீறி ஏதும் நடவாது என்று இறுமாந்திருந்த தாய்க்கு, மகளின் உடன்போக்கு பேரதிர்ச்சியாயுள்ளது. தன் மகளைத் தான் வளர்த்தவிதம் சரியில்லை என ஊரார் பழிக்கத் தன் குடிப்பெருமைக்கு இழுக்கு நேர்ந்ததே என நாணுகிறாள்.

தாய் தலைவனைத் திட்டல்

"தாயைப் போல மகள் என்று சொல்பவர்கள் உண்டு. தற்காலத்தில் தாயைவிடவும் வல்லவள் மகள் என்றாகிவிட்டது!"[166] என்று அறிஞர்

லார்ட் ஜெர்மன் கூறுவது போல, தாய் எட்டடி பாய, மகள் பதினாறுஅடி பாய்கிறாள். தலைவியை நன்கு பாதுகாவாது விட்டுவிட்டு வருந்தும் தாயின் சோர்வு தோற்றுவித்த சினம், மடைமாற்றம் கொண்டு அவளை அழைத்துச் சென்ற தலைவன்மேல் பாய்கிறது.

ஒன்றுமறியாத தன்மகளைப் பொய்கூறி வஞ்சித்து அழைத்துச் சென்ற தலைவனை, 'அறனிலாளன், வஞ்சினக்காளை, வன்கண்காளை, சிறியோன், ஏதிலன், நொதுமலாளன், வன்கணாளன், கடுங்கட்காளை' [167] என்று திட்டுகிறாள். ஆற்றல் மிக்க காளை போன்றவன் ஆயினும், இன்னும் நன்மை, தீமை உணராத விடலைப் பருவத்தினனே! ஆதலின் மகளை மயக்கி அழைத்துச் சென்றிருக்கிறான் எனக் குற்றம் சுமத்துகிறாள். அதற்கு அவன் பொய்கூறும் வல்லமை மிகப் பெற்றிருக்கிறான்.

"மையணற் காளை பொய்புக லாக"

"செல்பெருங் காளை பொய்மருண்டு"

"கூர்வேல் விடலை பொய்ப்பப் போகி"

"பொய்வல் காளை" [168]

என்பதால் பொய்யையும் இனிமையாகப் பேசி மகளின் நெஞ்சத்தைப் பிணித்தலின் மகள் சென்றுவிட்டாள் என நினைத்துக் கலங்குகிறாள்.

"தணிந்த பருவஞ் செல்லான் படர்தரத்
துணிந்தோன் மன்ற துணைவெங் காளை" [169]

என்னும் கூற்றால் எல்லாரும் பார்த்து மகிழத் தன் இல்லில் மணஞ்செய்யாததும், குளிர்ந்த பருவத்தில் அழைத்துச் செல்லாததும் குறித்துத் தலைவன் சாடப்படுகிறான்.

மகளை ஏமாற்றிச் சென்றவனாதலின் பண்பிலான் என்றே கருதுகிறாள். எவளோ ஒருத்தி பெற்ற மகனை உயர்வாகக் கருத இயலாது 'அவன்' என்ற

சுட்டுப் பெயரால் மட்டும் குறிப்பிடுவது தாயின் சினத்தைக் காட்டுகிறது. களவைக் கற்பாக்கும் அறநெறியாக உள்ள வதுவை மணத்தைத் தனது இல்லத்தில் நடத்தத் தலைவன் முயன்றிருக்க வேண்டும். அதைச் சிறிதும் சிந்தியாது உடன் போக்கைத் தேர்ந்தெடுத்தலின் அவன் அறவிலாளனே என்று நம்பித் திட்டுகிறாள்.

தலைவனின் தாயைத் திட்டுதல்

தான்பெற்ற இன்பம் வையகம் பெறட்டும் என்பது சான்றோர் பண்பு. தான் அடைந்த துயரம், தலைவனின் தாயும் அடைய வேண்டும் என்பது மகளை இழந்த தாயின் பண்பு. இவனை அன்று ஒருத்தி பெற்றதனாலன்றோ; இன்று தனக்குத் துன்பம் நேர்ந்தது என்று நினைந்தவழி தலைவன் தாயும் திட்டப்படுகிறாள்.

"நினைத்தொறும் கலிழும் இடும்பை யெய்துக
. . .     . . .     . . .     . . . .
வெஞ்சுரம் என்மக ளுய்த்த
வம்பமை வல்வில் விடலை தாயே"

"எம்போல்
பெருவிதுப் புறுக மாதோ எம்மில்
பொம்மல் ஓதியைத் தன்மொழிக் கொளீஇக்
கொண்டுடன் போக வலித்த
வன்கண் காளையை ஈன்ற தாயே"[170]

என்று தன் வயிறெறிந்து சாபம் இடுகிறாள் மகளைப் பெற்றதாய். காதலியுடன் மகன் வருவான் என்பதால் தன் மனையை மணமனையாய் அணிசெய்கிறாள் மகனைப் பெற்ற தாய். பெண் வீட்டில் நடைபெறவேண்டிய சிலம்புகழீஇ நோன்பைத் தலைவன் தாய் செய்கிறாள்.

பொய்வல்ல காளையை ஈன்றவள், மகளுக்குச் சிலம்புகழித்தாலும், பின்னர் நடக்கும் வதுவையாயினும் தன்மனையில் நடக்க அவள் உடன்படவேண்டும்; அதை அவளுக்கு யாரேனும் எடுத்துச் சொல்ல வேண்டும் என விரும்புகிறாள் மகளைப் பெற்ற தாய்

ஊழ்வினையைத் திட்டுதல்

தாயைத் தேற்ற வந்தோர் மகள் சென்றது ஊழ்வினைப் பயனால் இருக்கலாம் என்கின்றனர். அறம்புலந்து பழிக்கும் அண்கணாட்டியாகிய தாய், அவ்வூழையும் திட்டிச் சாபம் இடுகிறாள்.

"நாடொறுங் கலிழு மென்னினும் இடைநின்று
காடுபடு தீயிற் கனலியர் மாதோ
நல்வினை நெடுநகர் கல்லெனக் கலங்கப்
பூப்புரை யுண்கண் மடவரற்
போக்கிய புணர்த்த வறனில் பாலே"

என்றும்,

"உடன்போன மகளைத் தேடிச்சென்று தமர் மீட்டு வருதலைக் காண்பது இழிவு. அதைக் காணுமாறு என்னை வைத்த கூற்று பெரியதாழி கவிக்கப்பட்டு இறந்து ஒழிவதாக!"[171]

என்றும் தாய் மனம் வெந்து கூறுகிறாள்.

தாய் தன்னையே திட்டுதல்

தலைவன், அவன்தாய், ஊழ் ஆகியனவற்றைப் பழித்தும் ஆறுதலடையாத தாய், மகள் உடன்போக்கு செல்லத் தனது அலைப்பும் காரணம் என்பதை உணர்கிறாள்.

"அமர்க்கண் அஞ்ஞையை அலைத்த தன் கைகள் அன்னி என்பான் வெட்டிச் சாய்த்த திதியனின் புன்னை மரம்போல மிக்க துன்பத்தை அடையட்டும்"[172]

என்று தன்னைத்தானேயும் திட்டிக் கொள்கிறாள்.

அன்னை மகளுக்கு இரங்குதல்

மகள் தன்னை விடுத்துச் சென்ற சினம் சிறிது அடங்கியதும், தாய் மகளை நினைந்து வருந்துகிறாள். தலைவன் அழைத்ததும் உடன்போகும் அளவிற்கு ஆராயாத மனம்கொண்ட தன்மகள் மிகவும் இளையவள்; மெல்லியள். அவளோ, இப்போது வன்மையான எண்ணங்கொண்டு சென்றாள் என மகளின் மென்மையையும், பாலை நிலத்தின் வன்மையையும் ஒப்பிட்டுப் பார்க்கிறாள்.

"உடன்போக்கு மேற்கொள்ள அவள் பாலை நிலத்தில் நடந்து செல்ல வேண்டும். அவளது அஞ்சிலம்பு அடிகள் நிலத்தில் ஒன்றியிருக்க முடியாது; பந்தாடினாலும், கழங்காடினாலும் அடிவருந்தும் செல்வமகள் பாலையில் நடக்க இயலுமா? ஆயத்துடன் எப்போதும் பிரியாது விளையாடும் மகள், ஆற்ற அருஞ் சுரத்தில் அவனோடு அடிஅழகு சிதையச் செல்வது எளிமை என்றெண்ணினாளோ? ஆம்பல் மலரினும் தண்ணிய மகள், பாலை வெப்பத்தைப் பொறுப்பாளோ?"[173] என்று புலம்புகிறாள்.

தந்தை இடனுடை வரைப்பில் ஓடியாடி, உணவுண்ண மறுக்கும் மகளை, கூந்தல் தடவி இன்சொல் கூறிப் பாராட்டுகிறாள் அன்னை. தேன் கலந்த தீம்பாலும், அம்பொரி விரவிய பாலும் உண்ண வேண்டி அலைப்பினும் உண்ணாத மகள், இப்போது உணவும் நீரும் கிடைத்தற்கரிய காட்டில் செல்கிறாள். நெல்லிக்காயையே உணவாக ஏற்று, வறண்ட சுனைநீரையும், விலங்குண்ட கலங்கல் நீரையும், காதலன் தோண்டும் ஊற்று நீரையும் இனிது எனக் குடிப்பாளோ? செல்வம் மிக்க தந்தை இல்லத்தையும் செழுமனையில் தனியே இருக்கட்டும் எனும்படித் தாயையும் விட்டுச் சென்ற மகள் நீரும், நிழலும், உணவும் அற்ற வறிய பாலை நிலத்தில் எப்படி நடப்பாள்[174] என்னும் தாயின் கூற்றில் அவளது தவிப்பு வெளிப்படுகிறது.

கோதை மயங்கினும் குறுந்தொடி நெகிழினும் அழும் மகளின் கண்கள், பாலை வெப்பத்தில் ஒளி மங்குமே? நயந்த காதலனே எனினும் குறுமகளின் கண்கள் வெம்மை தாங்கா. கூந்தலைப் பின்னிவிடும்வரையும் பொறுமை தாங்காது ஓடும் மகள், ஏதிலன் பொய்ம்மொழி நம்பிச் செல்லும் இன்று, அவன் பின்னி மலர் சூட்டிவிடப் பொறுமையுடன் செல்ல வல்லுநளோ?[175]

மணப்பருவம் அடைந்தும் இன்னும் விளையாட்டுப் பெண்ணாக ஆயத்துடன் ஆடுதல் கூடாது என்று முதல்நாள் கண்டித்தாள் தாய். மறுநாள் மகள் கட்டிய மணல்வீடு அப்படியே இருக்கத் தலைவனுடன் சென்ற மகளை எண்ணிப் புலம்ப நேர்ந்தது. தாய் அணைத்த கை நெகிழப் பொறாது கட்டி அணைத்துத் தூங்கும் இயல்பும், தான் வளர்த்த வயலைக் கொடியை ஈற்றா தின்றதால் பாலும் உண்ணாது அழும் இயல்பும் கொண்ட மகள் இன்று புலிபார்த்து இருக்கும் புல்லதர்ச் சிறுநெறியில், மையனற் காளையின் பொய்நம்பிச் செல்ல வல்லுநளோ? சிலம்பின் ஒலியும் தாயை எழுப்பிவிடும் எனக் கழற்றிக் கையில் எடுத்துச் செல்லும் மகள் காளையுடன் விரைந்து நடப்பாளோ, அல்லது தங்கிப் போவாளோ? இரண்டுமே அவளுக்குத் துன்பமே தரும் என்றெண்ணிக் கலங்குகிறாள் தாய்.[176] அன்னை, மகளின் அடிமென்மையை நினைத்துப் புலம்புதலை,

> "அரக்காம்பல் நாறும்வாய் அம்மருங்கிற் கன்னோ
> பரற்கானம் ஆற்றின கொல்லோ–அரக்கார்ந்த
> பஞ்சிகொண் டூட்டினும் பையெனப் பையெனவென்
> றஞ்சிப்பின் வாங்கும் அடி"[177]

என்று நாலடியாரும் நவில்வதை ஒப்பிடலாம்.

தெய்வத்தைப் பரவுதல்

மெல்லியல்புடைய தன் அரிவை போகும் சுரன் தண்மழை பொழிந்து நனி இனியவாகுக என்றும், அறிந்த மாக்களையுடைய செறிந்த சேரிகள் இருக்கட்டும்

என்றும் தெய்வம் பரவுகிறாள். அறியாத தேயத்தில் மகள் அறிந்த ஒரே ஒருவன் தலைவனே. அவன் மார்பில் இனிய துயில் கொள்ளட்டும். அப்போதும் கள்வர் அடிக்கும் பறையொலி கேட்டு அஞ்சுவாளோ என்று மனம் நோகிறாள்.[178]

மகள் மணத்திற்கு எதிர்ப்பில்லை எனல்

மகள் உடன்போக்கு செல்லும்வரை அதற்குரிய அடையாளங்கள் ஏதுமின்றி அமைதியாகவே இருப்பதால் தாய் ஐயுற வழியில்லை. இந்நிலையில் மகளின் உடன்போக்கு தாய்க்குப் பெரும் அதிர்ச்சியாய் உள்ளது. தன்மகள் ஒரு தலைவனை நேசித்தாள் எனத் தெரிந்திருப்பின் திருமணத்தை இங்கேயே செய்திருக்கலாமே என்ற தன் தவிப்பை வெளியிடுகிறாள்.

> "அம்பல் பெண்டிர் இன்னள், இனையள் என்று பலநாள் அவளது களவொழுக்கம் பற்றி வந்து கூறினர். நானோ, மகள் நாணுவள் என்று ஏதும் கேட்காமல் இருந்தேன். இருந்தும், அன்னையறியின் இவணுறை வாழ்க்கை அரிது என்று போனாள். செல்லும் வழியில் அவர்களை வரவேற்று விருந்தோம்பும் மனைகெழு பெண்டாக நான் ஆவேனாக!"[179]

என்று கூறுவதன் மூலம் திருமணத்திற்குத் தான் எதிர்ப்பு இல்லை என்கிறாள்.

தன்னிடமிருந்து மகளைப் பிரித்த கண்ணோட்டம் இல்லாத காளைக்கு, மகள் கற்புக்கடம் பூண்டதைச் சிறிது அறிந்திருப்பினும், அவளை அவனுக்கே மணமுடித்து இன்பம் தரும் இன்துயிலைக் கூட்டியிருப்பேன் என்னும் தாய், தோழியிடம்,

> "தன்னம ராயமொடு நன்மண நுகர்ச்சியின்
> இனிதாங் கொல்லோ தனக்கே பனிவரை
> யினக்களிறு வழங்குஞ் சோலை
> வயக்குறு வெள்வே லவற்புணர்ந்து செலவே"[180]

என்று கேட்டு வருந்துகிறாள்.

தானும், தலைவியும் அஞ்சியபடி தாய் களவிற்கு எதிரியில்லை என்பதை அறிந்ததும், சுரத்தில் நடந்து சென்று, தலைவி வீண் துன்பம் அனுபவிக்கத் தானே காரணம் என்று வருந்துகிறாள் தோழி. உடனிருந்து, உடன் வளர்ந்து, உடன் விளையாடி இன்மொழி வழங்கிய தலைவியைப் பிரிந்ததால் தனித்திருந்து, யாரோடும் சொல்லாடாது அழுகிறாள். தன்னிலும் வருந்தும் தோழியைக் கண்டு, தாய்,

'விட்டுப்போன மகளுக்கு நோவதா?; இருக்கும் இந்த
மகளுக்கு நோவதா?' என நினைத்துப் பார்க்கிறாள்.

போனவளோ தக்க துணையுடன்தான் சென்றதால் அவளுக்கு நோவது வீண்; துணையின்றிக் கலிழும் இவளுக்கே வருந்துவேன்[181] எனத் தன் துயரையும் மறந்து தோழியின் துயர் தீர்க்கும் அருட்கடலாக மாறுகிறாள்.

சிலம்புகழீஇ நோன்பு

வதுவை மணம் நடைபெறுமுன் தாய் வீட்டில் மகளுக்குச் செய்யப்படும் சடங்கு சிலம்பு கழீஇ நோன்பாகும். இளமை முதல் தலைவி அணிந்திருந்த சிலம்பைக் கழித்து மணத்திற்கெனப் புதிய சிலம்பு அணிவித்தலைத் தாய் பார்த்து மகிழ்தலால் அதைச் 'சிலம்பு கழீஇய செல்வம்' என்று குறிப்பிடுகிறாள். உடன் செல்லும் மகள், செல்லும் வழியில் பிறர் வீட்டிலோ, அன்றித் தலைவன் இல்லத்தில் அவன் தாய் செய்யவோ சிலம்பு கழித்துக் கொள்கிறாள்.

"சிலம்புகழீஇய செல்வம்
பிறருணக் கழிந்த என் ஆயிழை"[182]

என அச்சடங்கினையும் தான் பார்க்கக் கொடுத்து வைக்காது போனதை நினைந்து தாய் வருந்துகிறாள். சிலம்புகழீஇ நோன்பு தலைவன் தாய் செய்துவிட்டதைக் கண்டோர் வந்து கூறும் போது இனி வதுவையாயினும் தன் வீட்டில் நடக்கட்டும் என விரும்புகிறாள்.

"நும்மனைச் சிலம்பு கழீஇ யயரினும்
எம்மனை வதுவை நன்மணங் கழிக"[183]

என வேண்டுதல் தாய் முறையான மணச்சடங்குகட்குத் தரும் மதிப்பைக் காட்டுகிறது.

பெண் தன்மை முற்றிலும் அடைந்த மகளை ஐயுற்று இற்செறிக்காது விட்டதால் மகள் தலைவனுடன் சென்றாள். சிலம்புகழி நோன்பைத் தான் பிறந்த வீட்டில் செய்ய வேண்டும் என்று நினைக்கவில்லை. மதிப்பும், புகழுமிக்க அரிய காவலுள்ள அகன்ற இல்லத்தில் பிறந்திருப்பினும், தற்போது வறுமையுற்ற ஒருத்தி போல, அயலாரது வறிய இல்லம் புகுந்து சிலம்புகளை அகற்றும் சடங்கு செய்து கொள்கிறாளே எனத் தாய் வருந்துகிறாள். சிறுமியாயினும் கண்ணோட்டமில்லாத மகளை,

"உள்ளாது கழிந்த முள்ளெயிற்றுத் துவர்வாய்
சிறுவன் கண்ணி சிலம்பு கழீஇ
அறியாத் தேஎத்தள் ஆகுதல் கொடிதே"[184]

என்று திட்டுவதன் மூலம் தன் ஆற்றாமையை வெளிப்படுத்துகிறாள்.

தாயை உள்ளாத வன்னெஞ்ச மகள்

பிறந்தது முதல் அருமையாகப் பாராட்டி வளர்த்த தாயையும் நினைக்காமல் மகள் சென்றாள் என்ற நிலைமை தாய்க்கு மிகவும் நோவைத் தருகிறது.

"என்னும் உள்ளினள் கொல்லோ . . .
செழும்பல் குன்ற மிறந்தஎன் மகளே"

"ஈன்று புறந்தந்த எம்மும் உள்ளாள்"

"தொடிமாண் சுற்றமும் எம்மும் உள்ளாள்"

"நங்கண், உறுதரு விழுமம் உள்ளாள்"

"உள்ளாது கழிந்த... சிறுவன் கண்ணி"

"தற்புரந் தெடுத்த எற்றுறந் துள்ளாள்"[185]

என்ற அடிகளில் மகள் தன்னை நினைத்துப் பார்த்து, செலவைத் தவிர்த்திருக்க வேண்டும்; அவ்வாறு நினையாததால் அவள் வஞ்சித்துச் சென்ற வன்கண்ணி; மாயக்குறுமகள் ஆகிவிட்டாள் என்ற அன்னையின் மனத்தவிப்பு வெளிப்படுகிறது. மகள் உடன்செல்வது தாய்க்கு எப்படிப்பட்ட வேதனைதரும் என்பதையும் நினையவில்லை; தாய் வளர்த்த நன்றியையும் நினையவில்லை என்பது தாயின் குற்றச்சாட்டு.

மகள் பயின்ற பொருட்களும் பயிலிடங்களும்

தலைவி விரும்பி ஆடிய பந்து, பாவை, கழங்கு போன்ற விளையாட்டுப் பொருள்களையும், வளர்த்த கிளி, பூவை, வயலைக்கொடி, பூச்செடிகள், முற்றம், தெற்றி, ஓரை ஆயம், சோலை ஆகியனவற்றையும் தற்போது வெறிச்சென்றிருக்கத் தாய் காண்கிறாள். விளையாடும் பருவம் கழிந்ததால் பந்தும், பாவையும், கழங்கும் தாய்க்கு ஒழித்துச் சென்றனள் மகள், அவளை நினைத்துக் கூவும் கிளியைக் கண்டும், ஆடிய பாவை கண்டும்.

"இதுவென் பாவை பாவை இதுவென்
சுடர்நுதற் பைங்கிளி எடுத்த பைங்கிளி"

என அலமருகின்றனள் தாய். என்றும் பிரியாத மகளது ஆயத்தாரமு, நீர்பெய்யாது வாடிய குவளை மலரை, மகள் ஆடிய பாவைக்குச் சூட்டி அதை அணைத்து, "என் மகளை மீட்டுத் தருக!" என்றழுகிறாள் தாயும். வரியணி பந்தும், வாடிய வயலையும், தெற்றியும், நொச்சியும், சோலையும் எனப் பலவும் தாயின் கண்முன் மகள் பிரிந்ததைச் சுட்டி அவள் அவலத்தை அதிகப்படுத்துகின்றன.[186] ஒருவரது இழப்பினால் வரும் துன்பம், அவர் பயிலிடம் கண்டால் மிகும் என்பதை, ஐந்திணை ஐம்பதும்,

"பாவையும் பந்தும் பவளவாய்ப் பைங்கிளியும்
ஆயமும் ஒன்றும் இவை நினையாள் - பால்போலும்
ஆய்ந்த மொழியினாள் செல்லுங்கொல் காதலன்பின்
காய்ந்து கதிர்தெறூஉங் காடு"[187]

என்ற பாடலில் விளக்குகிறது.

அன்னையை அயலவர் தேற்றல்

அயலில் வசிக்கும் பெண்டிர் அன்னையின் துயர்தீர ஆறுதல் உரைக்கின்றனர். அவலத்தைத் தாங்கிக் கொள்ளும்படி கூறுகின்றனர். அரிதிற் பெற்ற ஒரே மகள் பிரிந்ததை உள்ளின் உள்ளம் வேகின்றது. ஊதுலைக் குருகுபோல இன்னும் உள்ளே அசைந்துகொண்டிருக்கும் உயிர் போகவில்லையே என நொந்து கொள்கிறாள்.

"ஒருமகள் உடையேன் மன்னே அவளும்
செருமிகு மொய்ம்பிற் கூர்வேற் காளையொடு
பெருமலை அருஞ்சுரம் நெருநற் சென்றனள்
இனியே, தாங்குநின் அவலம் என்றிர்; அதுமற்று
யாங்ஙனம் ஒல்லுமோ அறிவுடை யீரே"[188]

என்ற தாயின் கூற்றில் ஒரு பெண்ணை உடைய தாயின் அளவிடற்கரிய துயரம் வெளிப்படுகிறது.

நற்றாய் - செவிலி தேறுதல்

அன்பில்லாது மகள் செலினும், அவளை நினைந்து நினைந்து துயர்ப்படுகிறாள் வளர்ப்புத்தாய். பெற்ற தாயோ,

"தெறுவ தம்ம நும்மகள் விருப்பே"

என்று தொடங்கி, 'உயிர்போவது போல் பாழ்படு நெஞ்சம் படரடக் கலங்கும் வண்ணம் மகள் காடிறந்தனள்; அவள் மீது அன்பு வைத்தலை இனித்தாம் மறத்தலே வேண்டும்' என ஆறுதல் உரைக்கிறாள்.

"தலைவனோடு மகள் வைத்திருந்த நட்பு நல்லூர்க்கோசர் நன்மொழி போல் இப்போது உண்மை என ஆகிவிட்டது. உடன்போக்கிலேயே அவர்க்கு மணம் நடந்து ஆகிவிட்டது. உடன்போக்கிலேயே அவர்க்கு மணம் நடந்து இருக்கும் என்பதால் அதைக் குறித்த வருத்தம் வேண்டாம்"[189] எனச் செவிலியும் நற்றாய்க்குத் தேறுதல் உரைக்கிறாள்.

மகள் தேர்ந்தெடுத்த வழி அறவழியே எனினும் அவ்வுடன்போக்குத் தனக்கு நன்மை செய்யாததால் 'மாண்பில் கொள்கை' என்று அதனைக் கடிகிறாள். இன்னானோடு ஓடிவிட்ட இன்னாளின் தாய் என ஊரவர் சுட்டிப் பழிக்கின்றனர். தான் ஏதும் முயலாமலேயே இத்தகைய பட்டம் பெறுவதற்குத் துணை செய்தவள் தோழியாகிய தன் மகளே! அறத்தொடு நின்று தனக்கு அறிவியாமல், உடன்போக்கு நேர்வித்துப் பழிதேடித் தந்தாளென மகளை நொந்து கொள்கிறாள் தாய்.[190]

தாய் மகளைத் தேடிச் செல்லல்

மகளைத் தேடிக் கண்டுபிடித்து மீட்டுவிடலாம் என்று நம்பி, சுரத்தில் தானும் பின் செல்கிறாள். தன் மகளை ஒத்த பலரைக் காண்கிறாள். அவருள் குறிசொல்லும் சிறுகுடிக் கானவன் மகளைப் பார்த்துத் தன் மகளைப் பற்றி வினவுகிறாள். கழங்குக் குறி கூறும் வேலனிடம்,

"ஆகுவது அறியும் முதுவாய் வேல
கூறுக மாதோ கழங்கின் திட்பம்
மாறா அரும்பனி கலுழும் கங்குல்
ஆனாது துயரும்எம் கண்ணினிது படீஇயர்
எம்மனை முந்துறத் தருமோ
தம்மனை உய்க்குமோ யாதவன் குறிப்பே"[191]

என்று குறிகேட்கிறாள். ஏதொரு வழியும் புலப்படாநிலையில் பெண்டிர்க்குக் கடவுள் வாக்குப் போலக் கழங்கின் குறி ஆறுதல் தருவது வழிவழி வழக்கமாக உள்ளதைத் திணைமாலை நூற்றைம்பதும்,

"என்மனைக் கேறக் கொணருமோ எல்வளையைத்
தன்மனைக்கே உய்க்குமோ தான்"[192]

என்று உரைப்பதால் உணரலாம்.

மகளைத் தேடிப் பாலைநிலத்தில் செல்லும் தாயின் துன்பம் அளவிறந்ததாக உள்ளது. பாழ்பட்ட வெய்ய நெஞ்சுடன் மகளைக் கண்டுவிடலாம் எனும் துடிப்புடன் செல்கிறாள்.

"காலே பரிதப் பினவே கண்ணே
நோக்கி நோக்கி வாளிழந் தனவே
அகலிரு விசும்பின் மீனினும்
பலரே மன்ற விவ் வுலகத்துப் பிறரே"[193]

என்று தேடிச் செல்லும் தாய் மிகவும் களைத்துப்போகிறாள். தன் மகளைப் போலும் ஒருத்தியுடன் வரும் தலைவனைத் தன் இல்லத்தில் விருந்தேற்றுச் செல்லுமாறு வேண்டுகிறாள். 'ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன்பிள்ளை தானே வளரும்' என்னும் பழமொழிக்கேற்ப தான் ஒரு மகளை விருந்தோம்பின் தன்மகளும் அதுபோல் வேறோர் இடத்தில் நற்குணமுள்ளோரால் உபசரிக்கப்படுவாள் என்பது தாயின் நம்பிக்கை. வருபவர் தூரத்திலிருந்து வரும் அரச குலத்தவனாயினும், தன் மகளின் தந்தையும் அவனை விருந்தோம்புதற்கேற்ற செல்வமுடையனே என்று விளக்கி, தன் மகளைப் பற்றி விசாரித்து, விபரம் கூறும் அளவில்,

"ஈன்றேன் யானே பொலிகநும் பெயரே"[194]

என அவனை வாழ்த்துகிறாள்.

தாயின் நம்பிக்கை பொய்ப்பதில்லை. இடைச்சுரத்து நடந்து களைத்து இருட்டும் வேளையில் வரும் தலைவன் தலைவியை ஆங்கு வாழ்பவர் தங்கிச் செல்லுமாறு வேண்டுகின்றனர்.

"எம்மூர் அல்ல தூ ர் நணித் தில்லை
வெம்முரட் செல்வன் கதிரும் ஊழ்த்தனன்
சேர்ந்தனை சென்மோ பூந்தார் மார்ப
இளையள் மெல்லியள் மடந்தை
அரிய சேய பெருங்கல் ஆறே" [195]

என்று அதற்குக் காரணமும் கூறுகின்றனர். முதுவாய்ப் பெண்டின் செதுகால் குரம்பையுள் தன்மகள் தூங்குவாள் என்று நம்பும் வண்ணம் பிறதாயரும் இரங்குகின்றனர்.

<u>கண்டோர் தாய்க்கு அறிவுறுத்தல்</u>

தேடிச் செல்லும் வழியில் கண்டோரை வினவுகிறாள் தாய். அவரும் கடுஞ்சூள் மகளை இழந்து துன்புறும் தாயிடம், நயந்த காதலனுடன் சென்றவளைக் கண்டதாகக் கூறுகின்றனர். அப்போதுதான் நடந்து சென்று இருப்பதால், இளைப்பாறத் தங்கிய தாய், இனி எங்கும் ஓய்வெடுக்காது விரைந்து சென்றால் அவர்களையோ அல்லது அவர் சென்ற வழியையோ காணலாம் என்றும் தாம் கண்டது உண்மை எனத்தாய்மனம் ஏற்குமாறு கூறுகின்றனர். [196]

பலரிடமும் நல்லோரை மெய்ப்பாட்டால் அறிந்து கைதொழுது, 'கண்டீரோ' என வினவும் செவிலி, பரந்து அங்குமிங்கும் அலமந்து திரிந்தாள். அதைக் கண்டோர், தாமே அவளிடம் சென்று காளையொடு கன்னியைக் கண்ட செய்தி நவில்கின்றனர். அவர்கள் கூறுவது தன்மகள் பற்றித்தானா என்பதை நன்கு ஆராய்ந்து தெளியும் பொருட்டு,

"மணமாகாததால் அஞ்சிலம்பே அணிந்த என் மகளது அடிகள் பையய இயலி, நிலத்தில் படிந்தனவோ?" என வினவுகிறாள். [197]

"பஞ்சி மெல்லடி கொண்டு செல்வத் தந்தையின் வீட்டில் ஆடுபந்து உருட்டுநள் போல் ஓடும் மகள், பரலில் நடந்தாள் என்பதைக் கேட்கின்ற தாய்,

நெர்ந்தழி அவலமொடு என்னாகுவள் கொல்! அந்தோ! அவள் அளியள்!"[198]
எனக் கண்டோர் இரங்குகின்றனர்.

தன் ஒண்டொடியை வினவும் பேதமைமிக்க தாயைக் கண்ட, அருமறை நவின்ற நாவும், திறம்புரி கொள்கையும் உடைய அந்தணரும்,

"பேதையம் பெண்டே! இனிய காதலன் பாராட்ட, மலையைத் தாண்டிச் சென்றுவிட்ட உன்மகளைக் கண்டோம்!" என்கின்றனர்.

"கொண்டுதலைக் கழிதல் அறந்தலைப்பிரியா ஆறுதான், நின் மகள் சிறந்தானை வழிபடச் சென்றனள்; இனித்துயர் ஒழிக! மலையில் வளரும் சந்தனமும், கடலில் விளையும் முத்துக்களும், யாழில் பிறக்கும் ஏழிசையும் நுகர்வோர்க்கே பயன்மிக்க இன்பம் தருகின்றன. இவற்றின் பிறப்பிடமான மலை, கடல், யாழ் ஆகியன அவற்றால் பயன் அடைவதில்லை.

"நினையுங்கால், நும்மகள் நுமக்குமாங் கனையளே"

என்று விளக்கமாகக் கூறி,

"இறந்த கற்பினாட்கு எவ்வம் படரன்மின்
சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்
அறந்தலைப் பிரியா ஆறு மற்றதுவே"[199]

என்று தேற்றி அனுப்புகின்றனர்.

போக்குடன்பட்டோரைக் கண்டோர் கூற்று

சுரத்தில் தன் துணைவனுடன் வரும் பெண்ணைக் கண்டு ஆங்காங்கு வசிக்கும் மக்கள் தத்தமக்குத் தோன்றுவதை உரைக்கின்றனர்.

"புலிவழங்கும் காட்டில் மடந்தையைக் கொண்டுபோகும் இளையோன் உள்ளம், இடியினும் கொடிது"

என்றும்,

"வேய்பயில் அழுவம் முன்னிவரும் வில்லோன் காலில் கழல் இருக்கிறது. தொடியோளின் மெல்லடியில் மணத்திற்கு முன் அணியும் அஞ்சிலம்பே உள்ளது. பெற்றதாயைத் தவிக்கவிட்டுப் பிரிந்து வந்திருக்கும் இவர்கள் யார்கொல்! அளியர்!"[200]

என்றும் கூறுகின்றனர்.

மகளை இழந்த ஒரு தாயின் துயரத்தை, மகளைப் பெற்ற இன்னொரு தாயே அறிவாள்.

"பெற்றமனம் பித்து; பிள்ளை மனம் கல்லு"

என்பதற்கேற்பப் பெண் திடமாகப் பிரிந்து சென்று, இடைச்சுரம் தங்கினாள், ஆங்குள்ள மகளிர் பெற்ற தாயர், இவ்வுடன்போக்கு, தாய்க்கு எத்துணை நோவைத் தரும் என இரங்குகின்றனர்.

"புனையிழை மகளிர்ப் பயந்த
மனைகெழு பெண்டிர்க்கு நோவுமார் பெரிதே"[201]

என்பது அவர் கூற்று.

வீட்டுக்குவீடு வாசற்படி என்பதுபோல் 'இப்பெண் துணிந்ததைப் போல் தம் மகளிரும் ஒருநாள் ஒருவனுடன் உடன்போகத் துணிந்துவிடுவாளோ?' என்ற அச்சமே இடைச்சுரத்துத் தாயர்க்கு ஏற்படுகிறது. தாமே இழை புனைந்து கொள்ளவும் அறியாத மடப்பம் உடையவளாய்த் தன்மகளை நினைந்திருக்கும் தாய்க்கு, இவ்வச்சமற்ற செயல் எத்துணை அதிர்ச்சி தரும் என்பதை உணர்ந்து, "நோவுமார் பெரிதே" என்று கூறுகின்றனர்.

*தமர் பின்தொடர்ந்து தேடிச் செல்லல்*

தமர் அறிவதற்கு முன் மகளை மனை சேர்த்துவிட எண்ணிய தாயின் விருப்பம் நிறைவேறவில்லை. மகள் உடன்போன செய்தி அறிந்த தந்தையும், தமரும் தலைவன்மேல் சினம் கொள்கின்றனர். மகளை மீட்பதன் மூலமே மானம் காக்க முடியும் என உடனே தேடிச் செல்கின்றனர்.

தலைவனும், தன்னைப் பின்தொடர்ந்து தலைவியின் உற்றார் வருவர் என்பதை அறிந்தே இருக்கிறான்.

"கடையழிய நீண்டகன்ற கண்ணாளைக் காளை
படையொடுங் கொண்டு பெயர்வானைச் சுற்றம்
இடைநெறித் தாக்குற்றது"[202]

என்னும் பரிபாடலால் மனம் ஒப்பியே மகள் சென்று இருப்பினும் உடன்போக்கில் போர் நடைபெற்றிருத்தலை அறியலாம். அப்படி நடைபெறும் போரில் தலைவன் தோற்பதும், மகளைத் தமர் மீட்டு வருதலும் நடப்பதுண்டு. பின்னிருட் பொழுதிலே கொண்டுதலைக் கழிந்த தலைவனைப் பிடிக்கத் தமர் விரைந்து செல்கின்றனர். ஒருவேளை, தமர்க்கு அஞ்சி மகளைத் தலைவன் விடுத்தால் அது தனக்கே இழிவு என எண்ணுகிறது தாய் மனம். மகளின் மணாளன் வீரனாகவும் இருக்க வேண்டும் என்று விரும்புவதால் அவ்விழிவு காணுமுன் உயிர்நீக்க வேண்டும்; அல்லது தன்னை உயிரோடு வைத்துள்ள கூற்று அழிய வேண்டும் என்று உரைக்கிறாள்.

தமரொடு பொருமாயின் தலைமகனுக்கு ஏதம்நிகழுமோ எனக் கவன்று தலைவி இறத்தலும் கூடும். கையில், வில், வேல் முதலிய படைக்கருவிகளை வைத்து இருக்கும் தலைவன் போரிட அஞ்சான். இருப்பினும் தலைவியை மணத்தலால் அவள் தமர் இவனுக்கும் தமரே! தலைவி இருவருக்கும் சேர்ந்து வருந்துவாள் ஆதலின்,

"அமர்வரின் எதிர்ப்பேன்; நுமர்வரின் மறைவேன்"

என்கிறான். இருதலைக் கொள்ளி எறும்பு போலத் தலைவி வருந்துவதைத் தவிர்க்கத் தலைவன் மறைந்து கொள்வது இழுக்காகக் கருதப்படவில்லை. அப்படித் தலைவன் மறைந்து கொள்ள வாய்ப்பாக அமைந்தது ஓர் குன்றம். தமருடன் வீடு திரும்பும் பெண் அதை வாழ்த்துகிறாள்.

"அறம்சாலியரோ! அறம்சா லியரோ!
வறனுண் டாயினும் அறம்சா லியரோ!
வாள்வனப் புற்ற அருவிக்
கோள்வல் என்னையை மறைத்த குன்றே!"[203]

என்ற அவள் கூற்று தலைவன் வீரத்தையும், தமர்க்கு ஏதம் விளையாமல் அவன் மறைந்ததையும் காட்டும்.

தமருடன் திரும்புதல் அல்லது தலைவன் வீடு சென்று சிலம்பு கழித்தல்-ஆகியவற்றில் உடன்போக்கு முடிகிறது. தலைவன் அல்லது தலைவி இல்லத்தில் வதுவை மணம் நடக்கக் களவு கற்பு ஆகிறது. மறுதரவும், மணவாழ்வும் தாய்க்கு நிறைவு தருகின்றன.

## 4.3 கற்பு வாழ்வு

கொளற்குரி மரபில், கிழவன் கிழத்தியைக் கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்ளும் கரணம் புரிந்து வாழ்தல் கற்பாகும். கரணம் என்னும் திருமணச் சடங்குகளை வதுவை, வரைவு என்னும் சொற்களாலும் குறிப்பிடுவர். தொல்காப்பியர்,

"வெளிப்பட வரைதல் படாஅமை வரைதலென்
றாயிரண் டென்ப வரைத லாறே"[204]

என்பதால், களவு வெளிப்படும் முன்னர் வரைதல், வெளிப்பட்ட பின்னர் வரைதல் எனத் திருமண முறைகள் இரண்டாக இருந்தமை புலப்படும்.

களவு வெளிப்படும் முன் வரைதல்

மகள் தான் விரும்பிய தலைவனை மணம் முடித்து வாழவேண்டும் என்று தாய் விரும்புகிறாள். மகளின் களவு வெளிப்படாத நிலையில் தமரை வேண்டிவந்து, அவர் ஒப்ப மணம் முடிக்கின்றான் ஒரு தலைவன், அவனை,

"இனிது செய் தனையால் நுந்தை வாழியர்
நன்மனை வதுவை அயரவிவள்
பின்னிருங் கூந்தல் மலரணிந் தோயே!"[205]

என வாழ்த்துகிறாள் தோழி.

வதுவை நடைபெறும் முறை

பெண்ணின் இல்லத்தில் சுற்றஞ் சூழ்ந்து நிற்கத் தமர்தர, அணி செய்யப்பட்ட மணவறையில் நடைபெறும் வதுவை நிகழ்ச்சிகளை அகநானூற்றில் 86, 136-ஆம் பாடல்கள் விளக்கிக் காட்டுகின்றன.

"பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்
முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்
புதல்வற் பயந்த திதலையவ் வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பின் வழாஅ நற்பல வுதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை ஆகென
நீரோடு சொரிந்த வீரிதழ் அலரி
பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க

வதுவை நன்மணங் கழிந்த பின்றைக்
கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து
பேரிற் கிழத்தி யாகெனத் தமர்தர"[206]

என்னும் அகநானூற்றுப் பாடலில் ( 86 ) திருமணம் நடைபெற்ற முறை எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

புதல்வர் பயந்த மங்கல மகளிரும், மண முழவும், கடவுட் பேணலும், தமர் தலைவனுக்கு மகளை ஈதலும் மணவிழாவின் சிறப்புக்குரிய நிகழ்வுகளாக இருத்தலை அகநானூறு ( 136 ) மீண்டும் சுட்டுகிறது.

"கடிநகர் புனைந்து கடவுட் பேணிப்
படுமண முழவொடு பரூஉப் பணை யிமிழ
வதுவை மண்ணிய மகளிர் விருப்புற்று
. . .  . . .  . . .  . . .
மண்ணுமணி யன்ன மாயிதழ்ப் பாவைத்
தண்ணறு முகையொடு வெண்ணூல் சூட்டித்
தூவுடைப் பொலிந்து மேவரத் துவன்றி
மழைபட் டன்ன மணன்மலி பந்த
ரிழையணி சிறப்பின் பெயர்வியர்ப் பாற்றித்
தமர் நமக் கீத்த தலைநாள் இரவின்
உவர்நீங்கு கற்பினெம் உயிருடம் படுவி"[207]

என்ற தலைவன் கூற்றில் களவில் நன்கு பயின்றவள் ஆயினும் கற்பினால் உயிருடம்படுவி-யாகத் திகழும் தலைவி, களவு வெளிப்படு முன்னர் வரைந்து கொண்டதை அறியலாம். களவு குறிப்பிட்ட கால அளவிற்கு நீட்டிக்காமல் பிறர் அறியுமுன்னே கரணம் நிகழ்ந்து கற்பு வாழ்வில் நிலைபெறுதலையே தாயும் மகளும் விரும்புகின்றனர்.

தன் மகள் வதுவை குறித்துத் தாயின் கனவுகள்

திருமண முயற்சிகளிலும் சடங்குகளிலும் தாயின் பங்கு குறிப்பிடத்தக்கதாய் அமைந்துள்ளது. மகளது தோழியர் கூட்டமும், செவிலியை ஒத்த பிற தாயரும் காண,

நெடுநகராம் உறந்தையை ஒப்பிடக்கூடிய இல்லத்தில், அறனறிந்து மூத்த சான்றோர் வதுவைக்குரிய கரணங்களைச் செய்ய, அழகிய மாட்சிமைமிக்க திருமண விழாவின்கண் அவள் கூந்தலில் மயிர்ச்சாந்தம் பூசி, மங்கல நீராட்டி, அவ்விடத்தே செய்தற்கியன்ற பல சடங்குகளையும் மங்கல மகளிர் செய்விப்ப, மகள் பலரும் அறியத் தன் காதலனை மணந்து செல்ல வேண்டும் என்பது தாயின் கனவு![208]

தன் மகளது திருமணம் நிகழும்போது அவள் எய்துகின்ற பெரிய நாணத்தைக் கண்டு உள் மகிழ்ந்து செவிலித்தாய் அவளைப் பாராட்டவும், ஈன்ற தாய் செய்ய வேண்டிய நீர்வார்த்தல் முதலிய கடமைகளைச் செய்யவும், முழவென்னும் இன்னிசைக் கருவிகள் முழங்கவேண்டும் என்றும் தாய் கற்பனை செய்கிறாள்.[209]

"தன்னம ராயமொடு நன்மண நுகர்ச்சி"[210]

நுகரும் மகளை, நிதியுடை நன்னகராகிய தந்தை இல்லத்தைப் புதிதாக அழகு செய்வித்துத் தன்னை ஈன்ற தாய், தந்தை உள்ளிட்ட சுற்றத்தினர் கூடி மணம் செய்து தரவேண்டும்[211] என்னும் தாயின் நியாயமான விருப்பம் மகள் உடன்போகும்போது நிறைவேறுவதில்லை. தம் இல்லத்தில் தாம் முன்நின்று தம்கண் களிப்ப மகளது வதுவை காண முடியாத தாய், தனது ஏக்கங்களை வெளியிட்டு வருந்துவது உண்டு.

உடன்போக்கு மேற்கொண்ட பிறகு, மகள் அறத்தொடு நின்றிருப்பின் தன்மனைக் கண்ணேயே வதுவை செய்திருக்கலாமே எனத் தாய் புலம்புகிறாள். உடன்போக்கு செல்வது அறநெறியே எனத் தெரிந்து ஆற்றி இருப்பினும், எவ்வகை-யிலேனும் அவள் திருமணம் நடைபெற வேண்டும் என்பதில் தாய் கருத்தாக இருக்கிறாள்.

உடன்போக்கிற்குப் பின்னர் வெளிப்பட வரைதல்

தலைவியை உடனழைத்துச் செல்லும் தலைவன் இடைச்சுரத்தில் தானே மணம் செய்து கொள்வதும், கண்டோர் முன்னிலையில் செய்தலும், நேரே தன் வீட்டிற்கு அழைத்துச் சென்று, தன்தாய் அலங்கரித்து வைத்துள்ள மணமனையில் செய்தலும்,

பெண்வீட்டார் ஒப்புக்கொண்டு வரவேற்கும் நிலையில் மீண்டுவந்து தலைவியின் இல்லத்திலேயே வதுவை முடித்தலும் நடந்திருக்கின்றன. இவை களவு வெளிப்பட்ட பின்னர் வரைதல் ஆகும்.

தலைவன் தானே மணத்தல்

உடன்போக்கில் கொடுப்போர் இல்லாதும் கரணம் உண்டாகும்.

"கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே
புணர்ந்துடன் போகிய காலை யான"[212]

என்பதால் யாயும் ஞாயும் இன்றி, எந்தையும் நுந்தையும் இன்றிச் செம்புலப் பெயல்நீர் போல அன்பு கலந்த தலைவனும் தலைவியும் தாமே மணம் புரிவர் என்பதைத் தோழி அறிவாள். உடன்போக்கு வலித்துத் தலைவியைத் தலைவனுடன் அனுப்பும் தோழி,

"நீசெல வயரக் கேட்டொறும் பலநினைந்
தன்பின் நெஞ்சத் தயாஅப் பொறை மெலிந்த
என்னகத் திடும்பை களைமார் நின்னொடு
... ... ... ... ...
மணமனை கமழும் கானம்
துணைஈ ரோதியென் தோழியும் வருமே"[213]

என்கிறாள். மணமனை போன்றிருக்கும் கானகத்தில் தலைவி விரும்பும் மணம் நடக்கும் என்ற நம்பிக்கை அதில் ஒலிக்கிறது.

பாலைநிலத்துத் தலைவனான விடலையுடன் சென்றிருக்கும் மகள் கொடுப்போர் இன்றியும் வேள்வி ஆசான் காட்டிய சடங்கின் வழியாற் சிறப்புப் பூண்டுள்ள கற்பு நிலை பெறுவாள் என்பதைத் தாயர் நடைமுறையில் அறிந்திருக்கின்றனர்.

"நாளூர்க் கோசரின் நன்மொழியைப் போல, ஆய்கழல் விடலையுடன் நம் மடந்தை கொண்ட நட்பு உண்மையாயிற்று!"[214] என நற்றாய்க்குச் செவிலித்தாய் கூறுவதன் மூலம் கரணம் நடந்துவிட்டதை உறுதிப்படுத்துகிறாள்.

கண்டோர் முன்னிலையில் செய்தல்

தலைவனும் தலைவியும் இளவயது முதலே நன்கு பழகியவர். இவருடைய செவிலித் தாயரையும் மீறி ஏதில் சிறுசெரு செய்து தலைமுடியைப் பிடித்து இழுத்துக் கொண்டவர்கள்; இளமைப்பருவத்தில் இருவரும் காதலிக்க, தடை எழும்பியது; உடன்போக்கு மேற்கொண்டனர்; பாலைநிலத்தில் இவரை முன்பே அறிந்த இடைச்சுரத்திற் கண்டோர், இவர் மணம் புரிந்தமை கண்டு,

"நல்லைமன் றம்ம பாலே மெல்லியற்
றுணைமலர்ப் பிணைய லன்னவிவர்
மணமகி ழியற்கை காட்டி யோயே"[215]

என்று விதியை வியக்கின்றனர்.

தாய் வீட்டிலும் இல்லாது, தலைவன் வீட்டிலும் இல்லாது அறியாத் தேயத்தில் சிலம்பு கழிக்கும் நோன்பு என்று வதுவைக்குரிய சடங்கைத் தானே செய்துகொள்ளும் வன்கண்ணியாய்த் தலைவி இருக்கிறாள். சீரும் சிறப்பும் இன்றி, சிறியதோர் ஊரில் வறுமையுற்று வாழும் ஒருத்தி போல, புல்வேய் குரம்பையில், ஒரு பசு மட்டும் கட்டப்பெற்ற ஒரு தூணையுடைய முற்றத்தினையுடைய அயலாரது வறிய இல்லத்தில் புகுந்து தலைவி சிலம்பு கழித்துத் தலைவனை மணந்து கொள்கிறாள்.[216]

உடன்போகும் தலைமக்கள் எவ்வாற்றேனும் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்பது நடைமுறை. ஆதலின் உடன்போன ஊரில் தலைமகளைக் கரணஞ் செய்து வரைந்து கொள்கிறான் தலைவன். தலைமகளுடன் வீடு திரும்பும் அவனை எதிர்சென்று வரவேற்கிறாள் தோழி. தாங்கள் மணமுடித்ததைத் தாய்க்கு

அறிவிக்குமாறு தலைவன் கூறுகிறான். உடன்போக்கு நேர்வித்தவள் தோழியே; அவர்கள் திருமணத்தைக் குறித்து ஆர்வமாக இருப்பவளும் அவளே! கண்ணும் கருத்துமாக இருந்து வதுவை நடைபெற்றதை அறிந்ததும் தாய்க்கு அறிவிக்கிறாள்.

"வரைந்தனை நீயெனக் கேட்டியான்
உரைத்தனென் அல்லனோ அஃதென் யாய்க்கே"[217]

என்ற அவள் கூற்றில் செய்தியின் விரைவு புலப்படுகிறது. தாய் காண இயலாத அந்த வதுவை கண்டோர் முன்னிலையில் நடைபெற்றிருப்பினும் தாய்க்கு நிறைவே!

தலைவன் இல்லத்தில் கரணம்

தான் விரும்பிய தலைவியுடன் குறித்த நாளில் மகள் உடன்போக்கில் வருவான் என்பதைத் தலைவனின் தாய் அறிகிறாள். மகனையும், மருமகளையும் வரவேற்று வதுவை நடத்த அவள் அனைத்து ஏற்பாடுகளையும் செய்கிறாள். தன் மனையை, மணமனையாக அணி செய்துவைக்கும் அவள், வந்திருக்கும் தலைவியின் காலில் உள்ள சிலம்பைக் கழிக்கும் நோன்பைச் செய்கிறாள்.

"அருஞ்சுரம் இறந்த என் பெருந்தோள் குறுமகள்
திருந்துவேல் விடலையொடு வருமெனத் தாயே
புனைமாண் இஞ்சி பூவ ஊட்டி
மனைமணல் அடுத்து மாலை நாற்றி
உவந்தினிது அயரும்"[218]

என்ற செய்தியைத் தலைவன் வீட்டிலிருந்து கண்டு செல்வோர் தலைவியின் தாய்க்கு அறிவிக்கின்றனர். அவர்களிடம் "வதுவை நன்மணம் கழிக என்கெனச் சொல்லின் எவனோ?"[219] என்று கேட்கிறாள் தாய். சிலம்புகழி நோன்பும், வதுவையும் முறையாகப் பெண் வீட்டில் நடக்க வேண்டியிருக்க, நோன்பை அங்குச் செய்தாலும் வதுவையாயினும் இங்கு நடக்கட்டும் எனப் பொய்வல் காளையை ஈன்ற தாய்க்கு எடுத்துக்கூறுமாறு தாய் வேண்டுகிறாள். அவ்வாறு எடுத்துக்கூறுவார் இல்லாதபோது,

தலைவன் தன் வீட்டிலும் மணத்தை நிகழ்த்திக் கொள்வான் என்பது புலப்படுகிறது. உடன்போக்கில் தடை ஏற்படாது தலைவன் தன்மனை அடையின், ஆங்கு நன்மணம் நடக்கும். பெண்ணின் தமர் இடைநின்று மீட்டாலும், தலைவனை ஏற்று நன்மணம் அயர உடன்பட்டாலும் தலைவி இல்லத்தில் வதுவை நிகழும்.

தலைவன் இல்லத்தில் வதுவை நடைபெறும் பொழுது தோழி நேரில் சென்று வாழ்த்துகிறாள். இருவரும் ஒருசேரப் பள்ளியிடத்திருந்துழி, தன் தலைவியைப் பிரியாதிருக்குமாறு தலைவனிடம் ஓம்படை கூறுகிறாள்.[220] தலைவி தான் எண்ணியது முடித்த மகிழ்ச்சியில் புத்தழகு கொண்டு விளங்குதலைத் தோழி காண்கிறாள்.

"விசும்பிலிருந்து தீயும் வளியும் தோன்றுகின்றன. அதுபோலவே நாடனின் மலர்ந்த மார்பும்! வரையாத வழி களவில் இடையீடுபட்டதால் நோயும், வரைந்து பிரிதல் இல்லாத இப்போது இன்பமும் தருகின்றது; இது மாயம் அன்று'"[229] என்று தலைவியிடம் கூறி மகிழ்கிறாள்.

மணமனைப் புக்குக் கண்ணுற்று நிற்கும் தோழியைத் தலைவன் 'நன்காற்றுவித்தாய்' என்று பாராட்டுதலும், அவன் பிரிந்த காலத்துத் 'தலைவியின் துயர் யாய்க்குத் தெரியாமலிருக்கும் பொருட்டே ஆற்றுவித்தேன்' எனத் தோழி நவில்தலும் உண்டு.[222]

திருமணம் முடிந்ததும் அதுகாறும் அலர் பேசிவந்த ஊர் அதை முற்றிலும் மறந்து இப்போது வாழ்த்துவதால் புதிய ஊர்போலாகிவிட்டது என்று ஊர்மக்கள் வாய் அடங்கியமை குறித்துத் தலைவிக்குக் கூறி மகிழ்கிறாள் தோழி.[223] இவற்றால் தலைவன் வீட்டில் வதுவை நிகழ்தலும் தோழி சென்று காணலும் நடைபெற்றிருக்கின்றன என்பது புலனாகும்.

தலைவி இல்லத்தில் வதுவை

உடன்போக்கினை அறிந்ததும் தேடிச் செல்லும் தமர் இருவரையும் மீள அழைத்து வந்து வதுவை நடத்துதற்கு உடன்படுகின்றனர். வதுவை நடக்கும் என்ற மனமகிழ்வில் திரும்பும் தலைவி, முன்கூட்டிச் செல்லும் தூதுவரிடம், தான் திரும்பிவரும் செய்தியைத் தன் தோழியரிடம் அறிவிக்குமாறு கூறுகிறாள். தனது மணம் கைகூடிற்று என்பதை அறியும் ஆயத்தார் இன்னகை புரிந்து மகிழ்வர் என்பது அவள் கருத்து. செந்நாய், குருளைப் பன்றியைக் கொல்லாது விடுத்தது போல, தலைவியின் சுற்றத்தாரைக் கொல்லாதுவிடுத்த தலைவனின் அருளைத் தமரும் உணர்கின்றனர்.[224] வதுவைக்கெனத் தலைவனை மீளத் தன்னுடன் அழைத்துவரும் தலைவி, மனதினால் மகிழ்ந்திருப்பினும் உடலால் வாடி நுதலும் தோளும் அழகிழந்து காணப்படுகிறாள். அதைக்கண்டு பரிந்து வருந்தும் தோழியை,

"வேய்வனப் பிழந்த தோளும் வெயிறெற
வாய்கவின் றொலைந்த நுதலு நோக்கிப்
பரியல் வாழி தோழி பரியின்
எல்லையி லிடும்பை தரூஉ
நல்வரை நாடனொடு வந்த மாறே"[225]

என்று கூறி உடனே அவள் வாயை அடைக்கிறாள் தலைவி. தந்தையும் தாயும், தமரும் காணத் தன்மனையில் வதுவை நடத்தவேண்டும் என்னும் தலைவியின் விருப்பத்தை ஏற்று, அவளை மீள அழைத்துவந்த பெருந்தன்மையாளன் தலைவன்; வதுவை முடிந்து மீண்டும் தன்மனை மீளும்வரை அவனது பெருமையும் மகிழ்வும் குன்றாவண்ணம் காப்பது தன் கடமை என்று நினைக்கிறாள் தலைவி. இதைத் தமரும் உணர்ந்து செயல்படவேண்டும்; தலைவனுடன் இருக்கும்போதும் தலைவி அழகிழந்தாள் என அனைத்தும் அறிந்த தோழியே செப்புவாளெனின் 'தலைவி தன்னை நன்கு காதலிக்கவில்லை போலும்' எனத் தலைவன் வருந்தக் கூடும். அப்படி அவன் நினையின் தலைவிக்கு நேரும் துன்பம் எல்லையற்றது என்ற அச்சம்

அவள் கூற்றில் வெளிப்படுகிறது. உடன்போய் மீண்டதும் தோழி வினவும் தலைவன் நாட்டு நீரைப் பற்றிக் குறிப்பிடும்பொழுதும் எச்சரிக்கை உணர்வுடன், தலைவி,

> "அவர் நாட்டு கூவற்கீழ், மானுண்டெஞ்சிய கலங்கல் நீர்கூட, நமது தோட்டத்தில் இயற்றப்பட்ட கொம்புத்தேன் கலந்த பாலினும் இனிதாயுள்ளது"[226]

என்று விட்டுத்தராது பேசுகிறாள். கற்பு வாழ்வில் அடி எடுத்துவைத்த உடனேயே தலைவன் மேல் தலைவி கொள்ளும் அக்கறையும், மதிப்பும் இதில் புலப்படுகிறது.

<u>மகள் மணந்து திரும்பிவரக் காக்கையை வேண்டுதல்</u>

தன்வீடு வராது தலைவன் வீட்டில் வதுவை முடிந்திருந்தாலும், மகளும், அவள் கணவனும் தன்வீடு வரவேண்டுமெனத் தாய் மனம் விரும்புகிறது. உடன்போக்கு அறநெறியே; முறைப்படி வதுவையும் நடந்தபின்னர் மனவேற்றுமைக்கு இனி இடமில்லை. மனமொன்றிய காதலர் இருவரும் இல்லம் வர, அவர்களுக்குத் தான் விருந்தயர விரும்புகிறாள் தாய். நிமித்தம் பார்க்கும் வழக்கமுள்ள தாய் காக்கையைக் கரைய வேண்டுகிறாள். **விறல்வேல் காளையுடன்** தன் அஞ்சிலோதி வரக் கரையின், காக்கை பெறும் விருந்து பெரிது. பொன்புனை கலத்தில் பச்சூன் பெய்த பைந்நிண வல்சியைக் கிளையுடன் ஊரத் தருவதாகக் கூறுவது தாயின் மனநிறைவையே காட்டுகிறது.[227]

<u>தலைவியும் தலைவனும் தாய்வீடு விருந்தயர வரல்</u>

தாயின் விருந்தயர் வேட்கையை உணர்ந்த மகள், தாங்கள் வரும் செய்தியைத் தூதுமூலம் அறிவிக்கிறாள். தாய்மீது கொண்ட அன்பினும் தலைவன் காதலே பெரிது எனச் சென்றவள் அவள்; தன் கருத்து இனிதாக முடிவுற்றபின் தாயின் மீதும் அன்பு சுரக்க, அவள் துயரை ஆற்றுவிக்கக் கருதுகிறாள்.

இளவேனிற் காலத்து இளங்கொடி, மரத்தில் பற்றிப் படர்ந்து அழகு மலிர்தல் போல, தனக்குரிய மன்னனைப் பற்றிய, பெருமித வாழ்க்கையை உடைய மங்கை, தன் கணவனுடன் 'இன்று வரும்' எனத் தூது சொன்ன சொற்களைக் கேட்டுத் தாய் மிக மகிழ்கிறாள்.[228]

தாய் விருந்தயர எதிர்பார்த்து நிற்றலின், தலைவியை அழைத்துக்கொண்டு அவள் இல்லம் வருகிறான் தலைவன். உடன்போக்கு சென்றபோது நடந்த விரைவு இப்போது தேவையில்லை. தனக்குரியவளான தலைவியின் நாடும் ஊரும் இப்போது தலைவனுக்கும் உரியதாகிவிட்டது. இன்னா அருஞ்சுரம் கடந்துவிட்டதால் மென்மெல அயலி, வேங்கை மலரணிந்து, அயர்ச்சி நீங்கி, நம்மலைகெழுநாடு செல்லலாம் என்கிறான் தலைவன். உடன்போக்கு சென்றபோது தேற்றி அழைத்துச் சென்றதை விட மிக அதிகமாகவே அவளைக் கவனித்து அழைத்து வருகிறான்.

"கல்கெழு சிறப்பின் நம்ஊர்
எல்விருந் தாகிப் புகுகம் நாம்"[229]

என்ற அவன் கூற்றில் தாய்வீட்டினர் வரவேற்பு குறித்து மகிழ்வே புலப்படுகிறது.

அன்பற்ற அறம் மகளைத் தாயிடமிருந்து பிரித்தது; தாயின் துயர் கண்டு தாங்காத அறம் பின் இரங்கி அருளிற்று! வெஞ்சுரம் இறந்த குறுமகள் விடலையுடன் வீடு திரும்பினாள்; அன்னையின் அகம் மகிழ்வில் நிறைந்தது!

அன்னையின் துயரை ஊரினர் உரைத்தல்

அருமைமகள், கணவனுடன் வந்ததை எல்லோரும் வந்து காணும்படி சுற்றத்தை அழைக்கிறாள் அன்னை, சுற்றத்தினரும் ஊராரும் வந்து காண்பதோடு, அன்னை பட்ட துயரை மகள் நேரே கேட்கும்படி உரைக்கின்றனர்.

"துறந்ததற் கொண்டு துயரடச் சாஅய்
அறம்புலந்து பழிக்கும் அளைக ணாட்டி!
எவ்வ நெஞ்சிற் கேம மாக
வந்தன ளோநின் மடமகள்
வெந்திறல் வெள்வேல் விடலை முந்துறவே"[230]

என்ற கூற்றில் அறம் புலந்து பழிக்கும் வண்ணம் துயரில் வெந்த தாய்க்கு மகளே மருந்து என்ற கருத்தும், மருமகனோடு அவள் வரவே அவள் மகிழ்ச்சியை நிலைநிறுத்திற்று என்னும் கருத்தும் மகளுக்கு உணர்த்தப்படுகிறது.

இதே ஊரினர் துன்புற்றதைக் குறிக்கும் வகையில் நற்றாயும் தந்தையும் துன்புற்றதை மறைமுகமாகச் செவிலித்தாய் எடுத்துரைக்கிறாள்.

"மனைமருண் டிருந்த என்னினும் நனைமகிழ்
நன்ன ராளர் கூடுகொள் இன்னியம்
தேரூர் தெருவில் ததும்பும்
ஊரிழந் தன்றுதன் வீழ்வுறு பொருளே"[231]

என்ற பாடலில் ஊரே விரும்பிய பொருளாய்த் திகழ்ந்த மகளின் உடன்போக்கு அவ்வூரை வருத்தியது என்னும் கூற்றும், உட்பொருளாய் பெற்றோரின் வருத்தத்தைக் காட்டியது. உடன் போக்கு சென்றதை எண்ணி, "அவள் சென்ற வழி இனியவாகுக!"[232] எனத்தோழியைவிடப் புலம்பிய ஊர், இன்று மிகவும் மகிழ்கிறது என்னும் தோழியின் கூற்றிலும் ஊர்மேலிட்டு அன்னை பட்ட துயர் அறிவுறுத்தப்படுகிறது.

மகளின் குடும்ப வாழ்வு

மனித குலவரலாற்றில் நிலைத்து நின்றுவிட்ட சமுதாய அமைப்புகளில் குறிப்பிடத்தக்கது குடும்பம். தனிமனிதனின் குடும்பம் மாபெரும் மனிதக் குடும்பத்தில் இணைந்து கலந்துவிடுகிறது. சமூகவியலார் கருத்துப்படி உறுப்பினர்களின் பங்குக்கும் பணிக்கும் ஏற்பக் குடும்பங்கள் மூன்று வகைப்படுத்தப்பட்டுள்ளன.[233]

1. மையக்குடும்பம் : ( Nuclear family )
   தந்தை, தாய், குழந்தைகள் மட்டும் கொண்டது.

2. அணிமை உறவுக் குடும்பம் : (Consanguineal family )
   பெற்றோர், குழந்தைகள், பேரக்குழந்தைகள் அடங்கியது.

3. இணைக்குடும்பம் : ( Conjugal family )

கணவன், மனைவி, அவர்தம் குழந்தைகளுடன் இறுக்கமான நெருக்கமில்லாமல், இடையீடுபட்டு இயங்கும் உறவினர்களையும் கொண்டது இணைக்குடும்பம் ஆகும்.

தந்தை, நற்றாய், தலைவன் அல்லது தலைவி ஆகிய குழந்தைகள், செவிலித்தாய், தோழி ஆகியோரைக் கொண்ட இணைக்குடும்பத்தையே தொல்காப்பியமும் சங்க இலக்கியமும் குறிப்பிடுகின்றன.

குடும்பப் பொறுப்பை ஏற்று மனைக்கிழத்தியாய் வாழும் தலைவியின் மாண்புகள் குறித்து,

"கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்
மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்
விருந்துபுறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்
பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்" [234]

எனத் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.

தன்மகள் மடந்தையாய் வாழும் ஊருக்குச் சென்று அவள் குடும்பம் நடத்தும் பாங்கினைக் காண்கிறாள் செவிலித்தாய். மகளின் கணவன் வேந்தன் தொழிலாய் ஊரைவிட்டுச் செல்கிறான். செம்மலாகிய அவன் தேர் இரவில் வேற்றூரில் தங்குதல் இல்லை. இரவு எந்நேரம் ஆயினும் தங்குவதற்குத் தன்வீடு வந்துவிடும் தலைவனை உடைய பெருமை தலைவிக்கு உள்ளது. இருவரும் ஓரிரவும் பிரிவின்றி அன்புடை நெஞ்சம் கொண்டு வாழும் தன்மை தாய்க்கு மிகுந்த மகிழ்வைத் தருகிறது. [235]

கணவன் உவக்கும்படி அட்டு உண்பித்தலான அடிசிற்கலையிலும் மகள் மிகத் தேர்ச்சி பெற்றிருக்கிறாள். மனைவியை நேசித்தலில் முதல் பண்பாகக் கணவன் குறிப்பிடுவது அடிசிற்கலையே எனத் தனிப்பாடல் ஒன்றும்,

"அடிசிற் கினியாளை அன்புடையாளைப்
படிசொற் பழிநாணு வாளை – அடிவருடிப்
பின்தூங்கி முன்னெழும் பேதையை யான்பிரிந்தால்
என்றூங்கும் கண்கள் எனக்கு"[236]

என்று குறிப்பிடுகிறது.

குறுந்தொகைத் தலைவி தன் கணவனுக்கு நன்கு முற்றிய தயிரைப் பிசைந்து தாளித்து வைத்த புளிக் குழம்பினை இனிதெனக் கணவன் உண்கிறான். ஒளி பெற்ற மகளின் முகம்; அவன் உண்பதைக் காண்பதிலும், இனிதெனப் புகழ்வதைக் கேட்பதிலும் மேலும் ஒளிபெறுகிறது. அப்பாராட்டைத் தனக்குரியதாக வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளாது அடக்கத்துடன் ஏற்றதையும் "நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே"[237] என நற்றாய்க்கு எடுத்துக்கூறும் செவிலித்தாய், தற்கொண்டானைப் பேணும் தகைமை சான்றவளாய்த் தன் மகள் திகழ்வது தாய் மனதிற்கு நிறைவைத்தரும் என்பதை அறிவாள்.

பொற்றொடியின் கற்பியலை நற்றாய்க்கு உரைக்கும் செவிலி,

"சிலவே பேதைமை நிம்பிரி நல்குர
வனைநால் வகையுஞ் சிறப்பொடு வருமே"[238]

என்ற குணத்தாலும் மகள் சிறக்க வாழ்வதைக் கூறி வியக்கிறாள்.

கொண்ட கொழுநன் குடி வறனுற்றது; ஒரு பொழுதின்றி மறு பொழுதுண்ணும் அளவு நல்குரவு அடைந்தது. தந்தை வீட்டில் பெருஞ்செல்வநிலையில் வளர்ந்தவள் தலைவி. தந்தை கொடுத்த கொழுஞ்சோற்றைத் தற்போது சிறிதும் நினையாது,

கணவன் ஏவலுக்கு ஏற்பவே நடக்கும் திண்மையுடையவள் ஆயினள். இளம்பருவத்தில் விளையாடும்போழ்தில் தான் தேன்பாலூட்டவும் உண்ணாது ஓடிய மகள், செவிலியின் பார்வைக்குத் தற்போதும் அதே சிறுவிளையாட்டுப் பெண்ணாகத்தான் காட்சிதருகிறாள்.

"ஏவல் மறுக்குஞ் சிறுவிளை யாட்டி
அறிவும் ஒழுக்கமும் யாண்டுணர்ந் தனள்கொல்
கொண்ட கொழுநன் குடிவறன் உற்றெனக்
கொடுத்த தந்தை கொழுஞ்சோறு உள்ளாள்
ஒழுகுநீர் நுணங்கறல் போலப்
பொழுதுமறுத்து உண்ணுஞ் சிறுமது கையளே"[239]

என்று கணவன் வீட்டுத் தாழ்வுநிலையைத் தானும் சிறிதும் கருதாது, பிறரும் அறியாமல் வாழ்கின்ற பெருமித வாழ்வு வாழத் தன் மகள் அறிந்தனள் என்பது குறித்துத் தாயும் பெருமை அடைகிறாள். வாழ்விலும் தாழ்விலும் கணவனோடு இணைந்து அவள் நடத்தும் இல்லறத்தால் கணவன் குடிப்பெருமை காக்கப்படுகிறது.

தலைவியின் தாயின்வீடு செல்வம் மிக்கது; தலைவனின் காதலுக்கு ஆட்பட்டுக் கற்புக்கடம் பூண்டதால் அதைத் துறந்து வந்திருப்பவள் தலைவி. தலைவனுடன் என்றும் பிரியாது இருக்கும் இன்பம் ஒன்றே அவள் வேண்டுவது. நற்றிணைத் தலைவன் ஒருவன், தலைவியைப் பிரிந்து பொருள்தேடச் செல்ல முயல்கிறான். அதைத் தடுக்க விழையும் தலைவி, தனது கூற்றில் உடன்போக்கில் தான் துணிந்து, துறந்து வந்ததைச் சுட்டுகிறாள்.

"பிண்ட நெல்லின் தாய்மனை ஒழியச்
சுடர்முழு தெறிப்பத் திரங்கிச் செழுங்காய்
முடமுதிர் பலவி னத்த நும்மொடு
கெடுதுணை யாகிய தவறோ?"[240]

என்ற அவளது வினாவில், தாயின் செல்வத்தை மதியாது வந்த செயல் தவறோ

என்று தான் கருதாத வண்ணம் தன்னைப் பிரியாது கணவன் காக்கவேண்டும் என்ற வேண்டுகோள் ஒலிக்கிறது. இதனால் செல்வத்தைவிடக் கணவனுடன் இணைந்துள்ள இல்லற இன்பத்தையே தலைவி விரும்பியிருத்தல் புலனாகிறது.

மகள் இல்லத்தில் தாயர் வசித்தல்

அரச குடும்பம் போன்ற வசதியான இல்லங்களில் மகளுக்குத் துணையாகச் செவிலித்தாயர் இருந்ததை நெடுநல்வாடை நவில்கிறது. அரசன் தவிர்க்க இயலாத கடமையின் காரணமாகப் போர்க்களத்தில் தங்கநேர்கிறது. கணவன் பிரிவை ஆற்றமுடியாது துயர்ப்பட்டுக் கலங்கும் அரசியைச் செவிலித்தாயரே தேற்றுகின்றனர்.

"நரைவிரா வுற்ற நறுமென் கூந்தல்
செம்முகச் செவிலியர் கைம்மிகக் குழீஇக்
குறியவும் நெடியவும் உரைபல பயிற்றி
இன்னே வருகுவர் இன்றுணை யோரென
உகந்தவை மொழியவும் ஒல்லாள்" [241]

என்றவாறு செவிலித்தாயர் மகள் இல்லத்திலேயே அவளுடன் தங்கி இருந்திருக்கின்றனர்.

ஆண்மகவு இல்லாத நிலையிலோ, வேறு ஆதரவு இன்மையாலோ, பெற்ற-தாயைத் தன்வீட்டில் இருத்திப் பேணும் கடமையைப் பெண்ணும் ஏற்றிருக்கிறாள் எனக்கருத இடமுண்டு. அல்லது தாய்வீட்டிலேயே பெண் தன் கணவனுடன் வந்து இருந்து வாழ்ந்திருக்கலாம் என்றும் கருத இடமளிக்கும் பாடல் ஒன்று அகநானூற்றில் காணப்படுகிறது.

"புல்லென் மாமலைப் புலம்புகொள் சீறூர்ச்
செல்விருந் தாற்றித் துச்சி லிருத்த
நுணைகுழைத் தலமரு நொச்சி
மனைகெழு பெண்டியான் ஆகுக மன்னே" [242]

என்ற பாடலில் மகளையும் மருமகனையும் விருந்தாக ஏற்று அவர்களைத்

துச்சில் எனும் தனி இடத்தே இருக்கவைத்துப் பாதுகாப்பதற்கு, அவர்களுடைய இல்லத்திற்குரிய ஒரு முதாட்டியாகத்தான் தான் ஆக வேண்டும் என்ற தன் விருப்பத்தைத் தாய் தெரிவிக்கிறாள். மகளும் மருமகனும் எச்சிந்தனையுமின்றிப் படுத்துறங்க, தான் குடும்பப் பொறுப்பை நிர்வகிக்கும் வீட்டு முதாட்டியாகத் திகழவேண்டும் என்ற தாயின் கூற்றை நோக்க, அப்படியும் தாயர் வாழ்ந்திருக்-கின்றனர் என்பது புலனாகிறது.

மக்கட்பேறு

"மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு"[243]

என்பதற்கேற்ப மனைவாழ்வு பொலிவதற்கு மக்கட்பேறு முக்கிய காரணமாகிறது. திருமணநாளில் முதுபெண்டிர் 'பேரிற் கிழத்தியாக!' என வாழ்த்தியமைக்கு ஏற்ப, மகள் பேரியலரிவையாய், சிறுமுத்துக் குறைவியாய்த் திகழ்ந்து, சுற்றந்தழுவி, தற்காத்து, தற்கொண்டாணைப் பேணி, அவன் சொற்காத்து, சோர்விலாது குடித்தனம் நடத்துகிறாள்.

"செறிவும் நிறையும் செம்மையும் செப்பும்
அறிவும் அருமையும் பெண்பா லான"[244]

என்பதற்கேற்ப விளங்கும் மகளின் மனைவாழ்வு மேலும் சிறக்க, மக்கட்பேறு கிட்டுகிறது.

தலைவியின் கற்பு வாழ்வில் தாயின் இடம் மிகவும் குறைவே. மகள் மகப்பெற்றபின் செவிலியைத் தோழி தலைவன் ஊருக்கு அழைத்துச் செல்வதாக அம்மூவனாரின் ஐங்குறுநூற்றுப் பாடல் ஒன்று குறிப்பிடுகிறது. பொருட்செல்வம் மிக்க கொண்கனாயினும், அவனுக்கு உண்மைச் செல்வமாய் மகன் பிறந்திருக்கிறான்.

"தலைவியை விரும்பிக் களவில் நள்ளிரவில் வந்த செல்வக் கொன்கனின் செல்வன் ஊர் இஃது"[245] என்னும் தோழியின் கூற்றில் ஆண்மகவின் அருமை புலப்படுத்தப்படுகிறது. செவிலி கூற்றுப் பத்தாகப் பேயனார் பாடிய ஐங்குறுநூற்று முல்லைப்பாடல்கள் தாய்கண்டு உவந்த கடிமனைக் காட்சிகளை எடுத்துரைக்கின்றன. தாய், மகள்வீடு வந்து பேரக் குழந்தையின் விளையாடல் கண்டு மகிழும் செய்தி, ஐங்குறுநூற்றைப் போல் வேறு தொகை நூல்களில் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

செவிலி காணும் குடும்பக் காட்சிகள்

மறி இடைப்படுத்த மான்பிணை போலப் புதல்வனுடன் மகளும் மருமகனும் படுத்துள்ள காட்சிக்கு ஈடான இன்பம் தேவருலகிலும் இல்லை. புதல்வனைத் தாயும், அவனைத் தந்தையும் தழுவிக்கிடக்கும் காட்சி, யாழிசையைவிட இனிது. புதல்வனைத் தந்தை தழுவ, தாய் அவ்விருவரையும் தழுவிக்கிடத்தல், உயிர் உலகு எல்லாம் அடங்கும் அருட்பண்பு உடையது.[246]

காதலன், காதலியாயிருந்த காமநிலை மாறித் தந்தை தாயாய், தூய அன்பினராய் இருக்கும் நிலையைக் கண்டதாய் உவக்கிறாள்.

மாலைக்காலத்தில் மனைமுன்றிலில் உள்ள குறுங்கால் கட்டிலில் தந்தை இருக்கிறான். அவன் மார்பில் புதல்வன் ஊர்ந்து விளையாடுகிறான். அவர்களுடன் தன் மகளும் உடனிருக்கும் அவ்வேளையில் பாணனது இனிய யாழிசையும் அவர்கள் மனத்தைக் கவரவில்லை என்பதை நேரில் காணும் தாய் உணர்கிறாள்.[247]

வாணுதல் அரிவையான தன்மகள் மகனுக்கு முலையூட்டுகிறாள். மருமகனோ பெருஞ்செல்வமிக்க நாட்டின் கிழவோன் ஆயினும் மனைவிபால்,

அன்புமிக்கவன், அவன் மனைவியின் சிறுபுறம் தழுவுகிறான்; அதனால் நெஞ்சு நெகிழ்ந்த மகளின் உவகையை நுண்ணிதின் உணர்ந்து மகிழ்கிறாள் தாய்.[248]

"மனைக்கு விளக்கம் மடவாள்"[249]

என்பது நான்மணிக்கடிகை. மகள் மனைக்கு விளக்கு; அவளுக்கு விளக்கு அவள் பெறும் புதல்வன்! புறவணி நாடனுக்குப் புதல்வன் ஈன்றதால்,

"ஒண்சுடர்ப் பாண்டில் செஞ்சுடர் போல
மனைக்கு விளக்காயினள்"[250]

என்பதறிந்து தாய் உவக்கிறாள்.

"கற்புடைத் தன்பு முடித்துநாண் மெய்ப்பூசி
நற்குண நற்செய்கை பூண்டாட்கு - மக்கட்பே
றென்பதோர் செல்வமு முண்டாயின் இல்லன்றே
கொண்டாற்குச் செய்தவம் வேறு"[251]

என்னும் நீதிநெறி விளக்கப் பாடலால் எத்துணை மாட்சி உடையளாயினும் மகப்பேறில்வழி மனைவி, குடத்தில் இட்ட விளக்கே என்பது புலனாகும். மகப்பெற்ற பின்னரே சுடரும் ஒளிவிளக்காக அவள் கருதப்படுகிறாள்.

மகன் பிறத்தலால் தந்தை குடி விளங்கியது. அகன்பெருஞ்சிறப்பின் தந்தை பெயரன் சிறுதேருருட்டி வருகிறான். அவனை ஈன்ற காதலிமேல் அன்புபெருகும் கணவன், தன்மனைவியை என்றும் பிரியாது புணர்ந்து இருந்து மகனின் முறுவல் இன்னகை இன்பம் நுகர்ந்தான்.[252] முதலில் தான் என்றும், பிறகு தன் காதலி என்றும் சுருங்கிக்கிடந்த அவனது அன்பு மகன்மேலும் படர்ந்து பெரிதாகிறது. இனி அவ்வன்பு, சுற்றம், ஊர், உலகு என விரிந்து அருளாகும். தன் மகள் பெற்ற புதல்வனே தந்தையின் அருட்பண்புக்குக் காரணம் என்பதைத் தாய் மகிழ்வுடன் நினைத்துக் கொள்கிறாள்.

தன்னை நயந்த காதலியைத் தானும் நயந்து இன்புறு புணர்ச்சி நுகரும் தலைவன் யாழிசை இன்பமும் நுகர்கிறான். பாணர் முல்லை சூட, வாணுதலரிவை முல்லைப்பூச் சூடுகிறாள். மகப்பெற்றதன் பெரும்பேறாக மையுண்ட விழிகளை உடைய மகன் விளையாடப் பெற்றோர் கண்டு களிக்கின்றனர். புதல்வனால் ஒருவர் மீது மற்றவர் கொண்ட அன்பு அதிகமாகிறது. எழுபிறப்பும் தீயவை தீண்டாதவண்ணம் பண்புடை மகனைப் பெற்றதன் மூலம் பொலிவுடன் இருந்தான் தலைவன்.[253] அழகுமிக்க சுடரிழையாக, வாணுதலாக, மென்மொழியாக, மனையோளாக, தன் தலைவன் நயந்த காதலியாக விளங்கும் மகளைக் கண்டு நிறைவு எய்துகிறாள் தாய்.

இக்காட்சிகளை நேரில் காணும் செவிலித்தாய், நேரில்கண்ட உணர்வடையு-மாறு நற்றாய்க்குக் கூறுகிறாள். தான் ஈன்று வளர்த்த மகள் புகுந்தவீட்டில் சிறக்க வாழ்கிறாள் என்பதே தாய்க்கு நிறைவு. மாமியார் மெச்சிய மருமகள் இல்லை என்பது பழமொழி. மாமியாரும், பிற சுற்றத்தினரும் குறைகூறாதவண்ணம் இல்லறத்தை நல்லறமாக நடத்தவேண்டும் என்பதே தாயின் விழைவு. பேதையாய்த் தன்னைப் பிரிந்து மணம் புரிந்து சென்ற மகள், மகப்பெற்று அனைத்தும் அறிந்த அரிவை ஆயினள் என்னும் செய்தி தாய்க்கு மிகுவியப்பை நல்குகிறது. ஐங்குறுநூற்றுச் செவிலி கூற்றுப் பத்துப்பாடல்கள் குழந்தை பெற்ற குடும்பத்தையும், குடும்பத்தைப் பிணிக்கும் குழந்தையையும், பரத்தமை நினையாக் காதலனையும், பிரிவறியாக் காதலியையும், அனைவர்க்கும் எடுத்துக்காட்டாய் அமையும் இல்லறத்தையும் ஓவியமாக்கிக் காட்டுகின்றன. மகளின் இல்லறத்தின் நிறைவைக் கண்டும், கேட்டும் மகிழும் தாயர், ஈன்ற பொழுதினும் சான்றோள் எனக்கேட்கும் போதில் பெரிதும் உவகை அடைகின்றனர். பெண்ணைப் பெற்றதன் பெரும்பயன் எய்தி மகிழ்கின்றனர்.

வாயில்கள் எனத் தொல்காப்பியர் பொதுவாகக் குறித்தலால் ஊடல்தீர்க்கும் வாயிலாகவும் தாய் இருந்திருக்கலாம். ஆயினும் இச்செயலாற்றும் தாய்

சங்கப்பாடல்களில் இடம்பெறவில்லை. தலைவன் பரத்தமை காரணமாக மகள் வருந்ுதலைக் கண்டு தாய் மனம் கவன்று இருத்தல் கூடும். ஆயின் அதற்கான சான்றுகளும் இல்லை.

"கழிவினும் வரவினும் நிகழ்வினும் வழிகொள
நல்லவை உரைத்தலும் அல்லவை கடிதலுஞ்
செவிலிக் குரிய வாகு மென்ப"[254]

என்றபடி மூன்று காலத்தும் கற்பு முதலிய நல்லவை உரைத்தலும், அதற்குமாறான தீயவற்றைக் கடிதலும் செவிலித்தாய்க்கு உரியன. மகளுக்கு நல்லன அறிவுறுத்தும் கடமைமிக்க தாய், மருமகளின் அல்லவை கடிந்திருத்தலும் கூடும். அதற்கான சான்றுகள் சங்கப்புலவரால் தவிர்க்கப்பட்டிருக்கலாம் எனக்கருத இடம் உண்டு. தாய் என்றும் தன் மகளின் நிறைவான வாழ்வையே விரும்புபவள் என்பதால் அவள் மகிழ்ச்சி அடையும் பாடல்கள் மட்டுமே தொகை நூல்கள் குறிப்பிட்டு, இல்லறத்தின் பெருமையான கற்பு வாழ்வில் தாயும் மகளும் பெறும் இடத்தைச் சிறப்பாக எடுத்துக்காட்டுகின்றன எனலாம். மகளின் தனித்த இல்லறத்தில் தாயின் ஈடுபாடும், பங்கும் மிகக் குறைவு என்பதையே சங்கப் பாடல்கள் தரும் சான்றுவழி அறியமுடிகிறது.

*****

## அடிக்குறிப்புகள்

1. கலித். 50, 56.
2. ஐங். 257 : 1-2.
3. நற். 23 : 4; ஐங். 384 : 3; நற். 301 : 8; அகநா. 146 : 13.
4. குறு. 159 : 3-5.
5. அகநா. 7 : 1-8.
6. ந. சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப. 49.
7. நற். 55, 368.
8. ஐங். 93.
9. ஐங். 194.
10. நற். 55.
11. அகநா. 150 : 1-6.
12. குறு. 6 : 3-4.
13. மே.ப. 145.
14. நற். 61 : 5; 9-10.
15. குறு. 356.
16. அகநா. 209.
17. குறு. 31; நற். 258; குறு. 316; புறநா. 83; நற்.236.
18. நற். 175, 378; அகநா. 253,317.

19. நற். 263 : 9-10.

20. மே.ப. 217 : 6.

21. மே.ப. 23 : 4-9.

22. மே.ப. 368.

23. ஐங். 113; நற். 63; கலித் 105; 45; நற். 149.

24. அகநா. 158.

25. நற். 372.

26. ஐங். 186; அகநா. 80; குறு. 246.

27. நற். 27, 68.

28. கு.வெ. பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியத்தில் புறப்பொருள், ப.207.

29. குறிஞ்சிப்பாட்டு, 240.

30. குறு. 292; அகநா. 122, 68-9.

31. அகநா. 60, 258, 288.

32. குறு. 57.

33. மே.ப. 244 : 5-6.

34. நற். 122; ஐங். 272.

35. குறு. 292 : 7-8.

36. நற். 339.

37. அகநா. 325 : 4-5.

38. தொல்.பொருள். களவியல் நூ. 24 : 1-6.

39. தொல். பொருள். பொருளியல்-இளம். நூ . 13.

40. இறையனார் களவியல் நூ . 29; ப. 141.

41. நம்பியகப்பொருள், வரைவியல், நூ .6.

42. கலித். 111 : 22-25.

43. நற். 244 : 6-8.

44. குறு. 305.

45. அகநா. 52 : 12-15.

46. குறு. 259.

47. ஐங். 106, 107.

48. மே.ப. 366; குறு. 366; அகநா. 48.

49. அகநா. 110.

50. அகநா. 190.

51. தொல்.பொருள். நச்சி. நூ. 201, ப. 288.

52. ஐங். 108; 109; ஔவை சு. துரைசாமிப்பிள்ளை உரை,ப.318.

53. மே.ப. 101 : 1.

54. K.K. Pillay, A Social History of the Tamils, Vol.I, p. 350.

55. அகநா. 370: 15; குறு. 105 : 3; நற். 288, பட். 155; மதுரைக். 690; குறு.உ.வே.சா. உரை, ப. 217.

56. நற். 388 : 4-7.

57. மே.ப. 288.

58. அகநா. 98 : 7-10.

59. குறிஞ்சிப். 3-4, 7; நச்சி உரை.

60. பெருங். 1 : 37; 236-237.

61. குறு. 23.

62. நற். 47, உரை. ப. 84.

63. அகநா. 195 : 12-15.

64. ஐங். 249 : 1.

65. மே.ப. 248 : 1-3.

66. மே.ப. 250 : 1.

67. நற். 282 : 3-6.

68. மே.ப. 268.

69. ஐங். 245 : 1-3; 247 : 2-3.

70. மே.ப. 245; உ.வே.சா. உரை, ப. 109.
ஔவை சு. துரைசாமிப்பிள்ளை உரை, ப. 585.

71. நா. செயராமன், சங்கத்தமிழ்ச் செய்யுட்கோவை, ப. 26.

72. ஐங். 242; நற். 173.

73. மே.ப. 243.

74. குறு. 214; ஐங். 210; நற். 351.

75. ஐங். 28, 182.

76. மே.ப. 190.

77. ஐங். 244..

78. மே.ப. 247.

79. மே.ப. 248 : 3-4.

80. மே.ப. 249.

81. மே.ப. 250 : 1, 4-5.

82. நற். 268 : 5-9.

83. மே.ப. 322;

84. அகநா. 292 : 2-6.

85. குறு. 362 : 1-2, 6-7.

86. அகநா. 388.

87. நற். 34 : 11.

88. இராம. சண்முகம், சங்க இலக்கியங்களில் வரைவு கடாதலும், அறத்தொடு நிற்றலும், ப. 189.

89. குறு. 111.

90. அகநா. 22 : 19-21.

91. குறிஞ்சிப்பாட்டு, 231-33.

92. அகநா. 232.

93. குறு. 248 : 6-7.

94. தொல். பொருள். களவு-இளம். நூ. 21; 14-15.

95. இறை. களவியல் நூ. 29.

96. குறு. 31.

97. கலித். 54 : 16-20.

98. ஐங். 266.

99. மே.ப. 180.

100. கலித். 114 : 19-21.

101. நற். 165.

102. குறு. 321.

103. மே.ப. 379.

104. நற். 207.

105. ஐங். 110.

106. மே.ப. 201; 367.

107. மே.ப. 168, 205, 220.

108. தொல். பொருள். களவு. இளம். நூ. 24; 40-41.

109. இறை. களவியல் நூ. 29.

110. குறு. 333 : 4-7.

111. ஐங். 218.

112. மே.ப. 29-30, 212.

113. குறிஞ்சிப்பாட்டு, 30-32.

114. தொல். பொருள். இளம். நூ. 269.

115. புறநா. 345 : 14.

116. ஐங். 29, 271.

117. ஐங். 258.

118. நற். 234.

119. கலித்தொகை, 39 : 12-13.

120. மே.ப. 39 : 20-21.

121. தொல். பொருள். களவு. இளம். 47.

122. கலித். 39 ; 48 : 51.

123. மே.ப. 117 : 8-9.

124. மே.ப. 117.

125. ஐங். 230.

126. குறு. 351 : 45.

127. மே.ப. 51 : 3-5.

128. அகநா. 282 : 10-18.

129. ஐங். 6 : 5-6.

130. குறு. 374.

131. மே.ப. 52.

132. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 25.

133. டாக்டர். தேவகிருபை தியாகராசன், இலக்கியத்தில் தாய், வைகை, வியாழவட்டக் கருத்தரங்கு மலர், ப. 65.

134. தொல். பொருள். அகத்திணையியல் நூ. 15; கற்பியல் நூ.143.

135. அகநா. 65.

136. குறுந். 316.

137. அகநா. 95.

138. நற். 143.

139. அகநா. 7.

140. மே.ப. 49; குறு. 84; 353.

141. ஐங். 236.

142. நற். 149: 1-5; 8-10.

143. குறு. 217.

144. அகநா. 283 - 3.

145. குறு. 343.

146. மே.ப. 369.

147. மே.ப. 383.

148. ஐங். 10.

149. மே.ப. 7; ஔவை சு. துரைசாமிப்பிள்ளை உரை, ப. 26.

150. மே.ப. 340.

151. நற். 365; குறு. 388.

152. மே.ப. 12; ஐங். 364.

153. குறு. 149; நற். 15 : 10.

154. ஐங். 200.

155. அகநா. 259 : 15-16.

156. குறு. 262 : 1-3.

157. ஐங். 254.

158. நற். 297; 147 : 4-5; 149:4; குறு. 246;
அகநா. 20; 145 : 21-2.

159. ஐங். 385 : 6.

160. அகநா. 221 : 1-4; 14.

161. குறு. 397; நற். 10; குறு. 115.

162. அகநா. 385; நற். 179; 9; ஐங். 361; 363; 396;
நற். 202; அகநா. 257.

163. ஐங். 384.

164. மே.ப. 385 : 5-6.

165. என்.ஏ. வேலாயுதம், பெண்களைப் பற்றிப் பெரியோர்கள், ப. 145.

166. மே.ப. ப. 84.

167. அகநா. 207, 219; ஐங். 372; அகநா. 263; நற். 293;
அகநா. 369, 117, 275; 17; 153; 321.

168. நற். 179; நற். 271; அகநா. 105; 315; ஐங். 399.

169. அகநா. 397 : 8-9.

170. ஐங். 373 : 1, 4-5; நற். 293 : 5-9.

171. மே.ப. 376; நற். 271.

172. அகநா. 145.

173. ஐங். 389; அகநா. 17, 153, 219, 105; குறு. 144,
396, 84.

174. அகநா. 89, 207; நற். 179; 271, 356; அகநா. 49.

175. நற். 66; அகநா. 117.

176. அகநா. 275; நற். 29; 179; அகநா. 321.

177. நாலடியார், 396.

178. ஐங். 371; குறு. 378; அகநா. 63.

179. அகநா. 203.

180. அகநா. 263; ஐங். 379.

181. ஐங். 378.

182. நற். 279 : 10-11.

183. ஐங். 399 : 1-2.

184. அகநா. 315; 369; 385 : 16-18.

185. ஐங். 372 : 1-4; அகநா. 35 : 1; அகநா. 17 : 6;
அகநா. 153 : 6-7; அகநா. 385 : 16-17; 383:1;

186. ஐங். 377; 375; 386; நற். 143, 184, 305;
குறு. 144; அகநா. 165.

187. ஐந்திணை ஐம்பது, 33.

188. அகநா. 55; நற். 184 : 1-5.

189. ஐங். 313; குறு. 15.

190. ஐங். 380.

191. அகநா. 7; 195 : 14-19.

192. திணைமாலை நூற்றைம்பது, 90 : 3-4.

193. குறு. 44.

194. நற். 198.

195. இறையனார் அகப்பொருள் சூ. 23, உரை மேற்கோள், ப. 125.

196. ஐங். 386; 388.

197. மே.ப. 390; 389.

198. நற். 324.

199. ஐங். 387; கலி. 9 : 14-24.

200. நற். 2; குறு. 7.

201. ஐங். 382.

202. பரி. 11 : 46-48.

203. நற். 362 : 48; ஐங். 312.

204. தொல். பொருள். நச்சினார்க்கினியர் உரை, களவியல் நூ .140, ப. 161.

205. ஐங். 294 : 3-5;

206. அகநா. 86 : 9-19;

207. மே.ப. 136 : 6-8; 13-19

208. அகநா. 385.

209. மே.ப. 397.

210. ஐங். 379 : 1.

211. அகநா. 369.

212. தொல். பொருள். கற். 143, ப. 165.

213. அகநா. 107 : 1-3; 21-22.

214. குறுந். 15 : 3-6.

215. மே.ப. 229 : 5-7.

216. அகநா. 385; 369.

217. ஐங். 280 : 4-5,

218. அகநா. 195 : 1-5.

219. ஐங். 399 : 2-3.

220. மே.ப. 149.

221. நற். 294.

222. மே.ப. 35, 131.

223. அகநா. 400.

224. ஐங். 397.

225. மே.ப. 392.

226. மே.ப. 203.

227. மே.ப. 391.

228. மே.ப. 400.

229. மே.ப. 395-396 : 4-5.

230. மே.ப. 393.

231. அகநா. 189 : 12-15.

232. ஐங். 398 : 3.

233. Encyclopaedia of the Social Sciences, Vol. 6, Macmillar, 1937, p. 60.

234. தொல். பொருள். கற். நூ .152, ப. 241.

235. குறுந். 242.

236. தொல். பொருள். நச். உரை நூ. 153, ப. 245.

237. குறுந். 167 : 6.

238. தொல். பொருள். நச். நூ . 245, ப. 334.

239. நற். 110.

240. மே.ப. 26 : 4-7.

241. நெடுநல். 152-56.

242. அகநா. 203 : 15-19.

243. திருக்குறள், 60.

244. தொல். பொருள். பொருளியல். நூ. 209, ப. 297.

245. ஐங். 104.

246. மே.ப. 401-402; 409.

247. மே.ப. 406-407, 410.

248. மே.ப. 404.

249. நான்மணிக்கடிகை, பா. 103.

250. ஐங். 405.

251. நீதிநெறி விளக்கம், பா. 81.

252. ஐங். 403.

253. மே.ப. 408, 406.

254. தொல். பொருள். நச். நூ .153, ப. 243.

*****

5. உளவியல் நோக்கில் தாய்-சேய் உறவு

5.1 தாய்மையின் சிறப்பியல்புகள்

5.2 தாயும் மகனும்

5.3 தாயும் மகளும்

5.4 தாய், தந்தையரும் சேயும்

5.5 சேயின் உள்ளம்

***

5.1 தாய்மையின் சிறப்பியல்பு

உடல்நலம் போலவே மனநலமும் மிகவும் தேவை என்பதைத் தற்கால அறிஞர் உணர்ந்துள்ளனர். உளவியல் ஒரு தனி அறிவியலாக வளர்ந்து பல ஆய்வுகள் செய்யப்பட்டுவருகின்றன.

> "உளவியல் என்பது எல்லா வாழும் உயிரினங்களின் நடத்தையைப் பற்றி அறியும் நமது மைய முயற்சியாகும். குறிப்பாக நம்மைநாமே அறியும் தனிப்பட்ட தேடுதலாகும். நமது உணர்வுகள், எண்ணங்கள், நாம் செய்யும் செயல்களுடன் தொடர்புடையது, உளவியல். இது நடத்தையைப் பற்றிய அறிவியல்; நடத்தையின் வகைகளைப் பற்றி ஆய்வது."[1]

என்கிறார் கில்மர் என்னும் உளவியலறிஞர். உளநலத்தின் இயல்பு, அதற்குத் தடையாக இருப்பவை அதை வளர்ப்பதற்கான வழிமுறைகள் முதலியன குறித்து சிக்மண்ட் பிராய்டு, யுங், ஆல்பர்ட் ஆட்லர், உண்ட், சிமோன்-டி-போவ்வியர், ஹெலன் ட்யூட்ச், ஆர்தர் ஜெர்சில்டு ஆகியோர் குறித்த கருத்துக்களின் அடிப்படையில் ஏராளமான ஆய்வுகள் செய்யப்பட்டு உள்ளன. தனிமனிதனின் உள்ளத்தைப் பற்றியும், அவன் சமூகத்தில் பிறருடன் கொள்ளும் உறவுகள் பற்றியும் தமிழறிஞர்களும் ஆய்ந்துள்ளனர். மனிதன் கொள்கின்ற எல்லா உறவுகளும் தனது நிலையை உறுதிப்படுத்துவதற்காகவே என்பது ஆட்லரின் கருத்து.

> "ஒரு மனிதன் எவ்வாறு நினைக்கின்றான் என்பதனை அறிய அவன்தன் சகமனிதர்களுடன் கொண்டுள்ள உறவுகளை ஆராய வேண்டும். இச் சமூக உறவுத் தொடர்புகளைப் (Social relationship ) புரிந்து கொள்ளாமலும், அவையின்றியும், நாம் ஒருவரது உளச்செயற் பிரிவுகளைச் ( Psychic - activities ) சரிவரப்புரிந்து கொள்ள முடியாது."[2]

என்கிறார் ஆட்லர். சமூகத்தைச் சேர்ந்த தனியனின் பல்வேறு வகையான

சமூக நடத்தையைப் பற்றி ஆராய்வது சமூக உளவியல். இசைவான சமூகத் தொடர்புகளின் முன்னேற்றத்திலும், தடைசெய்தலிலும், அன்புக்கான தேவையும் ( need for affection ) காப்புணர்ச்சிக்கான தேவையும் ( need for security ) மிக முக்கியமான பங்கு வகிக்கின்றன.

தாயும் சேயும் கொண்ட உறவில் காணும் உளவியல் தன்மைகளைக் காட்டும் இவ்வியலில் சங்ககாலப் புலவர்கள் தேர்ச்சி பெற்ற உளவியல் அறிஞர்களாகத் திகழ்ந்தமை எடுத்துக்காட்டப்பெறுகிறது. சங்ககாலச் சமுதாயம் குடிமக்கள் சமுதாயம்; அதில் குடும்பம் மிகவும் இன்றியமையாத இடத்தைப் பெறுகிறது. தனி மனிதன் சரியாக இருந்தால் உலகமும் சரியாக அமையும் என்பது ஐக்கிய நாடுகள் மன்றத்தின் குறிக்கோள். ( "Set the man alright; the world shall become alright" ),

> "குடும்பம் என்பது பொருள் உற்பத்தி அமைப்பின் ஒரு கண்ணி மட்டுமே எனக் கருதுவது தவறாகும். இது ஒழுக்க நெறி, சட்டம், மற்ற ஆன்மீக உறவுகளிலும் ஜீவாதாரமான பாத்திரம் வகிக்கிறது. மனிதனின் மறு உற்பத்தி மட்டும் குடும்பத்தின் வேலை அல்ல; புதிய தலைமுறையைப் பயிற்றுவிப்பதில் அது முக்கியமான பங்கு வகிக்கிறது."[3]

என்பார் கூற்றுப்படி தனி மனிதனின் உளச்செம்மை குடும்பத்தில் அவன் மற்ற உறுப்பினர்களுடனும், குறிப்பாகத் தாயுடனும் கொள்ளும் உறவைப் பொறுத்து அமைகிறது. சங்ககாலம் பொற்காலமாக அமைய அக்காலத்தில் தாய்சேய் உறவு உளவியல்பாற்பட்டதாக அமைந்திருந்ததும் அடிப்படையாக இருந்திருக்கலாம்.

## உளவியல் கருத்தேற்றம்

சங்கப்புலவர்கள் தாம் உரைக்கும் கருத்துக்களைப் பாடல்களைப் பயில்வோரும், கேட்போரும் விரும்பிக் கற்கும் வகையில் நுட்பமாக உரைத்துள்ளனர். இதை உளவியல் கருத்தேற்றம் ( Psychology of suggesstion )எனலாம்.

இவ்வகையில் சங்கப்புலவர்கள் மக்களுக்குத் தெரிந்த காட்சிப்பொருட்களை வைத்துத் தங்கள் கருத்துக்களை ஏற்றிக் கூறினர். இதற்கு இயற்கையை, உள்ளுறை, இறைச்சி மூலம் மிகுதியும் பயன்படுத்திக் கொண்டனர். கவிதையில் புனையப்படும் உணர்வுகளைச் சிறப்பிக்கும் பாங்கில் இயற்கைப் பின்புலங்கள் சங்க அக இலக்கியங்களில் அமைக்கப்படுதலை ந. சுப்புரெட்டியார் எடுத்துரைக்கிறார்.[4]

"மானிட உணர்வுகளோடு இயற்கையின் எழிலை
இயைபுறச் செய்தது பண்டைத் தமிழிலக்கிய மரபு...
கவிஞர்கள் தம் இயற்கை அனுபவத்தைத் தாம்
படைக்கும் மாந்தரின் உணர்வுகளையும்
செயல்களையும் விளக்கப் பயன்படுத்திக்
கொள்கிறார்கள்"[5]

என்பது மு. வரதராசனாரின் கருத்து. தாய்சேயின் உளவியல் தன்மைகளை அறிய உயர்திணையுடன் அஃறிணை உயிர்களின் உளவியற் செயற்பாடுகளும் அருந்துணை புரிகின்றன.

கருவுறுதலும் தாய்மை அடைதலும்

தாய் சேய் பற்றிய ஆய்வில் சேயின் கருவுலக வாழ்க்கையும் சிறப்பிடம் பெறுகிறது. பெண்ணின் உடற்கூறுகள் குழந்தைப் பேற்றுக்கெனவே உருவானவை. கருத்தரித்தலும், பிள்ளைப்பேறும் பெண்மையைத் தாய்மைக்கு உயர்த்துகின்றன. கருவுறுதலும், தாய்மை அடைதலும் வெறும் பத்துமாதம் சுமத்தலைக் கூறும் புள்ளிவிபரம் அன்று; குழந்தை உடலாக உருவாக்கப்படும் அதே நேரத்தில் உள்ளவியலாக ஒரு குடும்பம் தோற்றுவிக்கப்படுகிறது. தாய் ஆகும் பெண் தன் வாழ்க்கையில் மிக ஆர்வமும், நல்ல உடல்நலமும் வாய்த்தவளாக இருப்பின் கருத்தரித்தலை மிக மகிழ்வுடன் ஏற்று, குழந்தையை ஆவலுடன் வரவேற்பாள். அப்போது அவளிடம் ஆழ்ந்த மன எழுச்சிகளும் இதுவரை இல்லாத சில புதிய இயல்புகளும் ஏற்படக்கூடும்.

"கருத்தரித்தலும் தாய்மை அடைதலுமாகிய அனுபவமும் ஒரு பெண்ணிற்கு அதிசயமான தாக்கத்தை உண்டு பண்ணுகின்றன. உடலிலும், அந்த வாழ்க்கையிலும் முற்றிலும் மாறுபட்ட தன்மையை அவள் காணலாம். மிகவும் ஆற்றல்மிக்க ஒரு சக்தியின்பிடியில் இருப்பது போலவும், எல்லாவற்றையும் கடந்து ஓர் அலை தன்னை மிக உயரத்தூக்குவது போலவும் தோன்றக்கூடும். அந்தவகையில் அவளது உடலில் எட்டமுடியாத ஒரு பகுதி எதிர்காலக் குழந்தைக்காக ஏற்கனவே பதிவு செய்யப்பட்டுள்ளது"[6]

நீண்டகாலம் குழந்தை இல்லாமல் இருந்து அரிதின் ஒரு மகவு ஈன்ற நடிகை சோபியா லாரன் தம் அனுபவத்தை இவ்வாறு குறிப்பிடுகிறார். தாய்மை தனது நிலையை முற்றிலும் மாற்றியதாகக் கூறும் இவரைப் போன்று முதன்முதல் கருத்தரிக்கும் தாய்க்கும் மாறுதல் ஏற்படக்கூடும்.

"கருவுற்ற காலத்தில் தாய் வழக்கத்திற்கு மாறான ஆசைகளைக் கொள்ளக்கூடும் என்று கூறுவதும் உண்டு"[7]

என்னும் ஆர்தர். டி. ஜெர்சில்டு என்பாரின் உளவியல் கருத்தை 'வயா' என்றனர் சங்கப்புலவர். கருவுற்றதாயின் விருப்பங்கள் தீர்க்கப்படாவிடில் பிறக்கும் மகவிற்கு ஊறு ஏற்படும் என்பது பரம்பரையாக வரும் உலகநம்பிக்கை. அதனால் கணவன் அந்த ஆசைகளை முடிந்தவரை நிறைவுசெய்கிறான். கணவன் தன் அருகே எப்போதும் இருக்கவேண்டும் என்பது சூலுற்ற பெண்ணின் அவா. நீலச்சேவலாகிய கணவன் பெடையின் அருகேயிருப்பது போலத் தலைவனின் மலர்ந்தமார்பு தலைவியின் ஆவலைத் தீர்க்கிறது.[8]

## சூல்கொண்டோரின் அச்சம்

சூலுற்ற மகளிர் தாக்கும் விலங்குகளுக்கும் அச்சம்தரும் ஓசைகளுக்கும் அஞ்சுவது இயல்பு. யானைவரினும், இடிஇடிப்பினும் அஞ்சும் மகளிரது இயல்பு கூறும் பெரும்பாணாற்றுப்படை அதற்கு அஞ்சாத ஒரு பெண்ணைச் சிறப்பாகச் சுட்டுகிறது.[9]

சூலுற்றயானை தன்பகை விலங்கான யாளியைக் கனவில் கண்டு நடுங்குகிறது; தன்னைத் தின்ன வரும் புலிக்கும் நடுங்குகிறது. அதனால் களிறு எப்போதும் அதை அணைத்து, அருகிருந்து காக்கிறது.[10] சூலுற்ற வெண்குருகு, மகளிர் அவல் இடிக்கும் ஓசைக்கு அஞ்சிப் பறந்து செல்கிறது. எப்போதும் பழகிய கடல் ஒலிகூடச் சூலுற்றபோது அதற்கு அச்சம் தருகிறது. கணவனின் அன்பே இதற்கு ஆறுதலாக அமைகிறது.[11]

வயா–ஆசைகளும் நிறைவேறலும்

ஆண்குருவி கரும்புப்பூவில் கூடிமைத்தும், ஆண் அன்றில் தாழை மடலில் கூடிமைத்தும் சூலுற்ற பெடைக்குப் பாதுகாப்பு தருகின்றன.[12] நாரை கடல்-மீனையும், நீர்க்காக்கை அயிரை மீனையும் மயில் பாகல் பழத்தையும் சூலுற்றபோது அதிகம் விரும்புகின்றன.[13] மான் அருகம்புல்லையும், புலி களிற்றையும், பூவை சேவலையும், செந்நாய் பன்றியையும், பிடியானை கரும்பையும் விரும்புவதை அறிந்து[14] அவற்றின் கணவர் எப்பாடுபட்டேனும் அவற்றைத் தேடித்தருவது, பிறக்கப்போகும் மகவுக்கும் தாய்க்கும் எந்தவித ஊறும் ஏற்படக்கூடாது என்பதற்காகவே. மகளிரின் வயா விருப்பங்களில் புளிச்சுவையை உடைய காய்களும், மண்ணும் சிறப்பிடம் பெறுகின்றன.[15] தன் ஆவலை நிறைவேற்றிக்கொள்ள முயலும் கடுஞ்சூல் மந்தி யானையின் கவளத்தைத் திருடித்தின்கிறது.[16] இதுபோன்ற வேட்கைகள் கருவுற்ற மகளிரின் அழகைக் கெடுக்கும் தன்மை உடையன என்பதைத்

"தொல்லெழில் வரைத்தன்றி வயவுநோய் நலிதலின்"[17]

என்று கலித்தொகை காட்டுகிறது.

வயா–சேய் அழிதல்

உண்ணும் பொருட்களின் தன்மை அறியாது உண்டால் கருவே அழியும் வாய்ப்பும் இருப்பதை மகப்பேற்றுவல்லுநர் அறிவர். எள், பப்பாளி, அன்னாசி போன்றவைகள் சத்துள்ளவை எனினும் இளஞ்சூலை அழிக்கும் திறமும் படைத்தவை

என்பதால் மகளிர் அதைத் தவிர்ப்பர். காட்டில் வாழும் இளம் பிடியானை தன் ஆசையே தன் கருவிற்கு எமன் என்பதை அறியவில்லை; இளம்மூங்கிலை விடியலில் சென்று தின்றுவிடுகிறது. சூல் அழிந்துவிட அதற்காக வருந்தியதை,

> "வழுவப் பிண்டம் நாப்பண் ஏமுற்று
> இருவெதிர் ஈன்ற ஏற்றிலைக் கொழுமுளை
> சூன்முதிர் மடப்பிடி நாள்மேயல் ஆரும்"[18]

என்று நற்றிணை காட்டுகிறது.

கரு-அடைகாப்பில் பாதுகாக்கப்படுதல்

தாயின் வயிற்றில் இருப்பினும் குழந்தை முழு பாதுகாப்புடன் வளரவேண்டும். அஃறிணை உயிர்களும் பாதுகாப்பான இடங்களிலேயே முட்டையிட்டு அடைகாத்துப் பாதுகாப்பளிக்கின்றன. பருந்து உயரமான ஓமைமரத்தில் முட்டை இடுகின்றது. ஆமை நொச்சி நிழலிலும், பன்றி உழுத பள்ளத்திலும் இடும் முட்டையை ஆண் யாமை அடைகாக்கிறது. நீர்க்காக்கை குடைக்காளான் கீழ் முட்டையிடுகிறது. எறும்பும் மழைபெய்யும் பொழுது தன் முட்டையை எடுத்துச் சென்று வற்புலம் சேர்க்கிறது.[19] அடைகாக்கப்படாத ஆமை முட்டைகள் அழிகின்றன. அழகான மயிலின் முட்டையைக் குரங்கின் குட்டி பாறைநிலத்தில் வெயிலில் உருட்டி விளையாடுகிறது.[20] கவனக்குறைவு அழிவையும் பிறக்குமுன்பே சேய்க்குத் தருவதை அறியமுடிகிறது.

மரபுநிலையும், உளநலமும்

உணவுப் பழக்கங்களால் சேய் அழிவது போல உள்ள இயல்புகளாலும் சேயின் இயல்புகள் மாறுகின்றன. ஒருவன் கருவாக உருவாவதற்கு முன்பே உளநலத்திற்கான வித்துக்கள் ஊன்றப்பட்டு விடுகின்றன. கருவின் உடல் உள வளர்ச்சியைப் பொறுத்தவரை தாயின் உளநிலையும் முக்கியபங்கு வகிக்கிறது. கருவுற்ற தாய், பிறக்கப்போகும் சேயை விரும்புகிறாளா அல்லது வெறுக்கிறாளா என்பதும் முக்கியமான

உளநலப் பிரச்சினையாகும். திருமணம் ஆவதற்கு முன்பே தாயாக நேர்ந்த பெண்களும், மணவாழ்வில் மகிழ்வு பெறாத பெண்களும், வறுமையால் வாடும் பெண்களும், அடுத்தடுத்துப் பல சேய்களுக்குத் தாயாக நேர்ந்த பெண்களும், குழந்தையால் தனது அழகு குறைந்துவிடுமோ என்றஞ்சும் பெண்களும், குழந்தைப் பிறப்புப் பற்றிய குருட்டு நம்பிக்கைகள் கொண்ட பெண்களும் குழந்தை பிறப்பதனை அவ்வளவாக விரும்புவதில்லை. இதன் காரணமாக இவர்களுடைய மெய்ப்பாட்டுநிலை மிகவும் பாதிக்கப்படுகிறது. அச்சம், பீதி, ஆகிய மனஎழுச்சிகளால் இவர்கள் தொல்லைக்கு உட்படுகிறார்கள். இதனால் பிரசவப் போக்கு பாதிக்கப்படுவதுடன் இயற்கையாகவும் பிரசவம் ஏற்படுவதில்லை. அதற்கு மாறாகக் குறைமாதத்தில் பிரசவம் ஏற்படுதல், காலம் கடந்து பிரசவம் ஏற்படுதல், பொய்ப்பிரசவவலி ஏற்படுதல் போன்ற பல பிரச்சினைகள் உருவாகின்றன. தாய் மனக்கிளர்ச்சி பெறும்போதோ அல்லது தாயின் அமைதி குலைந்தாலோ நாளமில்லாச் சுரப்பி-களின் சுரப்பு ஏற்பட்டு, இரத்தத்தில் கலந்து இந்த உட்சுரப்பி நீர்கள் (Hormones) தாய்க்கும் சேய்க்கும் இடையே உள்ள இரத்த ஓட்டமாற்றத்தில் குழந்தையை அடையலாம். எனவே மறைமுகமாக, வேதியியல் முறையில் தாயைப் பாதிக்கும் நிகழ்ச்சிகளால் வயிற்றுக் குழந்தை பாதிக்கப் பெறலாம். இதனால் குழந்தை முழுமையாகப் பிறந்தால் இறக்கவும், குறைமாதத்தில் பிறக்கும்போது கருச்சிதைவு அல்லது ஊனங்களுடன் பிறக்கலாம் என்பதற்கும் வாய்ப்புண்டு என்பது உள மருத்துவ இயலார் கருத்து.[21] தாய்க்கு மனதளவில் ஏற்படும் அதிர்ச்சிகளால் குழந்தை தாக்கப்படுவதைச் சங்கப்புலவர் அறிந்திருந்தனர்.

"குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்"[22]

"பேடிப் பெண்கொண் டாடுகை கடுப்ப"[23]

"சிறப்பில் சிதடும் உறுப்பில் பிண்டமும்
கூனுங் குறளும் ஊமும் செவிடும்
மாவும் மருளும் உளப்பட வாழ்நர்க்கு

எண்பேர் எச்சம் என்றிவை எல்லாம்
பேதைமை யல்லது ஊதியம் இல்லென
முன்னும் அறிந்தோர் கூறினர்"[24]

என்னும் சான்றுகள் பிறக்கும்போதே மாறுபட்டுப் பிறந்த குழந்தைகள் இருந்ததைத் தெரிவிக்கின்றன.

கருச்சிதைவு இயற்கையாக மட்டுமின்றி, வலிந்து தாக்கப்படுதலினால் செயற்கையாகவும் ஏற்படுத்தப்பட்டுள்ளதையும், அது பாவச்செயலாகக் கருதப்பட்டதையும்,

"மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்"[25]

எனப்புறநானூறு தெரிவிக்கிறது.

கடுஞ்சூல்

தாயின் முதல் கருப்பம் கடுமையானது என்பதைக் 'கடுஞ்சூல்' என்ற ஒரேசொல் விளங்கவைக்கிறது. கருவுறுதலால் வாழ்க்கை முறையே மாறிவிடும் சூழலில் தாய், அச்சம், வலி, துக்கம் ஆகியவற்றுடன் போராட வேண்டியுள்ளது. ஒரு புதிய உயிரை உலகுக்கு அளிக்கும் ஆவல்மிக்க தாய் ஆதரவுக்கு ஏங்குகிறாள். குழந்தைப்பேறு குறித்து எப்போதும் பயமும் ஐயமும் கொண்டுள்ள முதலில் கருவுற்ற பெண்ணிற்கு இதமான சூழ்நிலையும், ஆதரவான அணைப்பும் தேவைப்படுகிறது. அதிர்ச்சி தரும் செய்திகள் தாய்க்குக் குழந்தை பிறக்கும் வேளையில் தெரிவிக்காதிருப்பது நலம் என்பர் உளநலவியலார் தா.ஏ. சண்முகம்.[26] அதனால் சேய் பிறக்கும் வேளையில் பொருள்வயிற் பிரியக்கருதும் தலைவனைத் தடுத்து நிறுத்துகிறாள் ஐங்குறுநூற்றுத் தோழி.[27] சூல்கொண்ட மனைவியை நினைத்து, பிரிந்து சென்ற தலைவனும் விரைந்து மனைமீள்கிறான். முதன்முதல் பெற்ற குழந்தையைக் கடுஞ்சூற் சிறுவன், கடுஞ்சூல்மகள் எனத்தாய் மிகுந்த பாசம் வைத்து வளர்க்கிறாள்.[28]

விலங்குகளிலும் கடுஞ்சூல்மந்தி, கடுஞ்சூலாநாகு, கடுஞ்சூல்பிடி எனக் குறிப்பிடுவது முதற்சூலின் கடுமையைக் குறிப்பதாகவே அமைகிறது.[29]

கருவுறும் காலம் 270 நாட்களே எனினும் சில பெண்கள் பன்னிரு திங்கள் கருவுறுதலும் உண்டு என்னும் அரிய செய்தியைக் குறுந்தொகை தெரிவிக்கிறது. அதனால் கடுமையான சூல் என்பதாலும் கடுஞ்சூல் எனப்பட்டிருக்கலாம் என்பதை,

"முந்நாற் றிங்க ணிறைபொறுத் தசைஇ
ஒதுங்கல் செல்லாப் பசும்புளி வேட்கைக்
கடுஞ்சூன் மகளிர் போல"[30]

என்னும் பாடலால் அறியமுடிகிறது. இதனை,

"பன்னிரு திங்கள் வயிற்றிற் கொண்டவப் பாங்கினால்"[31]

எனப் பெரியாழ்வாரும் உறுதி செய்கிறார்.

<u>மகவீன்றபின் சிறப்பாகப் பேணல்</u>

மகவீனுதல் மறுபிறப்புப் போன்றது; அபாயம் நிறைந்தது; போராட்டம் மிகுந்தது; மிகுந்த துன்பத்தைத் தாய்க்குத் தருவதுடன் சுற்றத்தாரையும் கலங்கச் செய்வது.

"... வயவுநோய் நலிதலின்
அல்லாந்தார் அலவுற ஈன்றவள் கிடக்கைபோல்"[32]

என்னும் கலித்தொகை மகவீன்ற பின்னர் தாயின் உடல்நிலை அதிகம் கவனிக்கப்பட வேண்டும் என்னும் செய்தியைத் தருகிறது. உடல்தூய்மைக்கும், நலிவு தீர்ந்து உரம்பெறவும் சுற்றத்தார் ஆவன செய்கின்றனர். அது போன்று குட்டி ஈன்ற பிணவு பசித்திருக்கும் என்று அறிந்துள்ள ஆண்விலங்குகள் தேவையான உணவைக் கொண்டுவந்து தருகின்றன. ஆண்கழுகு தன் பெடைக்கு, புலி வேட்டையாடிய பின்

மீந்துள்ள மரையாவின் தசையைக் கொண்டுவந்து தருகிறது; செந்நாய் தன் பிணைக்கெனப் பன்றியைத் தாக்கி வீழ்த்தும்; பிணவு பசித்திருக்க இரைதேடிச் செல்லும் புலி களிறடும்; காட்டுப் பசுவையும், கலைமானையும் வேட்டையாடும்; கடுஞ்சூல் ஈன்ற பிடிக்குக் கவளம் தந்து காக்கும் யானை, கரும்பும், தினைக் கதிரும், மூங்கில் முளையும் தந்து இளைப்பாற்றும், பார்ப்பீன்ற மந்தியின் அழிபசி போக்கத் தந்தைக்கடுவன் பலாச்சுளை தோண்டித்தரும். புறா தன் பெடைக்கு நெற்கதிர் கொண்டுவந்து தரும்; மனைக்கண் மகவை ஈன்ற அமர்க்கண் ஆமா நெடுநிரை நன்புல் ஆரும்; அவை நெற்கதிர் தின்றால் நோயுறும் என மேய்வதற்கு அனுப்பப்படுவதில்லை.[33] இன்னோரன்ன செய்திகள் களவில் வரைவுநீட்டித்தும் பொருள்வயிற்பிரிந்தும் தலைவியைக் கலங்க வைக்கும் தலைவனின் காட்சிக்கும், கேள்விக்கும் உரியனவாக அமைக்கப்பட்டுள்ளன. காதலியை மணந்து, மகப்பெற்று குடும்பமாக வாழ்வதன் தேவையை இயற்கை அவனுக்கு எடுத்துரைக்கின்ற பாங்கு நுண்ணியது.

தாயின் பெருமிதம் ( Superiority complex )

மகப்பயந்ததாய் உடல்நலிவுற்றிருப்பினும் ஒப்பனையின்றி உலர்ந்த கதுப்புடன் பேய்போன்று தோற்றம் அளிப்பினும் பெருமையுடன் தன்னை உயர்ந்தவள் என்று நினைக்கிறாள்.

"பேயனை யம்யாம் சேய்பயந் தனமே"[34]

என்பது அவளது உயர்வுமனப்பான்மையின் வெளிப்பாடு.

இரட்டைக் குழந்தைப்பேறு ( Twins )

மகப்பேற்றில் இரட்டைக் குழந்தை பிறப்பது ஒரு அரிய நிகழ்ச்சியாகும். ஒரு கருப்பையில் இரண்டு மகவு உற்பத்தியாகிப் பிறக்கும் குழந்தைகளின் உடல், மன வளர்ச்சியில் உள்ள ஒற்றுமை, வேற்றுமைகளை அறிஞர்கள் தொடர்ந்து ஆய்ந்து வருகின்றனர்.[35]

சங்க இலக்கியத்தில் இரட்டைக்குழந்தை பெற்ற தாயின் மனநிலை குறிப்பிடப்படுகிறது. அறிந்தோ, அறியாமலோ இரண்டு மக்களும் நஞ்சுண்டதை அறியும் தாயின் மனம் இருபேரச்சம் கொள்கிறது.

"இரண்டு கன்றினுக்கு இரங்கும் ஓர் ஆ"[36]

என்ற கம்பரின் உவமை போல தலைவனின் வழி அருமை குறித்தும் தலைவியின் துன்பம் குறித்தும் வருந்தும்தோழி,

"கவைமக நஞ்சுண் டாஅங்
கஞ்சுவல் பெருமவென் னெஞ்சத் தானே"[37]

எனக் குறிப்பிடுகிறாள்.

இரட்டையர் ஒத்த கருத்துடையராய் இருத்தலும் கூடும் என்பர். கபிலருடன் பறம்புமலையை நீத்துச்செல்லும் பாரிமகளிர் இருவரும் சேர்ந்து,

"அவற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவில்
எந்தையு முடையேம்; எம்குன்றும் பிறர்கொளார்
இற்றைத் திங்கள் இவ்வெண் ணிலவில்
வென்றெறி முரசின் வேந்தரெம்
குன்றும் கொண்டார் யாம்எந்தையு மிலமே"[38]

என்ற பாடல் பாடியுள்ளனர். சங்க இலக்கியத்தில் இருவர் சேர்ந்து பாடியபாடல் இது ஒன்றே. பிற்காலத்து இரட்டைப்புலவர் போன்று சங்ககாலத்து இரட்டை-மகளிர் புலமையுடன் இப்பாடலைப் பாடவில்லை. யாப்பு நயமற்ற மிக எளிய பாடல்தான் எனினும் முன்புநடந்த நிகழ்வுகளை நினைத்துப்பார்த்து வருந்திப்பாடும் தன்மை எண்ணத்தொடர்பு ( Association of Thought ) என்னும் உளவியற் கூற்றை உள்ளடக்கியுள்ளது. இருவரது கருத்தும் ஒன்றேயாக அமைந்து இருப்பது இரட்டையர் உள்ளநிலைக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாய் அமைகிறது.

மகப்பேறு - தாய் இறப்பு

பிள்ளைப்பேறு இறப்புக்கும் வழிவகுக்கும் என்பது தெரிந்திருந்தும் தாய் ஆகும் பெண் அதை ஏற்கிறாள். சிப்பி, மூங்கில், வாழை, நண்டு போன்று தன்னை அழித்தும் இனப்பெருக்கம் நடைபெறுவதை இயற்கை காட்டுகிறது.

"தாய்சாப் பிறக்கும் புள்ளிக் கள்வன்"[39]

என்பதில் பிறக்கும் மகவே தாய்க்கு எமனாகிறது.

தாய் - சேய்க்கு ஊட்டுதல்

இயல்பாக மனிதனிடத்தும் விலங்கினிடத்தும் முயற்சியின்றிப் படியும் இயல்பூக்கங்களில் ( Instinct ) ஒன்று பசி. உயிரினங்கள் அனைத்தும் ஆட்பட்டுத் தங்கள் வாழ்க்கைப் போராட்டத்தை நிகழ்த்தத் தூண்டுவது இது. பிறந்த குழந்தை தாயிடம் பாலருந்தித் தன்பசிதணிகிறது. பால்குடித்து அறியாத குழந்தைக்குத் தாய் தன்முலை பிடித்து ஊட்டிப் பழக்குகிறாள். இளம்வயதில் உண்ணாப் பாவைக்கு வறுமுலை ஊட்டியவள், தாயானதும் தன் மகவுக்குப் பாலினைந்தூட்டுகிறாள். குழந்தை தளர்நடை இட்டு ஓடிச்செல்லும் போதும் தானும் பின்னால் ஓடி ஓடிப் பாராட்டி மகிழ்கிறாள்.[40]

குழந்தை சமூகத்தில் பழகவும், செயல்படவும் வித்திடும் களமாக உணவூட்டும் சூழ்நிலை அமைகிறது. குழந்தை உணவு பெற்று அடையும் மகிழ்ச்சியும் மனநிறைவும் அச்சூழ்நிலையில் இடம்பெறும் மற்ற உறுப்பினர்களுடன் இணைக்கப்படுகின்றன. இதன் அடிப்படையில் குழந்தை தன்தாயினைக் கண்ட மாத்திரமே மனநிறைவும் மகிழ்ச்சியும் அடைகிறது. தாயின் உணர்வுகளையும் எண்ணங்களையும் பொறுத்தே குழந்தையின் பிற்கால வாழ்வு அமையும். எனவே குழந்தைக்கு இதமான, இன்பமான உணர்வு கொண்ட அனுபவங்களை உரிய முறையில் அமைத்துத் தருதல் தாயின் தலையாய கடமை ஆகும்.

> "பசித்த குழந்தைக்குப் பாலூட்டாமல் விட்டுவிட்டால் தன்னையாரும் கவனிப்பதில்லை என்ற உணர்வு அதற்கு ஏற்பட்டுவிடுகிறது. குழந்தைக்கு உரிய வேளைகளில் தகுந்தவாறு பாலூட்டாவிடின் அதனிடம் சமூக உணர்வு குன்றிய தன்மை காணப்படுகிறது. மேலும் பசியினால் அழுவதற்காகக் கடிந்து தண்டிக்கப்பட்டால் அதனிடம் உளப்போராட்டங்களும் ஏற்படுகின்றன."[41]

என்பர் டாக்டர் தா.ஏ, சண்முகம்.

இதனை உணர்ந்த தாய் தான் முடைநாற்றம் பெற்றிருந்தாலும், பேய் போலத் தோற்றமளித்தாலும் மகவுக்குப் பாலூட்டுவதையே முதல் கடமையாகக் கொள்கிறாள். புனிறுதீர்க்க ஐயவி அரைத்துப் பூசிக்கொண்டு பால்பெருகவேண்டிக் குளத்துநீரில் மூழ்குகிறாள். தான் இறப்பின் புதல்வன் முலைக்கு அழுவான் என்பதால் கணவன் செய்யும் கொடுமைகளையும் தாங்கிக்கொள்கிறாள். வறுமை காரணமாகப் பால் வற்றிய முலையையுடைய தாய் வேறுவழியில்லை எனும்போது மட்டும் குழந்தையைக் கடிகிறாள்.[42]

<u>தாய்மை இயல்பூக்கம்</u>

பிள்ளைப் பாசத்தில் அஃறிணை உயிர்கள் மனிதனுக்குச் சற்றும் குறைந்ததல்ல. ஈன்றபசுவும் எருமையும் தம் குழவியைவிட்டு அகலாது பாலூட்டி மகிழும்; யானை தன் கன்றுக்குத் தழை, மூங்கில், வேங்கைப்பூ கொண்டு வந்து ஊட்டும். நொச்சிமர நிழலில் பார்ப்புகளுடன் திரியும் ஆமை, யாமரத்தின் பழத்தை ஊட்டும். முயற்சியின்றித் தன் குட்டிக்குப் பழங்கள் பறித்துத் தரும் குரங்கு, மகளிர் காயவைக்கும் தினையைக் குட்டிக்காகக் கவரும்; கொடிய விலங்காகக் கருதப்படும் ஆமான் தூங்கும்போது சிறிதும் அஞ்சாது அதன் பாலைப்பிழிந்து தன் குட்டிக்குத் தரும் தாய்மையையுடைய குரங்கை நற்றிணையில் காணலாம். வானர மகளிர்வாய் அகப்பட்ட தன் பார்ப்பிற்கு இரை எடுத்துச்செல்லும் அன்னப்பறவை, வேறோர் இடத்தில் வளர்ந்தாலும், தன் கடமையை மறவாது இருக்கிறது. சிறிய மீன்களைப் பிடித்து நாரை தன்

பிள்ளைக்கு ஊட்டும். காக்கை மனையில் தரும் சோற்றுப்பலியையும், கழுகு இறந்தோரின் கண்ணையும் எடுத்துவந்து தம்பார்ப்பிற்கு ஊட்டுகின்றன. கொக்கின் பிள்ளை ஆரல்மீன் முட்டையும், இறவின் பிள்ளையும் பெற்று மகிழும். அனைத்து உயிர்களும் தம் குழவியை நினைந்தே உணவுதேடி ஊட்டும் தாய்மை இயல்புக்கம் உடையனவாய் உள்ளன.[43]

'ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன்பிள்ளை தானே வளரும்' என்பது பழமொழி. புலியால் ஆமான் சாக, காடுவிட்டுவந்த ஆமான் குழவிக்கு, இல்லத்திலுள்ள பசு பால் தருகிறது.[44] பெறாவிடினும் எல்லாக் குழவிகளும் தன் மகவைப் போன்றதே எனும் தாய்மை உணர்வு இதில் புலப்படும்.

எதிரிகளிடமிருந்து பாதுகாத்தல்

தான் அரிதாகத் தவமிருந்து பெற்ற மகவைப் பேணிக்காத்தல் தாயின் இயல்பு. உணவூட்டி வளர்ப்பது மட்டுமல்லாது எதிரிகளிடமிருந்து தன் மகவைப் பாதுகாப்பதில் தாயின் கவனிப்பு தனிச்சிறப்புப் பெறுகிறது.

> "தாயன்பு என்பது தம் குழந்தையிடம் காட்டும் நேரிடையான உணர்ச்சியின் வெளிப்பாடான என்றும் மாறாத உறவில் விளைவது. இரக்கம் என்பதே அதன் சிறப்பு ஆகும். பெண்ணின் தனித் தன்மையாகக் கருதப்படும் ஆக்கிரமிப்புப் பண்பும், பாலுறவு நாட்டமும் அழுத்தப்பட்டுத் தாய்மை என்னும் ஓரிடம் நோக்கித் திருப்பிவிடப்படுகின்றன."[45]

என்னும் உளவியலறிஞர் ஹெலன் டட்ச் என்பார் கூற்றுப்படி ஒவ்வொரு பெண்ணும் குழந்தையை எப்பாடுபட்டேனும் பாதுகாக்க நினைக்கிறாள். அவளிடத்தில் காணப்படும் தற்காதற் பண்பு ( Narcissism ) அவள் தாயானபின்னர் குழந்தையிடம் ஒன்றிவிடுகிறது. தாயிடம் காணப்படும் தன்னொறுப்பு மனநிலை ( Masochism ) குழந்தைக்காகத் தன்னையே தியாகம் செய்யவும் துணிந்து-விடுகிறது.

யானையைப் பிடிக்க மறவர் வெட்டிய குழியில் விழுந்துவிட்ட குழவியை மீட்கத் தாய்யானை அலறித் தன் சுற்றத்தை அழைக்கிறது. நிழலில் பதுங்கிவரும் புலியிடமிருந்து தன் குழவியைத் தாய் யானை ஒளித்து வைத்துக் காவல் காக்கும். புலியும் தான் ஈன்ற குட்டிகளை மிக அருமையாகப் பேணுகிறது. மந்தி தன் குட்டியைக் கடுவனும் நடுங்கும் மலை உச்சியில் ஒளித்துவைக்கும். மனையில் உள்ள ஈன்றணிமையுடைய பசு தன் கன்றை நெருங்கிவரும் மனிதர் மேல் கடுஞ்சினத்துடன் பாய்கிறது. மனைக்கோழி, மாலைக்காலத்தில் வேலிஓரம் காட்டுப்பூனை வரக்கண்டு தன் பிள்ளைகளைக் கூவி அழைத்து அருகில் வைத்துக்கொண்டு குரல் கொடுத்து உதவிக்கு அழைக்கிறது.[46]

தாய் தன் பிள்ளைகளைக் காக்கும் போராட்டம் கண்டு எதிரியும் மனம் இரங்குகிறான். போர்க்காலங்களில் குழந்தைகளையும் பெண்களையும் எதிரிகள் மன்னித்து விட்டுவிடுவர். வேட்டைநாயைத் துரத்தி, வேடனையும் எதிர்க்கும் பெண்பன்றியின் வீரத்தாய்மைக்கு மதிப்பு தரும் வேடன் அதைக்கொல்லாது விடுப்பதை ஐங்குறுநூறு காட்டுகிறது.[47]

குழந்தைகள் தாமாக நடக்கும்பொழுது தாயைப் பிரிந்து தொலைந்து போதலும் உண்டு. அதனால் கோயில் சென்று புத்தரை வணங்கும் மகளிர் தம் பிள்ளைகள் பிரிந்துவிடாமல் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு செல்வதாக மதுரைக்காஞ்சி கூறுகிறது.[48] தாயைப் பிரிந்த சிறுமியின் அவலத்தைப் பரிபாடல்,

"பிறந்த தமரிற் பெயர்ந்தொரு பேதை
பிறங்க விடையிடைப் புக்குப் பிறழ்ந்தியான்
வந்த நெறியு மறந்தேன் சிறந்தவர்
ஏஎ யோஒ வெனவிளி யேற்பிக்க
ஏஎ யோஒவென் றேலா வவ்விளி
அவ்விசை முழையேற் றழைப்ப வழைத்துழிச்
செல்குவ ளாங்குத் தமர்க்கா ணாமை

மீட்சியுங் கூடக்கூட மேவு மடமைத்தே
வாழ்த்துவப்பான் குன்றின் வகை"[49]

எனத் தெரிவிக்கிறது. சிறுமி தொலைந்து வெகுதூரம் வந்துவிடுகிறாள். தாயைக் கூவி அழைக்கும் குரலில் தவிப்பு வெளிப்படுகிறது. அவள் குரல் குன்றில் எதிரொலிக்க, அதை அறியாது தமர் ஆங்கே இருப்பர் எனத்தேடிச் செல்கிறாள்; அங்கும் காணாது மேலும் கூவி அழுகிறாள். மடமைமிக்க மகளைத் தொலைத்த தாயும் ஒரு பக்கம் தேடி அலையும்படி நேருகிறது. தன் தலையில் கைவைத்துத் தொலைத்துவிட்ட தன் மடமையை எண்ணித் தாயர் வருந்துவது போலக் கன்றைத் தொலைத்த பிடியானையும் வருந்துகிறது.

"கன்றொழித் தோடிய புன்றலை மடப்பிடி
கைதலை வைத்த மையல் விதுப்பொடு
கெடுமகப் பெண்டிரிற் றேரும்"[50]

என்பதால் குழந்தை தொலையாமல் பார்த்துக்கொள்வதும், தொலைந்தால் பதறித் தேடுவதும் எல்லாத் தாயரின் இயல்பே என்பது புலனாகிறது.

## தாய் - மகளை விலக்குதல்

தாய் தன் மகளைப் பார்த்துப் பார்த்து வளர்க்கும் அருமையை,

"தாய் உயிர் பெய்த பாவை"
"குழவியைப் பார்த்துஉறூஉம் தாய்போல்"[51]

எனக் கலித்தொகை பாராட்டுகிறது. தாய் முகம்பார்த்தே ஆமைக்குஞ்சுகள் வளர்வதை ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது. தாயின் பார்வையே குஞ்சுகள் வளர ஊக்கம் தருவதை மீனத்திலும் காணலாம். அத்தகைய தாயும் தன் குழந்தையை விலக்கும் நிலை உருவாவதை உளவியலில் பிறழ்வு நடத்தை என்பர். ( Abnormal behaviour ).

சட்டமும் சமுதாயமும் வரையறுத்த விதிகளுக்கு உட்பட்டு ஒருவன் நடப்பானே-யாகில், அவன் இயல்பு நடத்தையுடையவன் என்று மதிப்பீடு செய்யப்பெறுவான். இதற்கு முரணாக அறிந்தோ, அறியாமலோ அவன் நடப்பானேயாகில் அவன் பிறழ்நடத்தையன் என்கிறார் கப்ளன் என்னும் உளவியலறிஞர்.[52] அமெரிக்க உள மருத்துவக்குழு நரம்புத் தொடர்பான நோய்களாகப் படபடப்பு ( Tension ) மீவெறுப்பு ( Phobia ), மன அதிர்வு ( Hysteria ), மனச்சோர்வு ( Hypochondria ), மனச்சிதைவு ( Paranoia ), உணர்வு விண்டநிலை ( Schizophrenia ), ஆளுமைச் சிதைவு ( Personality Disorder) போன்றவற்றைக் குறிப்பிடுகிறது.[53] இவ்வகையில் ஏதேனும் ஒரு நோயால் பாதிக்கப்படும் தாய் தனது வெறுப்பைக் குழந்தைமீது காட்டி அதை விலக்கக்கூடும்.

> "வெளிப்படையாகக் குழந்தையை விலக்குதல் என்பது உடல்சார்ந்த கவனத்தைக் குழந்தையிடம் செலுத்தாமலும், நெருங்கிய தொடர்பு கொள்ளாமலும் இருத்தலாகும்"[54]

என்பர் மு. இராசமாணிக்கம். தாய்மை என்னும் இயல்பூக்கம் மாறி முற்றும் தூரவிலகும் மனப்பான்மை கொண்டபின் தாய் சிறுகுழவி என்றும் பாராமல் உடன்று அலைக்கிறாள்.

> "தாய் உடன் றலைக்குங் காலையும் வாய்விட்
> டன்னா வென்னும் குழவி"[55]

தாய் ஏன் அவ்வாறு செய்கிறாள் என்றறியும் ஆற்றலற்ற குழவி அன்னாய் என்றே அழும் என்பதை,

> "அரிசினத்தா லீன்றதாய் அகற்றிடினும் மற்றவள்தன்
> அருள்நினைந்தே யழுங்குழவி அதுவேபோன் றிருந்தேனே"[56]

என்று பெருமாள் திருமொழியில் ஒப்புகிறார் குலசேகராழ்வார்.

குழந்தையின் அன்னாய் என்று குரல்கேட்டதும் மனமிரங்கும் இயல்பு தாய்மைக்கு உண்டுதான். ஆயினும் மனம்பிறழ்ந்த நிலையில் தாய் அக்குழவியின் குரலுக்கும் இரங்காது முற்றிலும் துறந்ததை,

"தாயில் தூ வாக் குழவி"

"ஈன்றோள் நீத்த குழவி"[57]

போன்ற தொடர்கள் குறிப்பிடுகின்றன.

"மாசில் கற்பின் மடவோள் குழவி
பேஎய் வாங்கக் கைவிட் டாங்கு"[58]

என்னும் நற்றிணை நல்ல குடும்பப் பெண்ணாக இருக்கும் தாய் ஒருத்தி, தன் குழந்தையைப் பேய் பறிப்பதாக எண்ணி, அஞ்சி, அறிவுமயங்கித் தான் செய்வது அறியாமலே குழந்தையைக் கைவிட்டாள் என்று தெரிவிக்கிறது. தன் வாழ்வில் போதிய பாதுகாப்பும், அன்பும் கிடைக்கப் பெறாமையால் அச்சம் கொண்ட அத்தாயின் மனம் பிறழ்ந்த நிலையில் நடைபெற்ற இச்செய்கை பிறழ்வு நடத்தைக்கு எடுத்துக்காட்டாகிறது.

## குழந்தை இறப்பு

தன் உடலால், உதிரத்தால் உருவாக்கித் தன் உயிராய்த் தாய் நேசிக்கும் குழந்தை சிறிது வளர்ந்ததும் சில காரணங்களால் இறக்கவும் நேர்கிறது. சரியாகத் தாயைப் பற்றிக்கொள்ளத் தெரியாத மந்தியின் பார்ப்பு, யாரும் எடுத்தற்கரிய ஆழமுள்ள முழையில் விழுந்து தாய் கண்எதிரே இறந்தது. தான் தழுவிக் கொள்ளாது கைவிட்டதாலேயே தன்சேய் இறந்தது என்பதாகத் தாய்க் குரங்கு நினைத்தது. தன் அவலத்தை நினைந்து தன் சுற்றத்துடன் அழுது அரற்றும் ஓசை மலை எங்கும் ஒலித்தது.[59] குழந்தையை வளர்த்துப் பறிகொடுக்கும் தாயின் துக்கம்

ஆற்றுதற்கரியது. அத்தாய்க்கு உறவினர் சென்று ஆறுதல் கூறுவது உலக வழக்கு.

"வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை"[60]

என்பன ஐங்குறுநூற்றின் வெள்ளாங்குருகுப் பத்தின் முதலிரு அடிகள். வெள்ளைக் கொக்கின் பிள்ளை இறந்துவிட, அந்தத் துக்கம் விசாரிப்பதற்காக நாரை செல்கிறது. மகவைப் பறிகொடுத்த தாயைக் கண்டதும் நாரையின் துக்கம் மிகுதியாகிறது; அதன் நூவி உதிர்ந்து கடல்நீரான தென்கழியில் பரக்கிறது. துக்கத்தை அளவளாவி ஆற்றும் உளவியல் நோக்கம் (Counselling ) கொண்டு பகல் செல்லும் நாரை இரவிலும் இங்கேயே தங்குகிறது. தனது பசியையும் கருதாது, கொக்கின் துக்கம் ஆற்றுவதையே பெரிதாக நினைக்கிறது. இறந்த மகவிற்காக வருந்துவதைவிட அதிகமாகப் பறிகொடுத்த தாய்க்காக வருந்துகிறது. இவ்வுவமை பறவையாயினும் மகவிழப்புத் துன்பம் கொடியது என்பதைக் காட்டுகிறது.

"பிராணிகளின் இனப் பெருக்கத்தின் சார்பாகத் தமிழ் இலக்கியங்களில் விளங்கும் செய்திகளைச் சேகரித்துப் படிக்குந்தோறும் புலனாகிற ஒரே உண்மை, எல்லா நிலைகளிலும் மாந்தருக்குச் சமமாகவே, அவர்களின் ஆறாம் அறிவினையும், இத்துறையில் மட்டும் பிராணிகளும் பெற்றுவிட்டன போல் இயங்கி உள்ளன என்பதே"[61]

என்னும் ஆய்வாளர் கூற்றுப்படி தாய்மை இயல்பூக்கம் அஃறிணை உயிர்களிடத்திலும் இயல்பாகப் படிந்திருந்ததை அறியமுடிகிறது.

5.2 தாயும் மகனும்

"விஞ்ஞான எந்திர அதிசயங்களைக் காட்டிலும் உலக சரித்திரப் பெருநிகழ்ச்சிகளைக் காட்டிலும் துள்ளி விளையாடும் பிள்ளை

> ஒரு பெரிய அதிசயம் தான். அடிக்கடி பார்ப்பதால் அதிசயம், அதிசயமாகப் புலனாகவில்லை. குழந்தைக் கலைஞர்களான டாக்டர் மாண்டிசோரி அம்மையார் முதலானவர்கள் குழந்தை என்ற அதிசயத்தை ஊடுருவிப் பார்த்து உண்மை காண முயன்றிருக்கிறார்கள்"[62]

என்பார் கூற்று குழந்தை இருக்கும் இடம் மகிழ்ச்சிக் களம் என்பதைக் காட்டுகிறது. குழந்தையற்ற வீடு, அதன் தலைவியை மலடி எனப்பட்டம் சூட்டவும், ஊரார் தீயசகுனம் என்று விலக்கவும் இடம்தருகிறது.

> "சேர்ந்திருந்தே இருபேரும் சிவன்பாதம் சேருங்காலம்
> உற்றுருமை செய்தனுப்ப உரிமையான பிள்ளை இல்லை"[63]

என்பது மகப்பெறாத பெண்ணின் வேதனைக்குரல். அவ்வேதனை நீங்கப் பிறந்த மகன் தாய்க்கு என்றும் அதிசயமே. தனயன் பிறக்கத் தாய் தவமிருப்பது போலச் சிலர் பிறக்குமுன்பே தவத்தின் பயன் எய்தினாற்போல் தோன்றுவதும் உண்டு. அவரைக் கருவிலே திருவுடையார் எனப்பாராட்டுகின்றனர். அபிமன்யு, பிரகலாதன் போன்றோர் தாயின் வழியாக நற்சிந்தனைகளைக் கருவில் உணர்ந்து, பிறந்து வளர்ந்த பிறகும் அதனை மறவாத அற்புத ஆற்றலை அடைந்தனர். இவ்வழி உளவியல் ஆய்வினை Womb Education என்று கூறுவர். தாய் வயிற்றிருந்து தாயம் எய்தியதாகக் கரிகாலனைப் பட்டினப்பாலையும், பொருநர் ஆற்றுப்படையும் குறிப்பிடுகின்றன. அம்மகன் தாயின் பல்வேறு உணர்ச்சிகளுக்கு வடிகாலாகவும், ஆதரவாகவும் பற்றுக்கோடாகவும் இளஞ்சேயாக இருக்கும்போதே உதவுகிறான்.

மகனைப் பெற்ற தாய் என்றும் கருதாத தந்தை பரத்தையை நாடிச் செல்கிறான். தன் வாழ்க்கைத் துணையின் அன்பை இழந்துவிட்ட மனைவி தன் உணர்ச்சிகளுக்குப் போக்களிக்கும்படி தன் பிள்ளையிடத்து மிகவும் பற்று உள்ளவளாக இருப்பாள் என்பது உளவியல் கூற்று.[64] பொன்போன்ற தன்புதல்வனையும் நீத்துச் சென்ற கணவனை 'அன்பிலி', 'மகனல்லான்' எனச் சாடுகிறாள் தலைவி.

பரத்தையிற் பிரிந்த கணவனுக்கு வாயிலாக அவனுடன் வராமல் தனித்து வந்த மகனைக் 'காதலோன்' என்கிறாள். கணவன் மீதுகொண்ட காதல் மகனின்மீது செலுத்தப்படுகிறது.

இளங்குழவிப் பருவத்தில் தந்தையைவிடத் தாயின் அன்பே குழந்தைக்கு மிகவும் தேவைப்படுகிறது. தந்தையைப் பிரிந்தாலும் வாழும் புதல்வன், தாயைப் பிரிந்து வாழ இயலாதிருக்கிறான். தந்தையின் பிரிவைவிடத் தாயின் பிரிவு அதிக அளவில் மனபாதிப்பை ஏற்படுத்துகிறது. குறிப்பாகக் குழந்தையின் முதல் ஐந்து ஆண்டுகால வாழ்க்கையில் தாயின் அன்பு பெருமளவில் தேவைப்படுகிறது என உளவியலார் ( Psychologists ), உள மருத்துவர் ( Psycharists ) ஆகியோர் நம்புகிறார்கள்.

> "தாய் அன்பைக் கவர்ந்து கொள்வதனால் ( Maternal Deprivation ) விளையும் தீய விளைவுகள் மிகவும் அதிகமானவை. ஒருகுறைக்கவர்ச்சி ( Partial Deprivation ), கவலை ( Anxiety ), அன்பிற்கு மிகையான தேவை, ஆற்றல் வாய்ந்த பழிவாங்கும் உணர்ச்சிகள், இவற்றினின்று குற்றம் ( Guilt ), சோர்வு ( Depression ) ஆகியவற்றால் ஏற்படும் மன எழுச்சிகளையும் ( Emotions ) உந்துக்களையும் ( Drives ) சமாளிக்க இயலாது. குழந்தை கடுந்துன்பம் அடைவதோடு, பிறருடன் அன்பு, நல்லுறவுகள் கொள்ளவும் இயலாது"[65]

எனத் தெரிவிக்கிறார் ஜான் பௌல்சி என்னும் உளவியலறிஞர். இக்கருத்தையுடைய ஐங்குறுநூற்றுத் தோழி 'தாய் இறப்பின் காதலம் புதல்வன் முலைக்கு அழுவான்; தாய் உயிரோடிருக்க வேண்டின் தந்தை பிரியக்கூடாது' என்று கூறி தலைவன் பிரிவைத் தடுத்து நிறுத்துகிறாள்.

ஒரு தந்தை மனைவியை இழப்பின், மக்கள் ஆதரவற்றுப் போவார்கள். மாற்றாந்தாய் வந்தாலும், தாயின் இடம் ஈடுசெய்யப்பட முடியாதது. ஆனால்

தந்தையை இழந்த மக்களோ எந்நாளும் தாயால் வஞ்சிக்கப்படுவதில்லை. பொருளாதார அளவில் மட்டுமே தந்தை பாதுகாப்பாக இருப்பதால், அந்த இடத்தைத் தாய் உழைத்துப் பாடுபட்டு நிறைவு செய்கிறாள். கைம்மை எய்திய பெண்கள் தம் புதல்வரைக் காக்க மேற்கொள்ளும் முயற்சிகளைப் புறநானூறு காட்டித் தாயே தந்தையுமாவதை நிறுவுகிறது.

அன்னையின் வளர்ப்பு

ஒரு குழந்தை நல்லவன் ஆவதோ, கெட்டவன் ஆவதோ அன்னையின் வளர்ப்பில்தான் உள்ளது என்பர். தாய் தன் மகனைத் தந்தையின் துணையுடன் வீரனாக, சான்றோனாக வளர்க்கிறாள். பெற்றோர் தம் இளங் குழந்தைகளின் பிரச்சினைகளில் தக்க கவனம் செலுத்தி அவர்களுக்குத் தம்மிடம் உள்ள அன்பினைப் புலப்படுத்துவதும் மிகத் தேவையாகிறது.

> "தற்காலப் பெற்றோர்கள் வளரும் குழந்தைகளின் ஆரோக்கியத்திலும், நல்ல பழக்க வழக்கங்களிலும் கவனம் செலுத்தவேண்டும். அறிவு, பண்பாடு, மனநலம் இவற்றில் பெற்றோரின் கவனமின்மைக்கு வறுமையுடன் அறியாமையும், பொறுமை இன்மையும் காரணம் ஆகும். பொறுப்புமிக்க பெற்றோர்கள் வளரும் குழந்தைகளின் பிரச்சினை-களைக் களைய உதவவேண்டும்."[66]

என்கிறார் மருத்துவர் பி.கே. செல்லதுரை.

கல்விச் சிறப்பில் தாய் மனம் திரிதல்

சங்கச் சமுதாயத்தில் தொழிற்கல்வியும் போர்க்கல்வியும் முதன்மை பெற்றிருந்தன. எண்ணும் எழுத்தும் கற்கும் பள்ளி வாய்ப்பு அனைவர்க்கும் கிட்டவில்லை என்பதைக் கல்லா இளமை, கல்லா இளையர், கல்லாக் கோவலர், கல்லாச் சிறார் போன்ற தொடர்கள் தெரிவிக்கின்றன. அரசரும், சான்றோரும் போற்றும் கல்வியுடைய மகனைத் தாய் அதிகம் விரும்பியிருக்கக் கூடும். முறையான

கல்விப்பயிற்சி தந்தும் மகன் அதைப் பயன்படுத்தாவிடில் தாயும் மனம் திரிவாள் என்கிறது புறநானூறு.

"பிறப்போ ரன்ன உடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலால் தாயுமனந் திரியும்"

என்னும் பாண்டியன் அறிவுடைநம்பி தம் கருத்தாக,

"அறிவுடையோ னாறு அரசும் செல்லும்"[67]

என்கிறார்.

"அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும்"

என்னும் வெற்றி வேற்கையும் அதை வலியுறுத்தும்.

பொருளற்ற ஏழை ஒருவனைத் தாயும் வேண்டாள் எனத் தாய் மனம் திரியும் ஒரு நிலையை ஔவையார் குறிப்பிடுகிறார்.

"கல்லானே யானாலும் கைப்பொருள் ஒன்றுண்டாயின்
எல்லாரும் செய்வர் சிறப்பு – இல்லானை
இல்லாளும் வேண்டாள் மற்றீன்றெடுத்த தாய்வேண்டாள்
செல்லாதவன் வாயிற் சொல்"[68]

என்றவாறு ஈன்றதாய் வளர்ந்த மகனிடம் ஏதாவது ஒரு சிறப்பை எதிர்பார்க்கிறாள். இல்லாமையுடன் கல்வி அறிவின்மையும் சேரும்போது தாய் அவனை வெறுத்துக் கல்விச்சிறப்பு மிக்கவனை அதிகம் பாராட்டுதல் இயல்பு. சிறப்புடையோனை உயர்வாக நோக்கும் தாயின் இவ்வியல்பு, சமுதாயநலன் கருதுவதாக அமைந்து தனிமனிதரிடம் வெளிப்படும் சமூக இயல்பூக்கம் ஆகிறது. ( Social Instinct )

மகன் மரணத்தில் மகிழும் தாய்

போர்க்காலச் சமுதாயத்தில் புலி போன்ற மகனைப் பெற்ற தாய் அவனது வீரச்சிறப்பையே பெரிதும் விரும்புதல் இயல்பு. ஆயினும் கணவனும், தமையனும்,

தந்தையும் இழந்த நிலையில் ஆதரவாக இருக்கும் ஒரே மகனையும், இழக்கத் துணியும் முதின்மகளிர் ஆவது சற்று மாறுபட்ட இயல்பு ஆகிறது. இளஞ்செல்வனையும் அனுப்பும், தாயர், மகனின் வீரமரணத்தில் மகிழும்தாயர் ஆகியோர் பிறழ்நிலை நடத்தையின் சான்றாகின்றனர்.[69]

மகன் – காமம் என்னும் இயல்பூக்கம்

நல்ல குடும்பச் சூழலில் வளர்ந்த மகன் தாய், தந்தைக்கு உற்ற துணையாகிறான். ஆடவர்ப்பிணிக்கும் பீடுகெழு நெடுந்தகையாகிக் குடிப்பெருமை காக்கிறான். ஓர் இளநங்கையைக் கண்டு காதல் கொள்கிறான். களவில் மெய்யுறுபுணர்ச்சி கொள்ளாது, தமர் அனுமதி உடன் மணம் செய்ய விரும்புகிறான். ஆனால் மனதில் ஆழ்ந்துவிட்ட காமமோ எளிதில் பண்படுத்தக்கூடிய இயல்பூக்கம் அன்று. காதல் நிறைவேறாததால் ஒளி மங்கும் தலைவன், வேனிலால் வருந்தும் இடபம்போல் மெலியவும் செய்கிறான். அவ்வளவில் தன்னை வருத்தும் தலைவியின் அழகை,

"குன்றக் குறவன் காதல் மடமகள்
வரையர மகளிர்ப் புரையுஞ் சாயலள்
ஐயள் அரும்பிய முலையள்
செய்ய வாயினள் மார்பினள் சுணங்கே"[70]

என்று அகக்காட்சி ( Introspection ) எனும் உளவியல் முறையில் கண்டு தன் உள்ளத்தில் ஏற்பட்ட மன அழுத்தத்தைக் ( Stress ) குறைத்துக் கொள்கிறான். தோழிமூலம் தலைவியே தனக்கு உற்ற மருந்து எனத்தெளிவுறுத்துகிறான். தமரைத் திருமணம் பேச அனுப்பி, முலைவிலை தந்து ஊர்மெச்சத் திருமணமும் செய்து-கொள்கிறான். அவனது செயலை வாழ்த்தும் தோழி அவனது தாய் தந்தையரையும் சேர்த்து வாழ்த்துகிறாள்.

உடலியல் இன்பம்

உடலியல் இன்பம் என்னும் இயல்பூக்கத்தால் உந்தப்படும் தலைமகன் உடலளவில் இன்பம் துய்க்கவும் செய்கிறான். ( Instinctive pleasure ) குழவி தன் அன்னையின் உடல்படுதலால் இன்பம் அடையும் காலம் தொடங்கி, உடலால் கிட்டும் இன்பம் எல்லா உயிரினங்கட்கும் தேவைப்படும் ஒன்றாகிறது. களவு கற்பாக வேண்டித் தோழியும், தலைவியும் வற்புறுத்தும் போது மணத்திற்கு ஆவன செய்கிறான். தமர் வரைவு மறுப்பின் உடன்போக்கு அழைத்துச் சென்று மணம் செய்து கொள்கிறான். இவ்வகை மணத்தில் தாய்க்கு உரிமையில்லை. மிகவும் இளமைமிக்கவளாய் இருக்கும் தலைவியை உடன்போக்கில் அழைத்துச் செல்ல மறுப்பதும் தலைவனின் நற்பண்புகளில் ஒன்று.

மடலேறல்

பெண்வேண்டி முறையாகச் செல்லும்போதும் தமர் மறுப்பதுண்டு. 1. பெண்ணே விரும்பாமை, 2. தந்தை மிகுந்த பரியம் வேண்டல், 3. தமக்கு நிகரில்லை எனப் பெற்றோர் கருதுதல், 4. வேறு இடத்திலிருந்து மகளை வேண்டிவரல் ஆகிய பல காரணங்கள் இருப்பினும் பெண் விரும்பாமை ஒருதலைக் காதலாக மாறுகிறது.

"தான் காதல் கொண்ட மனிதனை இதமாக நடத்தும் பெண்ணைக் காணவே முடியாது. காதல் தீ அவளை ஆட்கொண்ட போதிலும் காதலனைச் சித்திரவதை செய்வதில் அவளுக்குத் தனியோர் இன்பம்!"[71] என்பது போலத் தன் காதலனின் உள்ள உரத்தைச் சோதிக்கவும் பெண் மணத்திற்கு உடன்படாதிருக்கலாம். காதலியின்றி வேறு எண்ணம் இல்லாத தலைமகன் மணம் மறுக்கப்பட்டால் மடலேறத் துணிதல் உண்டு. களவின் தொடக்கத்தில் குறை இரக்கும் தலைவனுக்குத் தோழி மறுக்கும்போது 'மடலேறுவேன்' எனக் கூற்றளவில் தெரிவிக்கிறான். களவின் இறுதியில் தமருடன் சென்று வரைவு வேண்டிய பின்னும் மறுக்கும்போது மடலேறவும்

செயலளவில் ஈடுபடுகிறான். காமநோயைத் தாங்கும் ஆற்றலற்ற தலைவன் அந்த இயல்பூக்கத்தால் தூண்டப்படுகிறான்.

"மாவென மடலு மூர்ப பூவெனக்
குவிமுகி ழெருக்கங் கண்ணியுஞ் சூடுப
மறுகி னார்க்கவும் படுப
பிறிது மாகுப காமங்காழ்க் கொளினே"[72]

என மடலூரும் தலைவனின் நிலையைக் குறுந்தொகை தெரிவிக்கிறது. சிறார் இழுக்கும் மடல்மா ஊர்ந்து செல்லும் அவனை இளையர் உசாவுகின்றனர்; சான்றோரை அணுகித் தன்குறையை அவன் தெரிவிக்கின்றான்.

"வருந்த மாவூர்ந்து மறுகின்கண் பாடத்
திருந்திழைக்கு ஒத்த கிளவிகேட்டு ஆங்கே
பொருந்தாதார் போர்வல் வழுதிக்கு அருந்திறை
போலக் கொடுத்தார் தமர்"[73]

என்றவாறு அவன் உறுதி வெற்றி பெறுகிறது.

"அன்புறு கிளவியாள் அருளிவந்து அளித்தலின்"[74]

என்று தலைவன் விருப்பப்படி தலைவியும் மனம் இரங்குகிறாள். கொண்ட கொள்கையில் உறுதியோடு நின்றதால் தலைவன் தன் கோரிக்கையை வென்றெடுக்-கிறான். கடினமான செயல்களை எளிமையாகக் கருதும் இம்மனப்பாங்கும் உளவியல் சார்ந்தது.

"மனிதனுடைய சமூக நடத்தைகள் இயல்பாகவே உருவானவை அல்ல; அவை கற்பிக்கப்படுகின்றன. சுற்றுப்புறச் சூழ்நிலை, அச்சூழ்நிலையை நோக்கும் கண்ணோட்டம் ( Perception ), அதனால் மனிதனிடையே ஏற்படும் எதிர்விளைவுகள் முதலியவற்றைப் பொறுத்தே இந்நடத்தைகள் உருவாகின்றன. தற்சாதிப்பு என்னும் ( Self-Assertion ) சமூக உந்து, ( Social Drive ) தன்னை

> வெளிக்காட்டும் வகையில் வெறிப்படுத்தப்படுகிறது. தன்னுடைய திறமையினை நிரூபிக்கவும், சக்திகளை விளக்கிக்காட்டவும், ஒரு தனியன் கடினமான செயல்களை மேற்கொள்ளலாம்."[75]

எனச் சமூக உளவியலார் கருதுகின்றனர். தான் நேசித்த பெண்ணை அடைய மடலேறலும், ஏறுதழுவிப் போட்டியில் வெல்லலும் சங்ககால இளைஞனின் சாதனைகளாக அமைந்தன எனலாம்.

உடன்பிறந்தார் அன்பு

குடும்பச்சூழ்நிலையில் பெற்றோர்-குழந்தை உறவு, கணவன்-மனைவி உறவு போல உடன் பிறந்தார் அன்பும் முக்கிய இடம் பெற்றுள்ளது. பிரியம் கொடுத்து வளர்க்கப்படும் சூழல் தனிமனிதனை சிறப்பான நம்பியாக மாற்றுகிறது. முதியோரை வணங்கியும், சிறியோருக்கு இரங்கியும், தன்னை அண்டினோரை ஆதரித்தும் தன் அன்பை அனைவருக்குமாக வெளிப்படுத்துகிறான். குடும்பத்தில் பிரியம் பெறாதவன் முழுமையற்ற மனிதனாகிப் பிறழ்வு நடத்தையுடையனாகிறான்.

பிரியத்திற்கான தேவை ( The need for affection )என்பது ஒரு அடிப்படை சமூக உந்து. தான் பிறருக்குத் தேவைப்படுதலைப் பெற்றிருப்பதும் அடிப்படையான ஒன்றுதான். ஒரு மனிதன் தான் யாருக்கும் தேவையில்லை என்றெண்ணும்போதும், தன்னை யாரும் நேசிக்கவில்லை என்று எண்ணும்போதும் தனது வாழ்க்கை பயனற்றது என நினைக்கிறான். தவறான வழியில் வளர்க்கப்-பட்டால் மனிதன் தன்னலம் பேணுபவனாக மாறித் தன்னை யாரும் நேசிக்காமலும், தேவைப்படாமலும் இருத்தலைக் காண்கிறான். நாம் எவ்வளவுதூரம் பிரியத்தைச் செலுத்த முடியுமோ, அவ்வளவுதூரம் பிரியத்தைத் திரும்பப் பெறவும் செய்கின்றோம். பிரியம் கிட்டாத தனியன் 'பிரச்சினைக்குழந்தை' ஆக வளர்கிறான். பிற்காலத்தில் அவன் ஓர் இளங்குற்றவாளியாகவோ ( Juvenile Delinquent ), உளவழி நரம்பு நோயாளியாகவோ மாறலாம் என்பர் சமூக உளவியலார். அப்படிப்பட்ட ஒருவனாகப் பெண்கொலை புரிந்த நன்னன்

குறுந்தொகையில் காட்டப்பெறுகிறான்.[76] முழுமையான தாயன்பு மற்றும் குடும்பத்தார் அன்பு கிடைக்கப்பெறாமல் இருப்பவர் தான் நினைப்பதைச் சாதிக்கும் மூர்க்கராக இருப்பது போல நன்னனும் இருக்கிறான். அடிமனதில் பெண் இனத்து மேல் அவன் கொண்ட வெறுப்பு, சிறுபிழை செய்த சிறு பெண்ணையும் கொலைசெய்யத் தூண்டுகிறது. சான்றோர் உரைக்கும் அறிவுரைகளோ, தந்தையின் கண்ணீரோ மாற்றமுடியாத மனத்தினன் ஆகிறான். விதிமுறைகள் மட்டுமே நிறைவேற்றப்பட வேண்டும் என்பதில் மனிதநேயம் தொலைத்தவனாக நிற்கிறான். அரசனாயினும் இவன் உளநோய்க்கு ஆட்பட்டு, புலவரால் வெறுக்கப்படும் இரங்கத்தக்க நிலை உடையவன் ஆதலை உய்த்துணரலாம்.

## தங்கையின் மனத்தில் தமையன்

அண்ணன், தங்கை ஆகிய உடன்பிறப்பு அன்பு பற்றிச் சங்க இலக்கியம் ஓரளவு குறிப்பிடுகிறது. இளம்பருவத்துத் தங்கையை அண்ணனும், ஒரு தந்தை போலப் பொறுப்புடன் பாதுகாக்கிறான். தங்கையும் அண்ணனிடம் மரியாதை கலந்த அன்பு செலுத்துகிறாள். அண்ணன் கொல்லை காக்கும்போதும், நிலத்தில் உழும் பொழுதும் தங்கை உணவு கொண்டு செல்கிறாள். திருவிழாவில் தங்கை அண்ணன் பிடித்த மீனை விற்கிறாள். காதலில் ஈடுபட்ட தங்கை, அண்ணன் காவலில் இருக்கும் பொழுது தலைவனால் அவளைச் சந்திக்க முடிவதில்லை. அண்ணனைச் சிலசமயம் ஏமாற்றி தங்கை வெளியே வருகிறாள். இருப்பினும் வீரமுழக்கமும் சினமும் உடைய தன் தமையனுக்கு அவள் பயப்படுகிறாள்.[77] தங்கை களவில் ஈடுபட்ட செய்தி அறிந்ததும் சினந்து வில்லும் அம்பும் நோக்கும் அண்ணன் தாயின் அறிவுரையால் தந்தையின் விருப்பம் அறிந்தபின் தானும் சம்மதிக்கிறான். தகுந்த மணவாளன் எனில் உடன்பட்டு மணமுடிக்கிறான். தந்தைக்கும் தனக்கும் உடன்பாடு இன்றேல், குலப்பெருமை காக்கப் போர்புரியவும், அதில் உயிர் துறக்கவும் துணிகிறான். அவனது ஆற்றலை ஊரார்,

"வாள்தக வைகலு முழக்கும்
மாட்சி யவரிவ டன்னை மாரே"[78]

"அளியர் தாமேயிவ டன்னை மாரே
செல்வம் வேண்டார் செருப்புகல் வேண்டி
நிரலல் லோர்க்குத் தரலோ வில்லெனக்
கழிப்பிணிப் பலகையர் கதுவாய் வாளர்"[79]

"கதுவாய் போகிய துதிவாய் எஃகமொடு
பஞ்சியுங் களையாப் புண்ணர்
அஞ்சுதக வுடையரிவ டன்னை மாரே"[80]

என்று மெச்சுகின்றனர். தங்கைக்கு ஏற்ற கணவன் என்று தான் நினைத்தால்,

"புரையோர் சேர்ந்தெனத் தந்தையும் பெயர்க்கும்"[81]

எனத் தந்தையையும் சம்மதிக்க வைக்கிறான். தங்கையின் மான்பிணையன்ன மகிழ்மட நோக்கு கண்டு மகிழ்கிறான். தங்கையின் காதலும் அண்ணன் அன்புக்கும், வீரத்திற்கும் உரிய மதிப்பளிக்கிறான்.

உடன்போக்கில் அழைத்துச் செல்லும்போது தமையன்மார் வரின் அவரோடு போர் செய்யாது விடுக்கிறான். தன் காதலியின் தாய் தந்தை, உடன்பிறந்தோரின் அன்பை எண்ணி, மதிப்பு தந்து மறுதரவு அழைத்துச் செல்கிறான்.

அன்புத் தாயின் வளர்ப்பில் வளரும் மகனின் உலகில் தோழமைக்கும் சிறப்பிடம் உண்டு. அகத்திலும், புறத்திலும் இடித்துரைக்கும் நட்பையுடைய நல்லவனாகத் திகழ்கிறான். அகத்தில்,

"எலுவ சிறாஅர் ஏமுறு நண்ப"[82]

எனப்பாராட்டப்பெறும் இளையோன் புறத்தில் தன் தோழனைக் காக்கப் படைக்களம் புகுதலை,

"கன்றமர் கறவை மான
முன்சமத் தெதிர்ந்ததன் தோழற்கு வருமே"[83]

எனப் புறநானூறு காட்டும்.

கடமையுணர்ந்த நன்னர் நெஞ்சத்தன் எனத் தோழியாலும், மைந்தரைப் பெற்றதால் தந்தை மகளைப் பெருந்தகை மன்னர்க்கு வரைவு நேர்ந்தான் என ஊராராலும்,[84] பாராட்டுப்பெறும் வண்ணம் மகன் பெருஞ்சிறப்புப் பெறத் தாய் அருந்துணையாகிறாள். நிரம்பிய மக்கள் இருப்பதற்கு மாட்சிமைப்பட்ட தன் மனைவியும் காரணம் எனப் பிசிராந்தையார் ஒப்புகிறார். மகன் வளர்ந்து திருமணம் முடிந்து குடும்பப் பொறுப்பு ஏற்ற பின் தாயின்நிலை சுட்டப்படுவதில்லை. நடுத்தரவயது தாண்டிய பின் கணவனின் உயர்வுகள், பிள்ளைகளின் வளர்ச்சி, உழைப்பு அவர்களின் பெருமைகள் கண்டு தன் கடமை நிறைவுபெற்றதாகக் கருதி அமைதி அடைகிறாள். கணவனும், மகனும் இருவரும் இல்லாத நிலையில் தாயின் நிலை இரங்கத்தக்கதாகிறது.

## 5.3 தாயும் மகளும்

குழந்தைகள் வளர்ப்பில் ஆணையும் பெண்ணையும் தாய் வேறுபடுத்தி வளர்ப்பது தற்காலத்தில் உள்ளதைப் போலச் சங்ககாலத்திலும் நடைமுறையில் இருந்துள்ளது. எதிர்காலக் குடும்பத் தலைவி ஆகப்போகிறவள் பெண். அதற்கேற்ப அவளைத் தயார்ப்படுத்துவது தாயின் கடமையாகிறது. உண்பதிலும், உடுப்பதிலும், விளையாட்டிலும் செல்வம் கொடுத்து வளர்க்கும் தாய், மகள் பூப்பெய்தி இளமைப் பருவத்தில் அடிஎடுத்து வைக்கும்போது மிகவும் கவனத்துடன் செயல்படுகிறாள். மகளுக்குத் தக்கபயிற்சி அளித்துக் கற்றுத் தருவதும், அவளது குறைகளைச் சுட்டிக்காட்டி திருத்துவதும் தாயின் கடமையாக உள்ளது. பெண் குழந்தைப் பிறப்பு சுட்டப்படாதது பெண்ணைச் சிறப்பாகக் கருதாத நிலை சங்கத்திலும் இருந்ததோ

என்ற ஐயம் தருவதாக உள்ளது. மகப்பேறின்றி வருந்திப் பெற்ற சிலரே, மகளைப் போற்றியுள்ளனர் என்பதற்கு,

"குன்றக் குறவன் இரந்தனன் பெற்ற
வெள்வளைக் குறுமகள்"[85]

"நல்கூர்ந்தார் செல்வமகள்"[86]

"ஈன்றாட்கு ஒருபெண் இவள்"[87]

என்பன போன்ற சில சான்றுகளே உள.

கண்காணிக்கும் தாய் மகளிடம் அன்பே உருவாக இருந்தாலும், ஆதிக்கவாதி-யாகவும் கட்டுப்படுத்துகிறாள். தாயின் கண்காணிப்பையும், அறிவுரைகளையும், கட்டுப்பாடுகளையும் இளமை பொங்கும் சுதந்திர உணர்வுமிக்க மகள் வெறுப்பது இயல்பே. தியாகம், சுயநலம், வஞ்சம், விரக்தி, தற்பெருமை முதலிய விசித்திரமான பல உணர்வுகளை வெளிப்படுத்தும் தாயின் உண்மை ஆளுமை இன்னதென அறியாத மகள், உடன்போக்கு மேற்கொள்கிறாள். தாய் அதிர்ச்சி அடைகிறாள்.

மகள் உடன்போகு முன்பும், உடன்போன பின்பும் தாயின் உள இயல்புகளை ஆராயின் பல கொள்கைகளின் கூட்டுக் கலவையாகத் தாய் இருப்பதை அறியமுடியும்.

"தாய்மை என்பது தற்காதல், பிறர்நலக்கொள்கை, வெறும் பகற்கனவு, கபடின்மை, நல்லதல்லாப் பற்றார்வம், முழு ஈடுபாடு, நன்மையில் நம்பிக்கை இன்மை ஆகிய இவற்றின் ஒரு விளங்காத கலவை"[88]

என்கிறார் The second sex என்னும் பெண்ணைப் பற்றிய உளவியல் நூலை எழுதிய சீமோன்.டி.பூவேர் என்னும் பெண் உளவியலறிஞர்.

தற்காதல் தாய்

தன்னை அதிகம் நேசிக்கும் தற்காதல் பண்பு தாய்க்கும் உண்டு. கிரேக்கப் புராணக் கதை நாயகன் நார்சியஸ் என்பான் தன் நிழலைக் கண்டு காதல் கொள்கிறான். இதனால் தற்காதல் நார்சிசம் எனப்படுகிறது. தான் எனும் உயர்வு மனப்பான்மையுடன், தன் உயிர், உடல், அழகு அனைத்தையும் நேசிக்கிறாள் தாய். அதுபோலத் தான் பெற்ற மகளையும் தன்னில் பிரியாத உடைமையாகவே நேசிக்கிறாள். தாய்மையை மதியாது தான் பெற்ற மகளே போகும்போது தற்காதல் துன்புறுத்தப்படுகிறது.

"ஈன்றுபுறந்தந்த எம்மும் உள்ளாள்"[89]

"என்னும் உள்ளினள் கொல்லோ"[90]

என்னும் அவளது சொற்கள் தன்னை நினைக்கவில்லை என்பதையே முதன்மைப் படுத்துகின்றன. தன் தலைக்கடனாக ஈன்று புறந்தந்து வளர்த்திருக்க, மகள் அதைச் சற்றும் உள்ளாது சென்றதால் தாய் வருந்துகிறாள்.

பிறர்நலக் கொள்கைத் தாய்

பிறர்நலம் பேணும் கொள்கை எப்போதும் தாய்க்கு உண்டு. ஊரார் பிள்ளையையும் ஊட்டி வளர்க்கும் அன்பினள் தாய்; தன் மகளை எப்போதும் நேசிப்பவள். தேனும் பாலும் ஊட்ட ஓடும் மகளுடன் தானும் ஓடுகிறாள்; கூந்தலை வெண்ணெய் நீவி, ஐம்பாலாக்கிப் பின்னிப் பூ முடிக்கிறாள்; அணிகள் அணிவிக்கிறாள். விளையாட அனுமதிப்பதுடன் கிளி, பூவை, வயலைக்கொடி, காந்தள் செடி இவற்றை வளர்க்கவும் தடை கூறுவதில்லை. இவ்வளவு அன்புமிக்க தாய், காதலுக்கும் அனுமதி தருவாள் என்பதை மகள் அறியாது போனாளே என்றே அந்தத்தாய் வருந்துகிறாள். தன் மனையில் அவர்களுக்கு மணம்செய்விக்கவும்,

விருந்து வைக்கவும், அவர்கள் மனைக்குரிய பெண்டாக இருக்கவும், அவர்களை எதிர்கொண்டழைக்கவும் விழைகிறாள்.

பகல்கனவு காணும் தாய்

"ஒருமனிதனுடைய தன்மையை அறிந்து கொள்வதற்கு அவன் காணும் கனவுகள் பெரிதும் துணைபுரிகின்றன" என்பது உளவியலார் கருத்து.[91] மகளைப் பற்றியும், அவள் திருமணம் குறித்தும், பல கனவுகள் தாய் காண்கிறாள். அதை முறித்துவிட்டு மகள் உடன்போனாள். தாயை அயலில் உள்ள பெண்டிர் தேற்றுகின்றனர்.

"ஒருமகள் உடையேன்; அவளும் சென்றாள்;
அவளை உள்ளின் உள்ளம் வேகும்;
எப்படி இத்துயரைத் தாங்குவேன்?"[92]

என்கிறாள். மகள் ஆடிய பாவை, பந்து, கழங்கு, நொச்சி, தெற்றியைக் காணும்தோறும் கலங்கி அழுகிறாள். அவளது கனவெல்லாம் பகல்கனவாக மாறிவிட்டது.

கபடில்லாத தாய்

உடன்போக்கு அறநெறியே என்னும் தாய் தன்மகளை வாழ்த்துகிறாள். தன்னை விட்டுச் சென்றது பற்றிச் சிந்தியாமல், பாலைநிலத்தில் மென்பாதங்கள் ஒன்றினவோ என மகளின் மென்மைக்கு இரங்குகிறாள்; பாலையில் மழை பொழிந்து நிலம் தண்ணியதாகுக என வேண்டுகிறாள். தளிரன்ன தன்மகள், பாலையின் உவர் நீரையும், கலுழி நீரையும் எங்ஙனம் குடிப்பாள் என வருந்துகிறாள். தலைவன் தாய் வீட்டில் சிலம்புகழீஇ நோன்பு நடந்தாலும் தன்மனையில் வதுவைமணம் நடக்கட்டும் எனத் தலைவன் தாயிடம் கூறும்படி கபடமின்றி வந்து கூறுவோரிடம் வேண்டுகிறாள்.

## நல்லதல்லாப் பற்றார்வம் உள்ளதாய்

மகளை முழுதும் நம்பும் தாய் களவைச் சிறிதும் அறிவதில்லை. மகள் வெளியில் சென்றுவர முழு அனுமதி தருகிறாள். அம்பல் பெண்டிர் உரைக்கும் பொழுது தன்மகளை நம்புவதால் அவளிடம் உண்மையா என விசாரிக்கவும் நாணுகிறாள். மகளைத் தழுவும்போதும், அவள் தனக்கு வியர்க்கிறது என்னும்போதும், தனிமையில் துயில வேண்டித் தாயை விலக்கும்போதும் அதன் காரணத்தை அறியாது இருக்கிறாள். தலைவி சொல்லும் பொய்களை எல்லாம் நம்புகிறாள். மகளின் மெலிவு முருகனால் வந்தது என்று நம்பி வெறியாடல் நடத்துகிறாள். வெறியாடல் நிகழ்த்தின் அணங்கு ஏறிய மகளின் மெலிவு நீங்கும் என நினைக்கிறாள். பிறழ்நிலை உளப்பாங்கில் அணங்கால் வருந்தும் பெண்ணிற்கு வேலன் தக்க உளநோய் மருத்துவனாகத் திகழமுடியும் என்றும் நம்புகிறாள்.

## முழு ஈடுபாடுடைய தாய்

தனது நேரம், சக்தி அனைத்தையும் தாய் மகளுக்காகவே செலுத்துவதில் முழு ஈடுபாடு கொள்கிறாள். மகள் விரும்புவோனுக்கே அவளைத்தர விரும்புகிறாள். மகள் நலனை குறிக்கோளாய் ஓம்பிக் காக்கிறாள். அறத்தொடு நின்றபின் தானும் வரைவு உடன்படுவதுடன், தந்தை, தன்னையரையும் உடன்படச் செய்கிறாள். மகள் களவு மேற்கொளினும் தாய் ஐயுற்று அலைக்கமாட்டாள். உடன்போக்கு சென்றாலும் பின்தேடிச் செல்வாள்; அழைத்துவர விரும்புவாள். மணமுடித்த மகள் முதலில் தன் வீடு வருவாளா எனக் குறிகேட்பாள்; திரும்பிவந்த மகளை ஊரை எல்லாம் அழைத்துக்காட்டி மகிழ்தலும் இத்தாயின் இயல்பாகும்.

## நன்மையில் நம்பிக்கை இல்லாத தாய்

எதற்கெடுத்தாலும் குற்றம் கண்டுபிடித்தல் இந்தத்தாயின் இயல்பு. ஒரு செயலில் நன்மை உண்டு என்பதை ஏற்றுக்கொள்ளாதவள் இந்தத் தாய். களவு உண்டு என்று அலர் எழுந்ததும் இற்செறிக்கிறாள். மகளது வேறுபாடு கண்டு

யிரட்டுகிறாள். எப்படி எல்லாமோ பாதுகாத்தும் உடன்போய்விட்ட மகள்மேல் சினம் வருகிறது. சிறுவன் கன்னி, மாயக்குறுமகள் என்ற அவளைத் திட்டுவதுடன் தலைவனையும் பொய்யன், அறிலாளன், வன்கண்காளை என்கிறாள். அன்பு மகளைப் பிரிந்து தான் துயர்ப்படல் போலத் தலைவனின் தாயும் பட வேண்டும் எனச் சினம் கொள்கிறாள். உயிரற்ற விதியைக் கூடக் காட்டுத்தீயில் அழியட்டும் என்கிறாள்.

கொடுமைக்காரத் தாய்

தான் இன்புற்ற அனைத்தும் மகளும் அடைய நினைப்பவள் தாய். அதே சமயம் தான்பட்ட துயரை மகள்படக்கூடாது எனவும் எச்சரிக்கிறாள். அறிவர், மற்ற பெரியோரை வினவித் தக்க இடத்தில் மகளை மணம் முடிக்க விரும்புகிறாள். அதற்குள் மகள் அவசரப்பட்டு ஒருவனைக் காதலிப்பதும், அவன்பின் ஓடுவதும் தாய்க்குப் பிடிப்பதில்லை. கணவன் பரத்தையிடம் போவதால் ஏற்படும் ஏமாற்றம் தன்பாலை ( same sex ) அதிகம் நேசிக்கச் செய்கிறது. நிறைவற்ற இல்வாழ்வில் ஏற்பட்ட மனமுறிவுக்கு ( Frestration ) ஈடுசெய்ய மகளைப் பயன்படுத்துகிறாள். மிகுந்த அக்கறை காட்டும் அதேநேரம் "இளமைப்பருவம் அடைந்தும் பெண் இயல்புடன் அடக்கத்துடன் இல்லாமல் இன்னும் ஓடி ஆடிப் பந்தாடுகிறாயே" என்றும் திட்டுகிறாள். நின் பெண்மை அழியட்டும் என்னும் குறிப்பில்,

"பிதிர்வை நீரை பெண்ணீ றாகென"[93]

என்று சாபமும் தருகிறாள்.

சிறுகோலால் அடிக்கிறாள்; ஐம்பாலான கூந்தலைப் பற்றி அடிக்குங்கோலும் சிதையும்படி, மகளின் முதுகில் நையப் புடைக்கிறாள். அலர் கேட்டதும் சினக்கிறாள். வெளியில்விட மறுக்கும் நிரயநெஞ்சத்து அன்னை ஆகிறாள்.

அமரா முகம் கொண்ட அறவில் யாயாக இருக்கிறாள். இத்தகைய கொடுமை-களைச் செய்யும் தாயைப் பிரியும் மகளுக்குத் தாயின் மன உணர்வுகள் புலப்படுவதில்லை.

தாயின் நிழல்

தாய் மகளின் செயலை வெறுக்கிறாள்; மகளுக்காக இரங்கும் அன்பும் அவள்பால் உள்ளது. வெறுப்பு அன்பின் முறிவுப் பண்புக்கூறு. ஒரு நாணயத்தின் இருபக்கங்கள் போல அன்பும் வெறுப்பும் அமைகின்றன. மகள் தேர்ந்தெடுத்த கணவனைத் தனக்குப் பிடிக்காவிடினும், தாய் அவனை வாய்க்கு வந்தபடி திட்ட முடியாது. மனதில் அவனை வெறுக்கும் தன்மை, தன்னை வெறுப்பதில் உருக்-கொள்கிறது. இது தாயின் நிழல் எனப்படுகிறது.

> "தனி ஒருவர் நனவிலியில் காணப்படும் நமது மறுகூறு நிழல் என (Yung) யுங் கூறுகிறார். நிழல் என்பது நம்மில் தாழ்தரம் (Inferior being of ourselves ) நனவில் நாம் செய்ய அனுமதியாதவை நிழல் பகுதியாகிறது. சான்றாக நாம் ஒருவரை விரும்பாவிட்டால் அதை வெளிப்படையாகக் கூறுவதில்லை. ஆனால் அதற்குப் பதிலாக நம்மையே குறைகூறிக் கொள்வது, சமூக நிலைகளுடனும் நமது இலட்சிய ஆளுமையுடனும் ஒத்துவராத நாகரிகமற்ற விருப்பங்கள், உணர்ச்சிகள் இவற்றை நாம் மறைக்க விரும்புகிறோம். பிறருக்கு வெளியிட விரும்பாத அல்லது நமக்கே தெரிய விரும்பாதவை எல்லாம் இந்த நிழல் என்பதன்பாற் படும்" [94]

என்பர் ஆய்வாளர் திருமதி. தேவகிருபை தியாகராசன். இதன்படி தாய் 'மகள் சென்ற பின்னும் இறவாத என் உயிருக்கு நொந்தேன்',

"மகளை அடித்த என் கை துன்பமடையட்டும்'

'என் உயிர் பறிக்காத கூற்று சாகட்டும்' [95]

என அழுதுபுலம்பித் தன் வெறுப்பைப் பிறரறியாவண்ணம் வெளியிட்டுத் துயர்தணிகிறாள்.

"நல்ல மாப்பிள்ளை கிடைக்கப் பெற்றவள்
ஒரு மகனை அடைந்தவள்; தீய மாப்பிள்ளை
கிடைக்கப் பெற்றவள் ஒரு மகளை இழந்தவள்"

என்பது பிரெஞ்சுப் பழமொழி. [96] மருமகனைப் பெற விரும்பும் தாய், தான் சம்மதிக்கும் மாப்பிள்ளையை மணக்கும் பெண்ணையே விரும்புகிறாள். அறத்தொடு நின்று ( Marriage counselling ) தன் விருப்பம் கேட்கும் மகளுக்கு, அந்த மணம் நடக்கத் துணைசெய்கிறாள்.

உடன்போக்கு சென்ற பின்னும் மகளை மறக்க இயலாத தாய் அவளைக் கனவிலேனும் காண விழைகிறாள். ஆனால் உறக்கம் வருவதில்லை.

"பெரும்பான்மையான கனவுகள் அண்மையில் உண்டான மனப் போராட்டங்களையே அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன"

"ஒருவனுடைய வாழ்க்கையையே கனவு பிரதிபலிக்கிறது" [97]

என ரிவர்ஸ், ஆட்லர் என்போர் தெரிவிக்கின்றனர். தாயின் மனப்போராட்டத்தின் காரணம் மகளே. அவளை கனவிலேனும் காண நினைக்கும் தேவைக்கும், கண் உறங்க முடியாத நிலையில் மெய்ம்மை ஏற்படுத்தும் கட்டுப்பாட்டிற்கும் இடையிலான நிலையில் நனவுப் போராட்டத்திற்கு (Concious conflict ) ஆட்படுகிறாள் தாய்.

பெண்ணைப் பெற்ற தாயர் மனம்

உடன்போக்கு வேறுவழியற்ற நிலையில் சென்றால் அறநெறியே! அன்புமிக்க தனக்கு அஞ்சிப் போகத் தேவையில்லை என்பது தாயின் எண்ணம். இந்தத் தாய்படும் துயரினை அவளைப் போன்ற பெண்ணைப் பெற்ற தாயரே அறிவர். உடன் போக்கில் செல்லும் மகளைக் கண்டு இடைச்சுரத்துத் தாயர்,

"யார்கொல் அளியர்"[98]

"நல்லோர் யார்கொல் அளியர்"[99]

"புனையிழை மகளிர்ப் பயந்த
மனைகெழு பெண்டிர்க்கு நோவுமார் பெரிதே"[100]

என்று தாய்க்காக இரங்குகின்றனர். வீட்டுக்கு வீடு வாசற்படி என்பதுபோல இவ்விளம் பெண்ணைப்போலத் தன்மகளும் ஒருநாள் தன்னை மதியாது உடன்போகத் துணிந்துவிடுவாளோ என்ற அச்சம் சங்ககாலத்தாயர்க்கு ஏற்பட்டது. அந்த அச்சம் சற்றும் மாறாது இக்காலத்துத் தாயர்க்கும் இருத்தலைத் தற்கால இலக்கியங்கள் சுட்டுகின்றன.

"ஐயோ, இதெல்லாம் கேள்விப்படும்போது வயத்துல
புளியைக் கரைக்கிறது. எங்க விதி என்தலையில்
கல்லைத் தூக்கிப் போட்டுடுமோன்னு இருக்கு.
யார் கண்டது? இதெல்லாம் வளர்ந்து பெரியவளாகி
ஒருநாள் எவனோடாவது வந்து நிற்குமோ
என்னவோ?"

என்று தன் மூன்று வயது மகளைக் குறித்துப் புலம்பும் தாயை 'இலட்சியப் பெண்' என்னும் திங்களிதழ் மூலம் எடுத்துக்காட்டுகிறார் திருமதி. இராதா செல்லப்பன்.[101]

அலரில் மகளின் நிலை

பெண்ணுக்குப் பெண்ணே எதிரி என்பதாக மகளின் களவை வெளிப்படுத்து-கிறவர்கள் பெண்களே.

"பெண்களே பெண்களைப் பற்றிப் புறம்பேசுவதில் பெரிதும் ஆர்வம் காட்டுகின்றனர். பொதுநோக்கும் கல்வி அறிவும் பெண்களிடம் செழித்து வளராமையே இப்பிரச்சினைக்கு வாய்ப்பாக அமைந்து விடுகிறது"[102]

"பெண்களின் முதல்பயம் பெண்கள்தான். பெண்களைப் புறக்கணிக்கிறதும் பெண்கள்தான். பெண் ஒரு முழுமையான பிரகிருதின்னு எந்தப் பெண்ணும் பார்க்கிறதில்லை. ஆணோடசேர்த்துப் பெண்ணைப் பார்க்கறது பெண்கள்தான்"[103]

என்னும் ஆய்வாளரின் கருத்து என்றுமுள்ள உண்மையாகிறது. மூக்கின் உச்சிச் சுட்டுவிரல் சேர்த்து அம்பல் பெண்டிர் அலர் தூற்றும் பொழுது பெண்களில் சிலர் அதற்கு அஞ்சுகிறார்கள். திருவள்ளுவரின் தலைவியைப் போலச் சிலர் அலருக்கு அஞ்சாதும் இருக்கிறார்கள்.

தனது காமம் தாய்க்குத் தெரியக்கூடாது எனப் பெண்மை இயல்புக்கத்துடன் நினைக்கும் மகள் தாயின் கட்டுப்பாடுகளை முயன்றவரை எதிர்க்கிறாள். குடும்பம் உலகத்தைக் குடும்பமாக நினைக்கும் ஆற்றலைத் தராமல் பெண்களை மேலும் சிறைற்றுத் தவளைகளாக ஆக்கும் அநுபவத்தையே தருகிறது. இந்நிலையில் தாயை அவள் கட்டுப்பாடுகளை எதிர்த்து வாழ்வதன் மூலம்தான், போராடுவதன் வழியேதான் பெண்மை தனது நிரந்தரமான பிரச்சினைகளைத் தீர்க்கும் முடிவான பரிகாரங்களைத் தேடிக்கொள்ள முடியும் எனக்கருதும் தற்காலச் சிந்தனையாளர்[104] போலச் சங்கத் தலைவியும் கருதுகிறாள்.

தலைவன் தேர்வந்தது என்று தானே அலைப்பதுடன், தேர்மணி ஒலித்ததும் தையன்மார்க்கும் கூறி ஏதம் விளைவிக்கும் அன்னையை அறனில் அன்னை என்பதில் தவறில்லை. விளையாடவும் வெளிச்செல்ல அநுமதியாத மனம், சுடுசொல் கடுங்குரல், இற்செறிப்பு, கடுங்காவல் இவற்றை விடுதலையுணர்வுமிக்க மகளால் தாங்க முடிவது இல்லை. பெற்றோரின் அதிக்கத்திலிருந்து விடுபட விரும்பும் அவள்

மனத்திற்குத் தனித்தியங்கும் உறுதியும் இல்லை. தாயின் மேற்பார்வைக்கும் தனது விடுதலை உணர்வுக்கும் இடையே போராட்டம் நடக்கிறது. அதன் விளைவே தாயின்மீது அடங்காச் சினம். 'அறனில் அன்னை நன்னன்போல நிரயம் புகட்டும்' என்று தானும் சாபம் தருகிறாள். அறத்தொடு நின்றபின் மணம் செய்து தரத் தாய்முன் வந்தும், அவள் மணம் செய்து தருவாளோ? என ஐயம் ஏற்படுவதும் மகள் மனதில் ஏற்படும் உணர்வு ஊசலாட்டத்தினால்தான் எனலாம்.

இற்செறிப்பால் விடுதலையையும், பசலைநோயால் உடல்நலத்தையும், தலைவனைக் காணாததால் இளமையின் உயிர்ப்பையும் இழந்து நிற்கிறாள் தலைவி. அன்னைக்குத் தெரியாமல் உடன்போக்கு செல்லும்போது மூன்றையும் திரும்பப் பெறுகிறாள்.

> "எற்கெடுத்த அறனில்யாய், தன்மனையில் தானே
> இருக்கட்டும்"[105]

என்று அன்னையைத் திட்டவும் செய்கிறாள்.

<u>அன்னையைப் பாராட்டும் மகள்</u>

தாயின் அன்புணர்ந்து அவளைப் பாராட்டும் அருமை மகளையும் காணமுடிகிறது. தலைவனது மலைக்காந்தள் செடியை நட்டுவளர்க்க மறுப்பேதும் சொல்லாத அன்னை 'உயர்நிலை உலகம் பெறட்டும்' என வாழ்த்துகிறாள்.[106] கொடிதறி பெண்டிர் அலர்கூறினும் அன்னை அதை நம்பவில்லை. தன் மகளை நம்பும் தாயின் குணத்தை மகளும் விரும்புகிறாள். விளையாடச் சென்ற மகள் நேரம் கழித்து வரும்போதும் அன்னை ஐயுறுவதில்லை. மெல்லிய இனிய கூறி மகளுக்கே ஆறுதலாக இருக்கிறாள். வரைய வரும் தலைவனைப் பற்றி மகளுடன் அவளுக்குள்ளதுபோலத் தன் ஆர்வத்தைத் தானும் தெரிவித்துக் கொள்ள ஓடிவரும்தாய் 'அமிழ்து உண்டு பெரும்பெயர் உலகம் பெறட்டும்'[107] என்று வாழ்த்துகிறாள் மகள்.

ஊரார் பழிஏற்கும் அன்னை

அன்னைக்கு அடங்கிய மகளாயினும் அழகுள்ள பெண்ணாய் இருப்பின் ஊரார் பழியை ஏற்கவேண்டியுள்ளது. அரசர் பெண்வேண்டி வர, தமக்கு நிகரில்லை எனத் தந்தை மறுக்கப் போர் எழுகிறது. மரம்படு சிறுதீப் போலத் தன் அழகால் ஊரை அழிக்கும் அணங்கானாள் பெண்.

"முகைவளைப் பேந்திய முற்றா விளமுலைத்
தகைவளர்த் தெடுத்த நகையொடு
பகைவளர்த் திருந்தவிப் பண்பில் தாயே"[108]

"குவளை யுண்கண் இவளைத் தாயே
ஈனா ளாயின ளாயின் ஆனாது"[109]

என வீரமிக்க கணவரும், மைந்தரும் போர்செய்ய அழகுமிக்க மகளைப் பெற்றதற்காக அன்னை பழிக்கப்படுகிறாள்.

பரத்தையின் தாய்

பரத்தையும் தன் மகளை நன்கு பேணுகிறாள். பரத்தை தன்குலத் தொழிலில் இருந்து விடுபட நினைத்தாலும் அவளைப் பெற்றதாயே அவளுக்குத் துணைநிற்காத சூழலைத் தற்காலத்திலும் காணமுடிகிறது. சமுதாயமும் குடும்ப வாழ்க்கை வாழ அனுமதிக்கவில்லை. சட்டங்களும் சமுதாயமாற்றத்தை ஏற்படுத்த வில்லை என்பது தற்காலச் சூழ்நிலை, எனில் பரத்தைமையை ஆதரித்த சங்கச் சமுதாயத்தில் தாய் மகளை அத்தொழிலில் ஈடுபடுத்த என்றே சிறப்பாக வளர்த்திருப்பாள் எனக் கருத இடம் உண்டு.

"ஆயமும் அயலு மருளத்
தாயோம் பாய்நலம் வேண்டா தோளே"[110]

"பிடிபயின்று தரூஉம் பெருங்களிறு போலத்
தோள்கந் தாகக் கூந்தலிற் பிணித்தவன்

மார்புகடி கொள்ளே னாயின் ஆர்வுற்று...
வருந்துக தில்லயாய் ஓம்பிய நலனே"[111]

என்று பரத்தையும் தன்தாய் ஓம்பிய அழகைப் பயன்படுத்தி வெற்றி பெறுகிறாள்.

உடன்பிறந்தார் மேல் அன்பு

அண்ணன் தங்கை போலப் பெண்ணுடன் பிறந்த சகோதரி குறித்த செய்திகள் இல்லை.

"நும்மினும் சிறந்தது நுவ்வை யாகு மென்
றன்னை கூறினள் புன்னையது சிறப்பே
அம்ம நாணுதும் நும்மொடு நகையே"[112]

என நற்றிணைத் தலைவியின் கூற்றில் தனக்கு மூத்தவள் என்ற குறிப்பு வருகிறது. தாய் இளவயதில் மறைத்து விளையாடிய புன்னைக்காயால் புன்னைமரம் தோன்றி தாயின் மகளாக வளர்ந்துள்ளது. திருமணமானபின் பிறந்த மகளிடம் புன்னைமரம் அவள் தமக்கை எனக்கூறப்பட்டது. அஃறிணை ஆயினும் அம்மரத்தை உயிருள்ள சோதரியாகவே எண்ணி வருகிறாள் தலைவி. அம்மரத்தடியில் தனது காதலனுடன் நகைத்து விளையாடிப் புணர நாணுகிறாள் நங்கை. பிறர்புணர்வு கண்டு மகிழலும், பிறர்காணப் புணர்ந்து மகிழலும் பிறழ்நிலை நடத்தையாகும். தலைவி அதை உணர்ந்து தன்னைச் செம்மைப்படுத்திக் கொள்கிறாள். சகோதரியின்மேல் வைத்த அன்பும், மதிப்பும் இதில் புலப்படும். பாரிமகளிர் இருவரும் கருத்தொருமித்த சகோதரிகளாய் விளங்கியதைப் புறநானூறு வழி அறியமுடிகிறது.

அன்னை தன் மகளை என்றும் நேசிப்பவள். களவு வாழ்வில் மகள் மேற்கொள்ளும் முயற்சிகளுக்கு எதிர்நடவடிக்கை எடுப்பதும் மகள்மேலுள்ள அன்பு கருதியே. கற்பு வாழ்வில் ஈடுபட்டதும் மகளும் தாய் அன்பை உணர்கிறாள்.

தாயும் மகப்பெற்ற தன் மகளை நேரில் சென்று கண்டு வாழ்த்தி மகிழ்கிறாள். மங்கல மடந்தையாய் மனை பொலியச் செய்யும் தன் மகளின் நிறைவில் தாலும் நிறைவடைகிறாள். பிறகு மகளது வாழ்வில் தாயின் இடம் சிறிது சிறிதாகக் குறைந்து பிடிப்பற்றுப் போகிறது.

## 5.4 தாய் தந்தையரும் சேயும்

சேயின் சிறந்த எதிர்காலத்திற்குப் பெற்றோரே காரணம். தாயோ அல்லது தந்தையோ அற்ற குழந்தைகள் சமுதாயச் சிக்கல்களுக்கு ஆட்படுகின்றனர். நல்லகுடும்பச் சூழ்நிலையில் பிறக்கும் சேயே வரவேற்கப்படுகிறது. பரத்தையர் குழந்தைக்கு தந்தை உரிமை இல்லை. அதுபோல் கற்புக்கு முன் களவில் குழந்தை பிறப்பதையும் சமுதாயம் ஏற்பதில்லை. களவில் மெய்யுறு புணர்ச்சி உண்டு என்பதைப் பல பாடல்கள் தெரிவிக்கின்றன.

"தான்செய் குறியில் இனிய கூறி
ஏறுபிரி மடப்பிணை கடுப்ப வேறுபட்டு
உறுகழை நிவப்பின் சிறுகுடிப் பெயருங்
கொடிச்சி செல்புறம் நோக்கி
விடுத்த நெஞ்சம் விடலொல் லாதே"[113]

என்னும் தலைவன் கூற்றும்,

"... துறைவனோ டொருநாள்
நக்கு விளையாட லுங் கடிந்தன்
றைதே கம்ம மெய்தோய் நட்பே"[114]

என்னும் தலைவியின் கூற்றும் களவில் புணர்ச்சிக்குப் பின் தோன்றிய மெய்வேறுபாடு- களைக் குறித்தன. தொல்காப்பியர் கூறும் புணர்ச்சிக்குப் பின்தோன்றும் மெய்ப்பாடுகளில் 'தெரிந்துடம்படுதல், திளைப்புவினை மறுத்தல், கரந்திடத் தொழிதல், கண்டவழியுவத்தல், கலங்கி மொழிதல்' ஆகியன சிறப்பாக

மறைவெளிப்பட உதவுகின்றன. கலங்கி மொழிதல் பிராய்டின் நோக்கில் ( Slips of the Tongue ) நாக்குழறல், சொற்களை மறைக்க முயலல், தெற்றுதல் ஆகியனவாம், உள நோயாளிகளின் உள்ளத்தில் மறைந்துள்ள உண்மையை வரவழைக்கத் துணைபுரிபவை இவை. களவுக் கன்னியின் காதல் வாழ்வைத் தாயர் இதன் மூலமும் அறிந்து கொள்கின்றனர்.

தலைவன் சூள் பொய்த்தல்

களவுக்காலத்து மெய்யுறுபுணர்ச்சி, தாயாரும் தன்மையைத் தனக்கு வழங்குமுன்னர் மணம் நடக்க வேண்டும் என்னும் தலைவியைச் சங்க இலக்கியம் காட்டுகிறது. களவுத் தலைவன் பொய்க்கவும் நேருகிற சூழலில் களவு மணம் பெண்ணுக்கு உதவுவதில்லை.

"யாரு மில்லைத் தானே கள்வன்
யானது பொய்த்தால் யானெவன் செய்கோ
தினைத் தாள் அன்ன சிறுபசுங் கால
ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்
குருகு முண்டுதான் மணந்த ஞான்றே"[115]

என்னும் தலைவி, தலைவன் வாராது பொய்த்தால் சாவதைத் தவிர வேறுவழி இல்லை என்கிறாள். தான் உற்ற சூள் பேணான் என்றறிந்தும் அவன் தானே வந்து அருளுவதற்காகக் காத்திருக்கிறாள்.

"களவியலுக்கு உட்பட்ட தலைவி ஒவ்வொரு வினாடியும் செத்துப் பிழைத்துக்கொண்டு இருந்திருப்பாள் என்றே ஊகிக்கலாம். ஏனெனில் 'வரைவு கடாதல்', தோழி வற்புறுத்தல் ஆகிய செய்திகள் தலைவன் பொறுப்பற்று விட்டுப் போய்விடலாம் என்பதையே வலியுறுத்துகின்றன."[116] என்கிறார் இராஜம்கிருஷ்ணன்.

தலைவனிடம் தோழி "சிறுநனி வரைந்தனை கொண்மோ" [117] என்று வற்புறுத்தலும்,

"நயவா யாயினும் வரைந்தனை சென்மோ
கன்முகை வேங்கை மலரும்
நன்மலை நாடன் பெண்டெனப் படுத்தே" [118]

என்று கெஞ்சுதலும் மகப்பேறு குறித்த சமுதாயத்திற்கு அஞ்சிய தன்மையைக் காட்டும். களவிற்கு இரண்டு திங்கள் என இறையனாரகப்பொருள் வரையறுத்ததும் இதன் தொடர்பானதே எனக்கொள்ளலாம். ஆயின் தலைவன் பொய்த்தபின் தலைவியின் நிலை குறித்தும் களவில் மகப்பேறு குறித்தும் சான்றுகள் இல்லை.

தந்தையும் தாயும் சேயும்

தலைவனை மணந்து மனைக்கிழத்தி ஆனதும் தாய்மையை மிகவும் விரும்புகிறாள். பரத்தை வீட்டில் இருக்கும் தலைவனைப் பூப்புக்காலத்தில் வரவழைக்கத் தோழியை அனுப்புதல் அவளுக்கு நாணம் தருகிறது. உயர்வு மனப்பான்மைமிக்க தலைவிக்கு இது இழிவாகப்படுகிறது. தலைவன் தன் பொறுப்புணர்ந்து மனை மீள்கிறான். மகப்பேறு வாய்ந்த தன் மனைவியை நன்கு கவனிக்கிறான். குழந்தையுடனும், மனைவியுடனும் கூடிக் கலந்து விளையாடி மகிழ்கிறான். விலங்குகளிடத்தும் குடும்பப் பாசத்தைக் காண முடிகிறது. ( Animal Psychology ), பறவைகளும் இரை தேடித் தம் பார்ப்பிற்குத் தருதலை இயல்பூக்க நடத்தையியல் எனலாம். (Instinctive behaviour of Birds ).

விலங்குகள் தம் குட்டிகளுடன் வாழும் காட்சியைக் காணும் தலைவனும் அதுபோன்று நடந்து மகிழ்கிறான். யானைதன் சுற்றத்துடன் திரிந்து மூங்கில் முளை, தழையைப் பறித்து உண்பிக்கும். பசுக்கள் அருந்த எனக் கோவலர் வெட்டிய கூவலில், கன்றும் பிடியும் நீர் உண்ண வேண்டிக் களிறு அழைத்துவரும்.

வெள்ளத்தில் செல்லும்போது ஆழம் பார்த்து அழைத்துச் செல்லும்; ஈன்ற மடப்பிடி கன்றுடன் களிறுகாப்பவதியும். தாயைத் தழுவிய தந்தை மார்பில் புதல்வன் ஊர்வது போலக் கடுஞ்சூல் மடப்பிடியைத் தழுவிய வேழத்தின் கன்று அதன்மேல் ஏறி விளையாடும். தந்தை மார்பில் புதல்வன் கிடப்பது கண்டும், தன்னோடு சேர்ந்து மகனைத் தழுவும் தந்தையைக் கண்டும் மனைவி மகிழ்வது ஐங்குறுநூற்றுக் குடும்பக் காட்சிகளில் ஒன்று.[119]

ஆண் ஆமையின் அடைக்காத்தலைத் தொடர்ந்து பிறக்கும் குட்டிகள் தாய்முகம் பார்த்து வளருகின்றன. மான், இரலையுடனும் மறியுடனும் நிழலில் வதியும்; விளையாடும்; கார்காலத்தில் நீரும் நிழலும் ஒரே இடத்தில் கிடைக்க அங்கு விளையாடி மகிழும். மறி இடைப்படுத்த மான்பிணை போலக் குழந்தை நடுவில் கிடக்க, மகனும் மருமகனும் துயில்வது செவிலியின் மனம் குளிரும் காட்சியாகும்.[120]

காட்டில் ஆமாவும் வீட்டில் பசுக்களும் கன்றுடன் உறங்குகின்றன. பல குட்டிகளுடைய பன்றியும் சேற்றிலாடித் திரிகிறது. காகம் மனையில் தரும் பலி உணவையும் சிளையை அழைத்து உண்ணும். குரும்பூழ்ப் பறவை, பறத்தற்கியலாத தன் பிள்ளையைத் தழுவிக்கொண்டு காட்டில் தங்கும். பூனை தன் பிள்ளைகளுடனும் நரி இணையுடனும், முயற் பறழுடனும் காட்டில் சேர்ந்து திரிகின்றன. பெரிய கரடி குட்டியுடனும், பிணவுடனும் காட்டில் திரிந்து இருப்பைப் பூக்களைத் தின்று மகிழும். அதைக் காணும் தலைவன் தன் மனைவி, மகவு நினைந்து வீடு திரும்புகிறான்.[121]

தாய் இறப்பில் சேய்

அன்புநிறைந்த பெற்றோரின் அண்மை சேயை மகிழ்விக்கும். தாய் அல்லது தந்தையின் பிரிவு சேயின் உளநலத்தைப் பாதிக்கும். மறவர் வெட்டிய குழியில் பிடி வீழ்ந்துவிடக் களிறு கதறுகிறது. குழவியோ ஊருக்குள் வந்து எருமைப்பாலைப் பருகுகிறது. தாயின் குறுமுலைக்கு அலமரும் வெண்மறிகள் குரங்குடன் விளையாடுகின்றன.

கோவலராலோ, வெட்சிமறவராலோ பிரிக்கப்படும் கன்று கண்ணீர்விட்டு அழுகிறது. மறவரால் அம்புபட்டு மான் இறக்க, தாய் இறந்ததை அறியாத இரட்டைக் குட்டிகள் விளையாடுகின்றன. தந்தை மானோ அவற்றை நினைந்து உணவும் நீரும் பருகாது வருந்துகிறது. தாயற்ற பன்றிக்குட்டியைத் தந்தை வளர்க்கிறது.[122]

சேய் இறப்பில் தாய்

தன் கல்லாப் பார்ப்பு முழையில் விழத் தாய்க் குரங்கு அழுகிறது; பிள்ளை செத்ததைப் பிறர் வந்து ஆறுதல் படுத்தியும் வெள்ளாங்குருகின் துக்கம் தீரவில்லை.[123]

தந்தை பிரிவில் தாய்

களிற்றைப் புலி தாக்க, கன்றரைப்பட்ட பிடி கிளையைக் கூவி அழுகிறது. புலி களிற்றைக் கொன்றுவிட, பிடி கன்றணைத்துத் தீராத புண் உற்றாரைப் போல வருந்தும். கன்றுக்கு மட்டும் உணவூட்டிவிட்டுத் தான் மெலிந்து நிற்கும் பிடி, துயர் தாங்காது அழும்; சிறுவர் வீசிய வலையில் தந்தைச் சேவல் விழுந்துவிடுகிறது. பெடைக் கொக்கு தானும் இரை உண்ணாது தன் பைதற் பிள்ளையைத் தழுவிக் கொண்டு அலறுகிறது. ஆண்புலி காயம் அடைந்து செயலற்றிருப்பினும், சூலுற்ற பெண்புலி அதனைக் கவனமாகப் பாதுகாக்கிறது. கலைமான் புலியால் சாக, பிணை, மறியுடன் அடகு தின்று வாழ்கிறது. இவற்றால் தந்தை பிரிவு தற்காலிக-மாகவோ, நிரந்தரமாகவோ ஏற்பட்டால் தாங்கமுடியாத துயரத்திலும் மகவைக்காக்கும் தாய்மை இயல்பூக்கம் புலப்படும்.[124]

தாய்மையை வென்ற கணவன் அன்பு

தாய்மை இயல்பூக்கத்தையும் மீறிய கணவன் மீது கொண்ட அன்பினால் தற்கொலை செய்துகொள்ளும் குரங்கின் செயலைக் குறுந்தொகை காட்டுகிறது.

குழந்தை இருப்பதால் அதைக் காக்கும் கடமை இருந்ததைக் குரங்கு மறக்கவில்லை; தன் கிளையிடம் குட்டியை ஒப்புவித்தது; சுற்றத்தார் பாதுகாப்பார் என்ற உணர்வு கொண்டு மலைமீதிருந்து விழுந்து தற்கொலை செய்துகொண்டது.

"கருங்கட் டாக்கலை பெரும்பிறி துற்றெனக்
கைம்மை யுய்யாக் காமர் மந்தி
கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி
ஓங்குவரை யடுக்கத்துப் பாய்ந்துயிர் செகுக்கும்"[125]

என்னும் கடுந்தோட்கர வீரனின் இப்பாடல் பல்வேறு உளவியல் கருத்துக்களை உள்ளடக்கியுள்ளது.

மனிதன் தனிம வாழ்க்கையில் ஏற்படும் துன்பத்தைத் தவிர்ப்பதற்காகத் தற்கொலை புரிந்தால் அது பழித்தற்குரியதன்று; கடமைகளை நிறைவேற்றிய பின்னர் சாதலும் வாழ்தலும் ஒன்றே என்னும்போது தற்கொலையும் செய்து-கொள்ளலாம் என்ற குறிப்பு இதில் பிறழ்நிலை உளவியலாக அமைந்துள்ளது. தற்கொலை முயற்சிகளில் மலையிலிருந்து விழுதலும் ஒன்று என்பதும் இதனால் புலப்படும். ஈதல் இயையாத இடத்தும், பெருந்தகைமை பீடழிய வந்த இடத்தும் சாதலைச் சமுதாய நிலையில் வரவேற்ற சங்ககால மக்கள், தனிம நிலையில் சாவதைப் பிறழ்நடத்தை எனக்கருதினர்.

கணவன் இறந்தபின் தீப்பாய்தலும் தற்கொலை முயற்சியாகிய பிறழ் நடத்தையின் பாற்படும். காதலர் இறப்பின் தீயுட்பாய்ந்து உயிர்விடுதலை மணிமேகலை,

"நன்னீர்ப் பொய்கையின் நளிஎரி புகுவர்"[126]

என்று கூறுகிறது. பூதப்பாண்டியன் இறக்க அவன்தேவி,

"... ... எமக்கு எம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற

வள்ளித ழுவிந்த தாமரை
நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே"[127]

என்று கூறுவது தாய்மை இயல்பூக்கத்தைவிடப் பெண்மை இயல்பூக்கம் மிகுந்தநிலை என்று கொள்ளலாம். அல்லது குழந்தைக்காக வாழும் கடமைநிலை இல்லாதவர் என்றும் கொள்ளலாம். கணவனை இழந்த பெண்களின் கைம்மை நோன்புக் கடுமையை விடப், பிரிவுத்துயர் கடுமையானது என்பதை ஆனந்தப் பையுள், தாபதநிலைத் துறைகள் உணர்த்துகின்றன. பெருங்கோப்பெண்டு இறக்கும்பொழுது இளமை உடையவள் என்பதைத் தீப்பாய்ந்ததைக் கண்டு பாடிய மதுரைப் பேராலவாயர் பாடல்வழி அறியலாம்.[128] அத்தகு இளமையில் தன் வாழ்நாளை மாய்த்துக் கொள்ளும் மனநிலை மிக அரிது. உணர்வினைச் சமநிலைப் படுத்துபவர்களே தமக்குப் பொய்கையும் தீயும் ஒன்றெனக் கூறி அதில் பாய முடியும். இதுபோல இன்னொரு மனைவியும், முதுபாலைத் துறையில் கணவனுடன் தன்னையும் சேர்த்துப் புதைக்கக் கலஞ்செய்கோவிடம், முதுமக்கள் தாழியைப் பெரிதாக வனையும்படி வேண்டுகிறாள்.[129] குழந்தைகளைக் காக்கும் கடமை இருந்திருப்பின் இத்தகு தற்கொலைகள் தவிர்க்கப்பட்டிருக்க வாய்ப்புண்டு.

உடலால் வருந்தும் துன்பத்திலும், உள்ளத்தால் அடையும் துன்பமே தாங்குதற்கரியது. கணவனைப் பிரிந்து வாழ்வதால் உறும் தனிமைத்துன்பம் ( Lonliness ) பெண்ணிற்குப் பசலை போன்ற பல நோய்களைத்தரும்.

"இனியவோ பெரும தமியோர்க்கு மனையே"[130]

என்னும் அவளது கூற்று பிரிவின் கடுமையை உரைக்கும்.

தாயும் தந்தையும் இணைந்து சேயை வளர்க்கும் குடும்பத்தில் தந்தை முக்கிய பங்காற்றுகிறார். கடிந்து திருத்தும் தந்தை குழந்தை உலகில் தண்டனை தருபவராகக் காட்சி தருகிறார். ஒழுக்கம் வளர்ப்பு அவருடையதாக இருப்பினும்,

தக்க சமயத்தில் கட்டுப்பாடுகளைத் தளர்த்துவதே தந்தையின் அன்பைக்குழந்தைக்கு உணர்த்தும்.

"குழந்தைப்பருவம் ஓர் அற்புதமான, குதூகலமான அனுபவம்; அது ரம்மியமாக, என்றும் நினைவில் நிற்கும்படிச் செய்வதே குழந்தை வளர்ப்பின் ரகசியம். இதை வெற்றிகரமாக நிறைவேற்ற வேண்டுமானால் 'வளரும் மரத்தைச் சுற்றி போடப்பட்ட ஒரு வேலிதான் நாம்' என்று தந்தை உணரவேண்டும். அந்த வேலி பாதுகாப்புக்காகப் போடப்பட்டதுதான். வளர்ச்சியைக் கட்டுப்படுத்தித் திசை திருப்புவதற்கு அல்ல."[131] என்கிறார் குழந்தை வளர்ப்பில் அப்பாவின் பொறுப்பு பற்றிக் கூறும் மருத்துவர் சி. ஆர். சந்திரசேகர்.

கடுமையாக உழைத்து ஓய்ந்துபோகும் தந்தை வீட்டில் எப்போதும் அமைதி, ஒழுங்குநிலையை எதிர்பார்க்கிறார். குழந்தைகளின் பிரச்சினை ஒரு கூடுதலான பளு; தேவையற்ற தலைவலி என்று நினைக்கிறாற்போல் நடந்துகொள்ளும் தந்தை, குழந்தைகள் உலகத்திலிருந்து விலகிவிடுகிறார். அவருக்கு அமைதியான நிறைவான முதுமைப்பருவம் அமையாது என்பது தெளிவு. குழந்தை வளர்ப்பில் தந்தை செலுத்தும் கவனம், மனநிறைவையும் அமைதியையும் தரும் முதலீடாகும். குழந்தைகள் உலகத்தில் நுழைந்து, ஈடுபாடு காட்டி, நற்பண்புகளை உணர்த்தும் முன் உதாரணமாகத் திகழ தந்தை முன்வரவேண்டும். அன்றேல் புத்திசாலிகளாக வரும் குழந்தைகள் பண்பாளராக விளங்கமாட்டார்கள்.

குடும்பத்தில் பெற்றோர் இருவருமே பணிபுரியும் இக்காலத்தில் கணவன், மனைவியுடன் வீட்டுப்பொறுப்பு, குழந்தை வளர்ப்பில் பொறுப்பு ஆகியவற்றைப் பகிர்ந்து கொள்வதில் வாக்குவாதங்களும், மனத்தாங்கல்களும் அதிகரித்து வருகின்றன. இதனால் குழந்தைகளே அதிகம் பாதிக்கப்படுகின்றனர். போராட்டம் நிறைந்த சூழ்நிலை, பாதுகாப்பற்ற உணர்வைத் தருகிறது. இதனால் குழந்தைகள் தன்னம்பிக்கை இழக்கக்கூடும். கணவனும் மனைவியும் ஒருவருக்கொருவர்

விட்டுக்கொடுத்து, பொறுப்புகளைப் பகிர்ந்து கொண்டால் குழந்தைகளும் அதே பண்புநலன் மிக்கவராய் வளர்வார்கள். சங்கத்திலும் இந்நிலையைக் காணலாம்.

பெண் குழந்தை வளர்ப்பில் தந்தை

பெண் குழந்தைகளை வேறுபட்டமுறையில் வளர்க்கத் தேவையில்லை என்பது தற்கால உளவியலார் கருத்து. பிராய்டின் கருத்துப்படி தந்தை தன்மகளை மிகவும் நேசிப்பது இயல்பு. பெண்குழந்தையின் இயல்பான பெண்மைப் பண்புகளைத் தந்தை பாராட்டி ஊக்கத்தை ஊட்ட வேண்டும். அச்சத்தை உதறி வெளிவுலகத்தைத் தன்னம்பிக்கையோடு சந்திக்கத் தேவையான மனோபலத்தைப் பெண்ணுக்கு அளிக்கக் கூடியவர் தந்தைதான். சங்க இலக்கியத்தின் தந்தை மகளை மிகவும் நேசிக்கிறான். நெடிய முற்றத்தில் தந்தையின் கண் எதிரே பந்து விளையாடுகிறாள் மகள். மகளின் அழகை மெச்சித் தந்தை பொன்வளையல் செய்து தருகிறான். கிளிகடியச் செல்லும் பொழுது அன்பு வார்த்தைகள் கூறி அனுப்புகிறான். தினைக் காவலில் இருக்கும் மகளை வீட்டுக்கு அனுப்பும்போதும் நல்ல இனிய கூறுகிறான். திருமணத்தின்போது தகுதிவாய்ந்த இளைஞனைத் தேர்ந்தெடுக்கிறான். அறத்தொடு நின்றபின்னும், நல்ல வெகுமதிப்பொருள் தரும்போதும் மகள் மணத்தைச் சிறப்பாக நடத்துகிறான். நல்ல பெண்ணைப் பெற்றுத் தந்ததற்காக மருமகனால் வாழ்த்தப் பெறுகிறான்.[132] இல்லறம் காணும் மகளும் தந்தை குடிப்பெயரை,

"குன்றக் குறவன் காதல் மடமகள்"

"புறவணி நாடன் காதல் மடமகள்"[133].

என்றபடி விளங்கவைக்கிறாள்.

ஆணாயினும் பெண்ணாயினும் தந்தை மேற்பார்வையில் தாயின் அன்பில் வளர்பவர்கள் சிறந்தவர்களாக இருப்பதைக் காணமுடிகிறது. தந்தை சொல் மீறாத

குழந்தைகளைப் பெற்ற பிசிராந்தையார், தந்தை சொல் மீறிய குழந்தைகளாகப் பிற்காலத்தில் கோப்பெருஞ்சோழனின் பிள்ளைகளைப் பார்க்கநேர்கிறது.

"குழந்தைகள் அமைதியாய் இருக்கத் தந்தை கையையும் கோலையும் பயன்படுத்துகிறார். முதலில் மனைவியிடம் பயன்படுத்துவதால் மனைவி கணவனைக் கண்டதும் அமைதியுடன் அச்சத்துடன் நடக்கிறாள். அவள் வயிற்றில் பிறக்கும் குழந்தைகளும் அவளைப் பார்த்து அச்சத்துடன் அமைதியையும் கற்றுக்கொள்கின்றன. பயப்படுத்தி வளர்த்த பிள்ளைகள், வளர்ந்தபிறகு அடங்காப்பிடாரிகள், கெட்டவர்கள் ஆகிறார்கள்"[134]

என்கிறார் டாக்டர் மு. வரதராசனார். முதுமைக் காலத்தில் தாங்கவேண்டிய தந்தையைத் தாக்குகிறார்கள். மனம் உடைந்த முதியோர் வாழ்க்கையை வெறுத்துச்சாகும் நிலைக்குத் தள்ளப்படுவதற்குக் காரணம் தவறாக வளர்க்கப்படும் சூழ்நிலையே.

முதுமையில் தாய்க்கு மதிப்பு

பதிற்றுப்பத்தில் அரசனாக இருப்பினும் தந்தை முதியோர்க்கு உதவத் தன் இளம்மக்களை அனுப்புகிறான். இளந்துணை நல்வளம் என்பதாக வளர்ந்தவரே பின்பு முதியோரை மதிக்கின்றனர். மக்கள் நன்கு வளர அவரைப் பெற்ற தாய் மதிக்கப்பட வேண்டும் என்பதே முதன்மை ஆகிறது. ஆனால் வழிவழியாக ஆண்கள் பெண்களை மட்டம்தட்டியே வந்திருக்கின்றனர் என வருந்துகின்றனர் முற்போக்குச் சிந்தனையாளர்கள்.

"கஞ்சத்தனம், சுயநலம் உள்ளவள், உணர்ச்சி மிக்கவள், தர்க்கீகமாகப் பேசத் தெரியாதவள், நுகர்பண்டப்பேய், பொய்மை, ஒழுக்கம் அற்றவள், பேராசை பிடித்தவள், துணிச்சல் இல்லாதவள், கண்ணீரையே ஆயுதமாகப் பயன்படுத்துபவள் என்றெல்லாம் ஆண்கள் பெண்கள்மேல்

> ஞற்றம் சுமத்துவர். இவற்றில் சில சரியாய் இருக்கலாம். ஆனால் பிறக்கும் போதே இவை பெண்களின் மூளையில் பிறக்கின்றனவா? பெற்றோரும் சமூகமும் பின்னரே வேறுபாடுகளைக் கற்பிக்கின்றனர். இவற்றால் மிகவும் பாதிக்கப்படுபவள் பெண்ணே." 135

என்கிறார் செ. கணேசலிங்கன். இரண்டாவது சாதியாகிய பெண்ணை ஆண்கள் தந்தை, மகன், கணவன் ஆன எல்லா நிலைகளிலும் மதிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். அப்போதே உரிமைமிக்க தாயின் குழந்தைகள் நற்குணமும், நன்மதிப்பும் மிக்க குடிமக்களாக விளங்குவர் என்பது கண்கூடு.

<u>பரத்தமை கொண்ட தந்தை</u>

நல்ல குடும்பத்தில் பிறந்தும், தலைமைசான்ற மனைவி வாய்த்தும் தலைவன் பரத்தையை நாடிப் பிரிகிறான். சங்க இலக்கியத்தில் மருதத்திணை பற்றி ஆராய்ந்த டாக்டர் வெ.தெ. மாணிக்கம் தமது ஆய்வில் "திருமணத்திற்குப் பின்பு தலைவிமேல் வேட்கை குன்றி, புது அழகைத் தேடுவதாலும், கருவுற்ற மனைவி அழகு குன்றினாள் எனத் தன் மகிழ்ச்சிக்கென்று நாடுவதாலும் பரத்தைத் தொடர்பு உடையவன் ஆகிறான்; சமுதாயத்தின் ஒப்புதலாலும், மனைவியின் பொறுமை, மன்னிக்கும் பெரும் தன்மை இவற்றாலும் கணவன் பரத்தையை நாட வழி ஏற்படுகிறது; மரபுவழி ஒப்புதலாலும், உளவியலும், அறிவியலும் பரத்தமை வளர்ச்சியில் தலைவனுக்கு உதவுவனவாகவே அமைந்துள்ளன" என ஆய்ந்துரைக்கிறார். 136

பரத்தையிற் பிரியும் தலைவனைக் கொண்ட மனைவி அறிவுபூர்வமாக ஊடுகிறாள்; கடிந்து திருத்துகிறாள். இருப்பினும் வாயில்வேண்டி, மன்னிக்கப்பட்டு மனையில் சேர்த்துக் கொள்ளப்படும் தலைவன் மீண்டும் மீண்டும் பரத்தைவயப்படுதல். குழந்தையைப் பெற்ற தாய்க்கு ஏமாற்றத்தையும் வருத்தத்தையுமே தருகிறது.

இல்வாழ்வில் நிறைவற்ற தாய் மகனைப் பற்றுக்கோடாகக் கொள்கிறாள்; மகனால் தலைவன் பரத்தை மணமும் தடுக்கிறாள்.

அரசனாக இருந்தும் தன்மனைவி கண்ணகியைக் குழல் இனைவது போல அழச்செய்து, பரத்தையை நாடும் பேகன் புலவரால் இடித்துரைக்கப்படுகிறான்.

"எம்போ லொருத்தி நலனயந் தென்றும்
வரூஉ மென்ப வயங்குபுகழ் பேகன்"[137]

என்னும் புலவர் வாக்கில் புகழ்மிக்கவனுக்குப் பொருந்தாத தன்மையையும், தினமும் நாடும் அவனது வேட்கையையும் காணமுடிகிறது. மக்களை ஈன்ற பின்னரும் பொறுப்பற்றுப் பரத்தையர் வீடே கதியாய்க் கிடக்கும் தந்தையைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது.

"நின் மனைவி புலப்பாள்; நின் மகன் அழைக்கும்
குரல் கேட்கிறது"[138]

எனப் பரத்தையரும் திருப்பி அனுப்பும் வண்ணம் கழி காமத்தனாய்க் காலம் கழிக்கிறான். வண்டைப்போலப் பரத்தையரை மாற்றும் அவனைப் பரத்தையரும் இகழ்கின்றனர். "சான்றாளர் ஈன்ற தகுதியற்ற மகன்" என்னும் பழிமொழிக்கு ஆளாகும் ஆட்களும் உண்டு. இருப்பினும் பரத்தையின் குழந்தைக்குத் தந்தை என்ற உரிமை அவருக்கு இல்லை. அதுபோலவேப் பொறுப்பு அற்றுத் தன் வீட்டிலும் நடப்பது பிள்ளைகளைப் பாதிக்கிறது. இளமையில் தந்தையின் இல்லாமை பெண்களையும், வளரும் வயதில் ஆண் குழந்தைகளையும் மிகவும் பாதிக்கிறது. அவர்கள் பிறழ்வுநிலை உடையவர் ஆகின்றனர். தன் குழந்தைகளுக்காகப் பரத்தை வயப்பட்ட கணவனைப் பொறுத்துக்கொள்ளும் தாயரையே சங்க இலக்கியம் காட்டுகிறது. தற்கால ஆய்வாளர் கணவன் மனைவி உறவில் விரிசல் ஏற்படுவதை இரக்கத்துடன் அணுகுகின்றனர்.

> "இன்றைய சமுதாய வாழ்க்கையில் கணவன் மனைவி உறவு பிரச்சினைக்குரியதாக மாறி இருக்கிறது. சமூகத்துள் அடங்கிப்போகும் தனிமனிதர்களையும், சமூகத்தைப் புறக்கணித்து விட்டு வெளியேறும் தனிமனிதர்களையும் நாம் சந்திக்கிறோம். இன்பவாழ்வின் நுழைவாயிலாகக் கருதப்பட்ட திருமணங்கள் தவிர்க்க முடியாத விலங்குகளாய் மாறிவிட்ட பரிதாபத்தைக் கழிவிரக்கத்தோடு ஜெயகாந்தன் சித்திரிக்கிறார்."[139]

இதைப்போல் தற்காலத்தில் பல சான்றுகளைக் காணமுடிகிறது. ஆயினும் தாய்மை உணர்வு என்றும் மாறாத ஒன்றாய் தந்தையையும் மக்களையும் இணைக்கும் பாலமாய் அமைவதைச் சங்க இலக்கியம்வழி அறிகிறோம்.

## 5.5 சேயின் உள்ளம்

குழந்தைப் பருவம் தாயின் அன்பை எதிர்பார்க்கும், கட்டுப்பாடுகளை எதிர்க்கும் பருவம்; உணர்ந்ததை ஒளிக்கத் தெரியாத பருவம். சேய், தனது தேவைகளை உணர்த்த முதல் முதலில் கையாளும் மொழி அழுகை. இதுவே அதன் முதன் ஒலி. மிகப் பல்வேறுபட்ட தூண்டல்களுக்கு அழுகையானது ஒரு கட்டுப்படுத்த இயலாத பொதுமையான துலங்கலாக அமைகிறது. பசி அல்லது நலமின்மை விலக்கப்படும் பொழுது குழந்தை அமைதிக்கும் உறக்கத்திற்கும் திரும்புகிறது. சிலபொழுது உறக்கத்திலும் அழுகிறது.

> "பலவகையிலும் குழந்தை உரிமையோடு வாழவிரும்புகிறது. ஆனால் உலகத்தில் எங்கும் தடையே காண்கிறது. அதனால் பெரிய மனக்குறை குழந்தைக்கு ஏற்படுகிறது. பலவழியிலும் வளர விரும்பும் குழந்தைக்குச் சுற்றுப்புறம் இடையூறு செய்வதால் மனத்தளர்ச்சியும், கண்டபடி வாழ்ந்து தன்னைத் தண்டிப்பவர்களைக் கண்டு மனநோயும் அடைகிறது. மனக்குறை, மனத்தளர்ச்சி,

மனநோய் காரணமாக உள்ளுக்குள் போராடிப் போராடி அமைதி இல்லாமல் வருந்துவதே தூங்கும் வேளையில் அழக் காரணம்"[140]

என்கிறார் 'குழந்தை' என்னும் ஆய்வுநூலில் மு. வரதராசனார். அழுவதன் மூலம் தாயின் கவனத்தை ஈர்க்கும் குழந்தை பாராட்டப்பெறுகிறது; அரவணைத்துக் காக்கப்பெறுகிறது.

வளரவளரத் தனக்கு ஏற்படும் ஐயங்களைப் போக்கிக் கொள்ளத் தாய், தந்தை, மூதோரை நாடுகிறது. அப்போது அது கவனிக்கப்பட்டு, அது தேடுகின்ற அன்பும், ஐயம் தீரும் விடைகளும் கிடைத்தால் மிகநல்ல சமுதாய மனிதனாக வளரமுடிகிறது. சமுதாயத்தை உள்ளபடிப் புரிந்து செயலாற்றும் ஆற்றல் அக்குழந்தைக்குக் கிட்டுகிறது.

"எல்லாப் பெற்றோர்களும் தங்கள் பிள்ளைகள் மேல் அக்கறை-யுள்ளவர்தாம். எனினும் எல்லாப் பெற்றோருமே தங்கள் குழந்தையின் தனி ஆளுமைத் திறம்பற்றி அறிய விரும்புவதில்லை. அத்துடன் தங்கள் குழந்தைகளுக்கும், தங்களுக்கும் உள்ள உறவு நன்கு உருவாக்கப்படுவதற்கு ஆழ்ந்த முயற்சி எடுத்துக்கொள்ளவும் ஆர்வம் காட்டுவதில்லை."[141]

என்பர் உளவியலார். தங்கள் வருங்காலத்தின் ஆதரவு என்பதுடன் நல்ல நாட்டுக்கு ஏற்ற குடிமகனாகவும் விளங்கத் தந்தையும் தாயும் மிக அக்கறை எடுத்துக் கொள்வதைச் சங்கத்தின் மூலம் அறிகிறோம். நல்ல மகன் பெயர்விளங்கும்படி வாழ்வதையும், அல்லாதவர் திட்டப்பெறுவதையும் காணும்போது சூழலுடன் பெற்றோரும் காரணமாவதை உணரமுடிகிறது. குழந்தைகளின் உலகத்திலிருந்து விலகிச் செல்லும் பெற்றோர்கள் நல்ல முதுமைக்காலம் உடையவராய் இருக்க முடிவதில்லை. பெற்றோருக்கும் வளர்ந்த பிள்ளைகளுக்கும் இடையில் தலைமுறை இடைவெளி உருவாவதும் சிறந்த அன்புத் தொடர்பு இல்லாமையாலேதான். பல

பல முதியோர் தனித்த இல்லங்களில் துயர்ப்படக் காரணம் அன்பற்ற, அதிகத் தன்னலம் மிக்க குழந்தைகளே,

> "பெற்றோருடைய முதுமைப் பருவத்தில் அவர்களைக் காப்பது குழந்தைகளுடைய கடமை. முதியோர்க்கு அக்குடும்பத்தில் என்றும் முக்கியத்துவம் இருக்கிறது என்ற நம்பிக்கையை இளைஞர் ஊட்டவேண்டும்; முதியோரும் 'தான்' என்ற எண்ணத்தை விட்டு இளையோருக்கு உதவியாக இருக்க வேண்டும். அனுபவம் கூடிய முதியோர் இளையவருக்கு வழிகாட்டி என உணரவேண்டும்." [142]

எனப் 'பிரஜையின் குரல்' நிகழ்ச்சியில் ஜெயகாந்தன் கருத்துரைக்கிறார். தற்காலச் சூழல்கள் போலச் சங்க இலக்கியத்தில் அதிகம் வேறுபாடுகள் இடம் பெறவில்லை. பெண்ணாயினும் ஆணாயினும் மகன்பாதுகாப்பில் இருந்ததையும், நீண்ட வயதுள்ள முதியவர்கள் வாழ்ந்து வழிகாட்டியதையும் புறநானூறு காட்டுகிறது.

சங்க இலக்கியம் காட்டும் இன்னொருகாட்சி குழந்தைத் தொழிலாளர் நிலை. தற்காலத்தில் மூத்தோரின் அடக்குமுறையால் விருப்பின்றியும், வேறுவழியின்றியும் குழந்தைகள் அடங்கித் தொழிலாளிகள் ஆகின்றனர். சங்க இலக்கியத்தில் அவர்கள் அடக்கப்படவில்லை; இயல்பாகவே தொழில் கற்கும் ஆர்வம் ஊட்டப்பட்டனர். முதியோர்கள் சமுதாய நலத்தை உத்தேசித்து உழைத்தனர் எனில், குழந்தைகள் தங்களுக்கு உள்ளிருந்து வேலை செய்யும் இயற்கைச் சக்தியின் வசமாக உழைத்து அறிவு தேடினர். குழந்தைக்கு உழைப்பும் பயனும் ஒன்றாகவே இருந்தது. மாண்டிசோரியின் சித்தாந்தப்படி,

> "உழைப்பு வயது முதிர்ந்தவனுக்குக் களைப்பைத் தரலாம்; குழந்தைக்கோ உழைப்பு ஒரு புதிய ஊக்கத்தையும் ஆற்றலையும் தரக் காண்கிறோம். குழந்தை தன் உழைப்பின் பயனாக வளர்ச்சியும் பயிற்சியும் பெறுகிறான்." [143]

என்கிறார் பி.ஸ்ரீ. என்னும் பெரியார்.

விளையாட்டுக்கெனச் சங்க மக்கள் தந்த ஊக்கம் அளவிடற்கரியது. உலகத்தை அறியவும் அதனோடு இணையவும் குழந்தைக்கு விளையாட்டும் மொழியுமே உதவுகின்றன.

> "விளையாட்டு புதிய அனுபவங்களின் தேவையை இரு பெரும் வழிகளில் பார்க்க வைக்கிறது;
>
> 1. உலகத்தைப் பற்றி அறியக் குழவிக்கு உதவுகிறது.
>
> 2. நடப்பியலையும் மெய்ம்மையையும் மீறிய கற்பனையை அனுமதிப்பின் மூலம் போராட்ட உணர்வுகளைச் சமனப்படுத்துகிறது. உலகத்துடன் இணைய வழிமுறைகளைக் காட்டித் தருகிறது."[144]

என்னும் உளவியலார் கருத்துப்படி கற்பனையாக ஆடும் விளையாட்டைப் பொய்தல் காட்டுகிறது. உண்ணாப் பாவைக்கு வறுமுலை ஊட்டும் தாய்மையை இளம் பெண்ணிடம் காண்கிறோம். தம் புதுப்புதுக் கற்பனை கலந்த விளையாட்டை ஆட மறுப்புக் கூறப்படும்போது பெண் குழந்தைகள் சினம் அடைகின்றனர்.

> "பெண் குழந்தைகள் தாங்கள் எவையேனும் இழக்கும் பொழுதும், தங்களுக்கு வெளியில்சென்று விளையாடும் அனுமதி மறுக்கப்பட்டாலும் கோபம் கொள்கின்றனர். அவர்களின் தலைமயிரைப் பிடித்து இழுத்தாலும் கோபம் வெளிப்படுகிறது. மேலும் பிறர் தங்களைக் குறைகூறும்போதும் ஏமாற்றும் போதும், அதிகாரத்தின் மூலம் பணிய வைக்கும்போதும், திட்டும்போதும், அடிக்கும் போதும் கோபம் கொள்கின்றனர்."[145]

இவ்வனைத்தும் சங்கத்தாயர் தம் மகள்களிடம் செய்து வெறுப்பைத் தேடிக் கொள்கின்றனர். பெண் தாயை அவ்வளவு எளிதில் மன்னிப்பதில்லை. 'நரகம் புகட்டும் அறனில் அன்னை' என்பதில் தாய் வளர்த்த அன்பைவிட, மறுத்ததன் வெறுப்பே முன்நிற்கிறது.

> "பிள்ளைகள் செய்யும் குற்றங்களுக்காக அளிக்கப்படும் தண்டனை அறமுறைக்குட்பட்டதாக இருக்க வேண்டும். பொதுவாக ஐந்து வயதுக்கு மேற்பட்ட பிள்ளைகளைப் பிரம்பில் அல்லது கையால் அடிப்பதானது பெற்றோருடைய தோல்வியையே காட்டும்."[146]

என்னும் கருத்துப்படி பேசித் திருத்த முடியாத தாய் கூந்தலைப் பற்றி இழுத்து, சிதையும் கோல் கொண்டு நைய அடிக்கிறாள். அடிப்பட்ட பெண், அன்றே உடன் போக்கு மேற்கொள்கிறாள். தான் செல்வதைத் தாய்க்குத் தரும் தண்டனையாகவும் கருதுகிறாள். தாய் தரும் தண்டனை மகளைத் திருத்துவதற்குப் பதிலாக மகளுடன் பிளவை அதிகப்படுத்திவிடுகிறது. 'எற்கெடுத்திருந்த அறனில் யாய்' என்னும் மகள் தான் திரும்பி வருவதையும் அன்னைக்குக் கூறாமல் தோழிக்குக் கூறி அனுப்புகிறாள்.

தாயின் அன்பு சேயிடம் வெளிப்படும் தன்மையில் பல்வேறு வகைகள் இருப்பினும் என்றும் சேயின் நலம் கருதியதாகவே இருப்பதைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. இளமையின் அனுபவம் இன்மையும், தன்முனைப்பும் இருப்பதால் தாயின் அன்பின்மேல் ஐயம் கொள்ள நேரும் சூழ்நிலை சேய்க்கு உண்டாகிறது. தாயின் உண்மை அன்பினைச் சேய் உணரும்போது முரண்பாடுகள் மறைந்து மகிழ்ச்சியும் நிறைவும் ஏற்படுகின்றன. தாயன்புக்கு என்றும் இணை இல்லை என்பதைக் காலம் காலமாக இலக்கியங்கள் உணர்த்தி வருகின்றன.

> "மனநோய் வந்தபிறகு சிகிச்சை செய்வதை விட, அது வராதிருக்கச் செய்வது நல்லது. மனநோய் வராதிருக்கவும் அதற்கும் மேலாகச் சிறந்த உணர்ச்சிநலம் உண்டாகவும் உதவுவதே உளநலவியலின் முக்கிய நோக்கமாகும்."[147]

என்கிறார் டாக்டர் மு. அறம்.

சங்ககால மக்கள் இக்கருத்தை அறிந்து இருந்தாற்போலவே உளநலத்திலும் மிக்க அக்கறை கொண்டு இருந்ததாகப் புலப்படுகிறது. வருமுன் காக்கும் முயற்சிகளும், வந்தபின் தீர்க்கும் செயல்களும் தாயிடம் தன் சேய்மாட்டுக் கொள்ளும் அன்பின் விளைவாக ஏற்படுவதை அறியமுடிகிறது.

*****

அடிக்குறிப்புகள்

1. "Psychology is at the Centre of our effort to understand the behaviour of all livingthings and in particular, of our individual search for self understanding. Psychology deals with our feelings, our thoughts and our ways of doing things.
Psychology is the Science of behaviour ; is interested in the specifics of behaviour." B. Von. Haller Gilmer, Psychology, p. 4.

2. பி. குப்புசாமி, சமூக உளவியலுக்கு ஓர் அறிமுகம், ப. 290.

3. இயக்க இயல் பொருள் முதல் வாதமும், வரலாற்றுப் பொருள் முதல் வாதமும், ப. 333, மேற்கோள், அ. ஆறுமுகம், தமிழ் இலக்கியங்களில் பொதுவுடைமை, ப. 30.

4. ந. சுப்புரெட்டியார், தொல்காப்பியர் காட்டும் வாழ்க்கை, ப.31.

5. மு. வரதராசனார், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பக்.17,604.

6. "The experience of pregnency and motherhood can have a strange effect on you as a woman. You are entirely engrossed in your own body and the life it holds. It is as if you are in the grip of a powerful force, as if a wave had lifted you above and if beyond everyone else. In this way there is always a part of you that is unreachable and is reserved for the future - Your baby." Sophia Loran - Eves Weekly, Jan. 26 Feb. 1, 1985, p.61.

7. ஆர்தர். டி. ஜெர்சில்டு, குழந்தை உளவியல், ப. 29

8. ஐங். 51.

9. பெரும்பாண். 134:6.

10. அகநா. 141, 78.

11. நற். 31 : 9-11.

12. குறுந். 85, 301.

13. நற். 263, 272, கம். 177.

14. அகநா. 34, 72, 367, ஐங். 323, கலி. 40.

15. ஐங். 51; குறு. 287; புறநா. 20 : 13-15.

16. பெரும்பாண். 393-395.

17. கலி. 28 : 1.

18. நற். 116 : 3-5.

19. அகநா. 21; பொருநர். 185-186; புறநா. 176;
அகநா. 160; ஐங். 168; புறநா. 173.

20. குறு. 152; 38.

21. "Congental experiences resulting from the mother's physical condition that may be unfavourable to normal prenatal development are : toxic poisoning, disease, malnutrition, infection, endocrine imbalance and possibly a severe nervous shock. To these can be added birth injuries that may result in feeble mindedness or other abnormalities."

Lester D. Crow, Child Psychology, p. 18.

22. புறநா. 74 : 1.

23. அகநா. 206 : 2.

24. புறநா. 28 : 1-6.

25. மே.ப. 34 :2.

26. தா.ஏ. சண்முகம், உளநலவியல், ப. 76.

27. ஐங். 309.

28. மே.ப. 386; அகநா. 197.

29. பெரும்பாண். 395; கலி. 110 : 4; அகநா. 78.

30. குறு. 287 : 3-5.

31. பெரியாழ்வார், 3 : 2 : 8.

32. கலி. 28 : 1-2.

33. அகநா. 3, 21; நற். 29, 383; அகநா. 238, 147; 328, 393, 218, 288; நற். 384; புறநா. 117; அகநா. 156.

34. ஐங். 70 : 4.

35. "Vandenberg ( 1966 ) Compared the intellectual patterns of dizygotic and monozygotic twin pairs by analyzing their veiablity in six mental abilities subjects. He reported significant hereditary influence for four factors of intelligence : Verbal, spatial, number and word fluency. The lack of evidence for strong genetic influence on factors affecting memory and reasoning has important

implication for child learning and teaching."
Mildred C. Robeck, Infants and Children,
p. 10.

36. கம்பர், கம்பராமாயணம், அயோத்தியா காண்டம், மந்திரப்படலம், 32 : 4.

37. குறு. 324 : 6-7.

38. புறநா. 112.

39. ஐங். 24 : 1.

40. கலி. 99; நற் . 355; ஐங். 128.

41. தா. ஏ. சண்முகம், பெற்றோர்களும் குழந்தைகளும், கலைக்கதிர், ஏப்ரல், 1969, ப. 22.

42. நற். 370; ஐங். 70, 424; புறநா. 159, 160, 164, 211.

43. அகநா. 14; ஐங். 92; அகநா. 229, 85; நற். 202; பொருநர். 185-86; அகநா. 117; குறு. 278, 335; நற். 57; 356,91, 367; அகநா. 31; புறநா. 342.

44. புறநா. 323.

45. Helene Deutsch, A Psychology of Women, Girl hood, Volume - I, pp. 17-18. மேற்கோள், இர. சித்ரலேகா, லட்சுமி, சூடாமணி நாவல்கள், பக்.124-125.

46. அகநா. 83, 118; நற். 85; புறநா.42; நற். 233; கலி. 116; குறு. 139.

47. புறநா. 9; அகநா. 248; ஐங். 397, 354.

48. மதுரைக். 461.

49. பரி. 19 : 58-66.

50. அகநா. 347 : 13-15.

51. கலி. 21 : 5; கலி. மரு. 34 : 4-5.

52. A. Kaplan, Archives of general Psychiatry, pp. 325-330. மேற்கோள். ந. சேஷாத்திரி, சங்க இலக்கியத்தில் உளவியல், பிஎச்.டி. ஆய்வேடு, ப. 170.

53. மே.ப., American Psychiatric Association, Diagnostic and Statistical, manual of mental disorders, pp. 232-241.

54. மு. இராசமாணிக்கம், உளவியல் துறைகள் முதல் பகுதி, ப.106.

55. குறு. 397 : 4-5.

56. பெருமாள் திருமொழி, 5 : 1 : 3-4.

57. புறம். 4, 230.

58. நற். 15 : 7-8.

59. மலைபடு. 311-314.

60. ஐங். 151 : 1-2.

61. ஜான் ஆசீர்வாதம், தமிழ் இலக்கியத்தில் அறிவியல், ப. 111.

62. பி.ஸ்ரீ., துள்ளித் திரிகின்ற காலத்திலே, ப. 2.

63. நா. வானமாமலை, தமிழ் நாட்டுப் பாமரர் பாடல்கள், ப.22.

64. "Boys whose fathers are absent, are frequently treated more protectively, indulgently and emotionaly by the mother than they would be if the father were in home"
Collier's Encyclopeadia, p. 236.

65. பி. குப்புசாமி, சமூக உளவியல், ப. 92.

66. பி.கே. செல்வதுரை, திங்கள் தென்றல், தொலைக்காட்சி நிகழ்ச்சி, சென்னை, 9.2.1994.

67. புறநா. 183 : 3-4, 7.

68. ஔவையார் தனிப்பாடல்.

69. புறநா. 277-279.

70. ஐங். 255.

71. டெசிமஸ் ஜுவெனால், மேற்கோள், கா. திரவியம், சிந்தனைச் சுரங்கம், மூன்றாம் பாகம், ப. 197.

72. குறு. 17 : 1-4.

73. கலி. 141 : 22-25.

74. மே.ப. 138 : 27.

75. பி. குப்புசாமி, சமூக உளவியலுக்கு ஓர் அறிமுகம், ப. 243.

76. குறு. 292.

77. கலி. 108; அகநா. 320; குறு. 335, 392;
நற். 127; குறு. 123.

78. புறநா. 342 : 14-15.

79. மே.ப. 345 : 12-15.

80. மே.ப. 353 : 15-17.

81. மே.ப. 354 : 3.

82. குறு. 129 : 1.

83. புறநா. 275 : 8-9.

84. மே.ப. 340 : 6-9.

85. ஐங். 257.

86. கலி. 50.

87. பரிபாடல், 8 : 58.

88. "Maternity is a strange mixture of narcissism, altruism, idle day dreaming, sincerity, bad faith, devotion and cepnicesim"

Beauvoir, Simone De, The Second Sex, p. 484.

89. அகநா. 35 : 1.

90. ஐங். 372 : 1.

91. பெ. தூரன், மனம் எனும் மாயக்குரங்கு, ப. 36.

92. அகநா. 55.

93. மே.ப. 275 : 5.

94. திருமதி. தியாகராசன், வையை, வியாழ வட்டக் கருத்தரங்கு மலர், இலக்கியத்தில் தாய், ப. 68.

95. அகநா. 55, 145; நற். 271.

96. என்.ஏ. வேலாயுதம், பெண்களைப் பற்றிப் பெரியோர்கள், ப.143.

97. சி. இரத்தினம், தி. சானகிராமனின் 'அம்மா வந்தாள்' - ஓர் ஆய்வு, எம்.ஃபில் ஆய்வேடு, ப. 87.

98. ஐங். 381.

99. குறு. 7.

100. ஐங். 382; ஔவை. துரைசாமிப்பிள்ளை உரை, ப.877.

101. இராதா செல்லப்பன், இலட்சியப் பெண் காட்டும் பெண், வேள்வி, கருத்தரங்கக் கட்டுரைகள், ப. 114.

102. தேவதத்தா, (பதி.)., தமிழ்ச் சிறுகதைகளில் பெண்கள் பிரச்சனைகள், ப. 31.

103. மா. கோதைநாயகி, கரையோர முதலைகளில் சுவப்பனாவின் பாத்திரப்படைப்பு-ஓர் உளவியல் பார்வை, எம்.ஃபில் ஆய்வேடு, ப.74.

104. சு. அரங்கராசன், தமிழ் நாவல் இலக்கியத்தில் பெண்மை, 8-வது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, பக். 11-12.

105. ஐங். 385.

106. குறு. 361.

107. மே.ப. 83.

108. புறநா. 336 : 10-12.

109. மே.ப. 348 : 6-7.

110. அகநா. 146 : 12-13.

111. மே.ப. 276 : 10-12, 15.

112. நற். 172 : 4-6.

113. மே.ப. 204 : 8-12.

114. குறு. 401 : 4-6.

115. மே.ப. 25.

116. இராஜம் கிருஷ்ணன்; காலந்தோறும் பெண்மை, ப. 121.

117. ஐங். 180 : 1.

118. மே.ப. 276 : 4-6.

119. அகநா. 218, 321, 68; நற். 399; அகநா. 197;
ஐங். 401-406; 410.

120. ஐங். 43, 44; அகநா. 160, 304, 314;
ஐங். 401, 434, 493.

121. பெரும்பாண். 341-342; 203-205; நற். 367; அகநா. 297,
384, 375, 95, 201, 275.

122. அகநா. 165; புறநா. 383; அகநா. 371;
ஐங். 353, 357.

123. மலைபடு. 311-314; ஐங். 151.

124. மே.ப. 307-10; நற். 47; அகநா. 229, 290, 362;
புறநா. 23.

125. குறு. 69 : 1-4.

126. மணிமேகலை, 2 : 45.

127. புறநா. 246 : 12-15.

128. புறநா. 247 : 10.

129. மே.ப. 256.

130. குறு. 124 : 2-4.

131. சி.ஆர். சந்திரசேகர், குழந்தை வளர்ப்பு : அப்பாவுக்கும் பொறுப்பு, கல்கி, நவம்பர் 11, 1991, பக். 50-53.

132. நற். 140, 136, 134, 206, 306.

133. ஐங். 424, 255.

134. மு. வரதராசனார், குழந்தை, ப. 60.

135. செ. கணேசலிங்கன், ஒரு பெண்ணின் கதை, ப. 35.

136. V.T. Manickam, Marutham, pp. 86-90.

137. புறநா. 144 : 11-12.

138. ஐங். 90, 86.

139. எஸ். தோதாத்ரி, தமிழ் நாவலில் கம்யூனிச பாத்திரங்கள், ஆராய்ச்சி மலர்-5, இதழ்-3, பக். 181-183.

140. மு. வரதராசனார், குழந்தை, ப. 79.

141. "All parents are interested in the Children, but not all parents are interested in an impersonal study of them and in a deliberate effort toward modification of their own relationships with their children."

Josephine C. Foster, The Young Child and his parents, p.5.

142. ஜெயகாந்தன், ஒரு பிரஜையின் குரல், சென்னைத் தொலைக்காட்சி நிகழ்ச்சி, மார்ச் 2, 1995.

143. பி.ஸ்ரீ., துள்ளித்திரிகின்ற காலத்திலே, ப. 38.

144. "Through play and language, the child explores the world and learns to cope with it. Play meets the need for new experiences in two major ways : it enables the child to learn about the world; and it provides a means of coping with and resolving conflicting emotions by allowing fantasy to override reality and logic."

Constance M. Lee, Ed., Child Abuse, p. 27.

145. மு. இராசமாணிக்கம், உளவியல் துறைகள்-1, ப. 67.

146. சத்தியசாமுவேல், மனோதத்துவமும் குடும்ப வாழ்க்கையும்,ப.180.

147. மு. அறம், குமர உள்ளம், ப. 239.

*****

## நிறைவுரை

சங்க இலக்கியத்தில் காணப்பெறும் அகம், புறம் என்னும் பொருள் இலக்கணப்பாகுபாடு தமிழர்க்கே உரிய சிறப்புடைத்து. திணை என்னும் சொல் மக்களின் வாழ்க்கையைக் குறித்தது. அகமும், புறமுமாகிய வாழ்வில் சிறந்திருந்த தமிழர் தாம் ஈன்ற மக்களையும் தம் பொருளாகவே கருதினர்.

தொல்காப்பியம் காட்டுவது தந்தை வழி சார்ந்த குடும்பம். அதில் தாயின் இடமும் சிறப்புப் பெற்றுள்ளது. குலம் சிறக்கக் குழந்தைப் பேறு கிட்டாத நிலையில் தந்தை இரண்டாம் மணம் செய்வதைத் தாய்மை விரும்பும் தலைவி ஏற்றிருக்கிறாள். ஆண் குழந்தை சிறப்பாகவும், பெண் குழந்தை விழிப்புடனும் பேணி வளர்க்கப்பட்டுள்ளனர்.

தாயரில் பல பிரிவினர் இருந்தனர். இருப்பினும் நற்றாயும், செவிலித் தாயும் சிறப்பாக, வேற்றுமையின்றி ஒருவராகவே கருதப்பட்டதை அறிய முடிகிறது. தாய்க்குரிய பெயர்களாக அன்னை, தாய் என்பனவும், சேய்க்குரிய பெயர்களாகப் புதல்வன், மகள் என்பனவும் பெரிதும் பயின்று வந்துள்ளன. சேய், பெயரன் என்பன மிகக்குறைவு. குழந்தை என்னும் பெயர் அக்கால வழக்கில் இல்லை. அம்மா என்னும் பெயரும் தாய்க்கு வழங்கப்படவில்லை.

குழவிப் பருவம் கருவுலக வாழ்வில் இருந்தே தொடங்குகிறது. களவில் மெய்யுறு புணர்ச்சி இருந்துள்ளது. களவில் மகப்பேறு குறித்து அஞ்சிய தலைமக்கள் விரைவில் கற்புமணம் காண முயன்றுள்ளனர். பரத்தையர்ப் பிரிவில் இருப்பினும் மகப்பேறு குறித்த கடமையுணர்வு தலைவனுக்கு இருந்தது. சூல்கொண்ட தலைமகளி

பெரிதும் சிறப்பிக்கப்பெற்றாள். மகளின்றுடின் பொலிவு பெறும் தாய், குழந்தைப்பேற்றால் மேலும் பாராட்டப் பெறுகிறாள். சேயின் குழவிப் பருவம் உரிமை உணர்ச்சியும் மகிழ்ச்சியும் நிறைந்ததாகக் காணப்படுகிறது.

இளமைப் பருவத்தில் ஆணும் பெண்ணும் மிகுந்த கவனத்துடன் வளர்க்கப் பெற்றுள்ளனர். கல்வியும், வீரமும், அழகும் நிறைந்த தலைவனாக ஆண் உருவாகிறான். தலைவனைத் தேர்ந்தெடுக்கும் பக்குவமுள்ள பெண்ணாக மகள் மாறுகிறாள். குறிக்கோளும், குடிப்பெருமை காக்கும் பண்பும் நிறைந்த தலைமக்களாக அவர்கள் உருவாக இளமைப்பருவம் வழிவகுக்கிறது.

விளையாட்டுகள், குறுமக்கள், இளைஞர், மகளிர் ஆடுதற்கெனப் பல திறத்தனவாயிருந்தன. அவற்றாலும் அக்கால மக்கள் தம் வாழ்வும், பண்பாடும் புலனாகின்றன. ஆண் மக்கள் தம் தந்தையர் தொழிலையும் விளையாட்டாகவே கருதிச் செய்தனர். மகளிரும் பல்வேறு தொழில் புரிந்துள்ளனர்.

அக இலக்கியங்களில் புதல்வன் தந்தையின் பரத்தமையைத் தடுக்கும் வாயிலாய் அமைகிறான். தாய் நல்லன கூறி, அல்லன கடிந்து வளர்த்தல் நற்குணமிக்க மகனை உருவாக்கும் என்பது வெளிப்படுத்தப்படுகிறது. மகனின் நல்ல குணத்திற்காகப் பாராட்டப்பெறும் தாய், அல்ல குணங்களுக்காகக் கடியவும் படுகிறாள். மகனின் திருமண முயற்சியில் தாயின் இடம் குறிப்பிடப்படவில்லை. உடன்போக்கில் மகன் அழைத்துவரும் பெண்ணைத் தாய் தன் மருமகளாக ஏற்றுக்கொள்கிறாள்.

திருமணத்தின் பின் மகனது குடும்ப வாழ்வில் பரத்தையர்ப்பிரிவு காரணமாக வாயில் ஆக அமைவோரில் தாயின் பங்கு இல்லை. தாயின்

உணர்வுகள் ஊடலின் இனிமையைக் குறைத்திருக்கும் என்பதால் விலக்கப்பட்டிருக்கலாம் என்பது உளவியல் சார்ந்த கணிப்பாகும்.

தாய்வயிறு வியத்தலும் பழித்தலும் அகத்தைப் போன்று புற இலக்கியங்களிலும் காணப்படுகிறது. வறுமையிலும் செம்மையாக வளர்க்கப்பட்ட மகன் இழிசெயல் செய்ய நாணுகிறான். களம்புகும் காளையரைப்பெற்ற முதின்மகளிரின் தாய்மை உணர்வு, மகன் இறப்பையும்விட அவன் புகழையே பெரிதும் கருதுகிறது.

கணவர் இறப்பிற்குப் பின்னரும் கடமை உணர்வுமிக்க தாயர், புதல்வருக்காக உயிர் வாழ்ந்தனர். கடுமையான கைம்மை நோன்புகளைப் பொறுத்துக் கொண்டு மக்களின் வளர்ப்பில் தமக்குரிய பங்களிப்பைச் செய்துள்ளனர். இக்கடமை இல்லாதவரே கணவருடன் உயிர்துறக்க விரும்பியிருக்கலாம்.

கடவுள் தொடர்பான செய்திகளில் முருகன், தாய்க்கடவுளின் சேயாகக் குறிக்கப்பெறுகிறான்.

சங்கச் சமுதாயம் புதல்வனை மிக இன்றியமையாதவனாகக் கருதியது. முதலில் மணந்த பெண்ணுக்குத் தாய்மைப்பேறு கிட்டாதபோது, மகவு வேண்டி மறுமணம் செய்வதும் நடந்துள்ளது. மகப்பெறாத குறை காரணமாகத் தன்னிலை தாழ்ந்தாலும், கணவனின் மறுமணத்தால் பிறக்கும் மகவிற்குத் தாயாக வாழும் பெண், கணவனின் தலைமைப் பண்புக்கும் குறை நேராது காத்திருக்கிறாள்.

எக்காரணத்தினாலோ தாய் இறந்துவிட, மகவை வளர்க்க என்றும் தந்தையின் மறுமணம் நடந்துள்ளது. கைத்தாய், ஊட்டும் தாய், வளர்ப்புத்தாய் ஈனாத்தாய் எனத் தாயர் பலர் இருந்துள்ளமை அதைப் புலப்படுத்தும்.

பெண்ணைப் பொறுத்தவரை களவுவாழ்வு போராட்டம் நிறைந்ததாகவே இருந்துள்ளது. வளர்ந்துவரும் மகள் இளமைப்பருவம் எய்தும்பொழுது தாயின் கவனம் பெரிதும் கூடுகிறது. களவில் ஈடுபடும் மகளை அறிந்து இற்செறித்துக் காக்கிறாள். இற்செறிப்பின் கடுமை, அலர், வெறியாடல், தலைவன் வரைவு வேண்டிவரத் தமர் மறுத்தல் ஆகியவற்றால் அறத்தொடு நிலை அல்லது உடன்போக்கு மேற்கொள்ள மகள் முனைகிறாள்.

தாய் ஐயுற்று வினவும்போதும், வெறியாட்டு நிகழும்போதும், அயலார் வரைவு வேண்டிவரும்போதும், தலைவன் வரைவு வேண்டிவந்து தமர் மறுக்கும் போதும் அறத்தொடு நிற்கும் மகளின் மனநிலையைப் புரிந்துகொள்ளும் அன்னை, மகளின் திருமணத்தை முன்னின்று நடத்துகிறாள்; எக்காரணம் கொண்டும் எதிர்ப்பது இல்லை.

அன்னைக்கு அஞ்சும் மகள் அறத்தொடு நிற்கத் தயங்கும் நிலையில் ஊரலர் கடுமையாகும் போதும், தலைவன் வரைவைத் தமர்மறுக்கும் போதும், ஏதிலர்க்கு மகட்கொடை நேரும்போதும் உடன்போக்கு நிகழ்ந்துள்ளது. உடன்போக்கு செல்லும் மகள் மகிழத் தாயோ தாங்கற்கரிய துயர் அடைகிறாள். அப்பொழுது தாயின் பல்வேறு இயல்புகள் வெளிப்படுகின்றன. தேடிச்சென்று மீள்வதும், மகள் திரும்பிவர விரும்புவதும் வதுவை நடத்த விழைவதும், தாய் தன் மகளின் காதலுக்கு எதிர்ப்பு தெரிவிப்பதில்லை என்பதைத் தெளிவுறுத்தும்.

எங்ஙனமாயினும் வதுவை நடைபெறவேண்டும் என்பதில் தாயின் தவிப்புப் புலனாகிறது. வரைவு முடிந்தபின் கற்பு வாழ்வில் தோழியுடன் தாயும் சென்று மகளின் குடும்ப வாழ்வைக் கண்டு மகிழ்வதுண்டு. இளநங்கை மணம் முடிந்தபின் சிறுமுதுக்குறைவியாய் அறிவு பெறுதல் கண்டும், மகவு பெற்றுப் பொலிதலைக் கண்டும் நிறைவும் மகிழ்வும் அடைகிறாள் தாய்.

கருவுலக வாழ்விலிருந்தே உள்ளத்தாலும் தாய் சேய் உறவு வலுவடைகிறது. சூல்கொண்ட பெண் தனது உடலில் ஏற்படும் மாற்றத்துடன் உள்ளத்தாலும் மாறுதல் அடைகிறாள். 'வயா' என்னும் கருவுற்ற பெண்ணின் வேட்கையைக் கணவன் தீர்ப்பது அஃறிணை உயிர்களாலும் அறியப்படுகிறது.

வயிற்றில் இருக்கும்பொழுதும் கரு பாதுகாக்கப்பட வேண்டும் என்பதில் மிகவும் அக்கறை செலுத்தியுள்ளனர்.

தாயின் மன அதிர்வுகள் கருவைப் பாதிக்கின்றன. தாயின் உளச்சிதைவு, கருச்சிதைவையும், உடல் ஊனத்தையும் ஏற்படுத்தியுள்ளது.

மகவீன்ற பின்னும் தரும் சிறப்புக் கவனிப்பால் தாய்மை உயர்வு மனப்பான்மையைத் தோற்றுவிக்கிறது.

தாய், தன் சேய்க்கு உணவூட்டுதல், குழந்தை சமூகத்துடன் பழகுவதற்கு வித்திடுகிறது. உணவூட்டல், எதிரிகளிடமிருந்து பாதுகாத்தல், தொலைந்துபோனபின் தேடுதல் ஆகிய செயல்களில் தாய்மை இயல்பூக்கம் வெளிப்படுகிறது. பேறும் தாயே தன் சேயை விலக்கும் தன்மையாகிய பிறழ்வுநடத்தை, அடித்தல், கைவிடுதல், மனம்திரிதல் ஆகியவற்றில் புலப்படுகிறது.

குழந்தை இறப்பு என்னும் தன்மை அஃறிணை உயிர்களில் மனிதர்க்குச் சமமாக விளக்கப்பட்டிருத்தலைக் காண முடிகிறது. தாய்சேய் உறவைப் பொறுத்தவரை மாந்தரின் ஆறாம் அறிவைப் பெற்றுவிட்டன என்பது போல சங்க இலக்கியத்தில் அஃறிணை உயிர்களின் செயல்பாடுகள் அமைந்துள்ள திறம் பெரிதும் வியத்தற்குரியது.

சங்ககாலத்தில் மகன் பெரிதும் சிறப்புப் பொருந்தியவனாகக் குறிக்கப்படுகிறான். கல்விச் சிறப்பு, போர்க்கள வெற்றி இவற்றால் தாயின் நேசம் கூடுகிறது. பண்பால் உயர்ந்த தலைவன் காமவயப்பட்டு உடலியல்

இன்பம் விரும்பினும், முறையாக மணம்பேசித் தலைவியை அடைந்துள்ளான். பெண்ணை விரும்பி அடையும் சமூக நடத்தை பற்றிய உளவியல் கூறுகளாக மடலேறல், ஏறுதழுவல் ஆகியவை காணப்பெறுகின்றன.

உடன்பிறந்தார் அன்பு, தங்கை திருமணத்தில் தமையன் நிலை, நண்பனுக்கு உதவுதல் ஆகியவை தாய் வளர்ப்பால் கிடைக்கும் சமூக உந்துதல்கள் எனலாம்.

அன்பும், தியாகமும் மட்டுமே தாயின் பண்புகள் எனக் கருதுதற்கில்லை. தற்காதல், பிறர்நலம் பேணல், கனவு காணல், கபடின்மை, பற்றார்வம், ஈடுபாடு, நம்பிக்கையற்ற தன்மை, விரக்தி, வெறுப்பு ஆகிய பல்வேறு கொள்கைகளின் கூட்டுக் கலவையாகத் தாய் திகழ்கிறாள்.

எங்கேனும் ஒரு மகள் உடன்போக்கு மேற்கொண்டாள் எனினும், தன் மகளுக்கும் அந்நிலை வருமோ என்ற அச்சம் தாயர் அனைவர்க்கும் உண்டு என்பது சங்ககாலம் தொடங்கித் தற்காலம் வரை வழிவழியாக வருவது புலப்படுகிறது.

தாயின் உண்மை இயல்பு அறியாத மகள் தன்விருப்பம் மதியாத தாய்க்கு எதிராகப் போராட்டம் நடத்துகிறாள். தாயின் கட்டுப்பாட்டிற்குப் பதிலடி தரும் நிகழ்வாக உடன்போக்கைக் கருதுகிறாள். ஆதரவுதரும் அன்னையைப் பாராட்டும் பெருந்தகைமையும் பெண்ணுக்கு இருந்துள்ளது. அழகுள்ள மகளால் பாராட்டப்பெறும் அன்னை, அவளால் போர் ஏற்படும் சிக்கல் தோன்றும்பொழுது ஊராரால் பழிக்கப்பெறுவதும் உண்டு.

களவில் மெய்யுறுபுணர்ச்சி இருந்திருப்பினும் மகப்பெறுதல் வரைவிற்குப் பின்பே நடந்துள்ளது. தாய், தந்தை, சேய் இணைந்த குடும்ப வாழ்வில் தந்தையின் பங்கும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்க அளவில் உள்ளது. தாய் இறப்பின்

தந்தையும், தந்தை இறப்பின் தாயும் குழந்தை வளர்ப்பில் அதிகப்படி கவனம் செலுத்தியுள்ளனர். சேய் வளர்ப்புக் கடமை இல்லாத, பெண்மை இயல்பூக்கம் மிகுந்த பெண்டிர், கணவன் இறப்பின் தாமும் உயிர் விட்டுள்ளனர். தந்தையின் பரத்தமையால் தாய் அடையும் மனத்தவிப்பு சேயால் நீங்குகிறது.

உரிமையோடு வாழ விரும்பும் சேய், பெற்றோரின் ஆதரவுடன் நல்ல குடிமகனாக உருவாகிறது. இளமையில் பெற்றோர் காட்டும் அன்பு, முதுமையில் மக்கள் தரும் பாதுகாப்பாக மாறுகிறது.

குழந்தைகள் தவறு செய்யும்பொழுது கண்டிக்கப்படுவதை வெறுத்தாலும், தவறை உணர்ந்தபின் தாயை வெறுப்பதில்லை.

கருவுலகம் தொடங்கி முதுமை வரை தாயும் சேயும் கொள்ளும் உறவு, உளவியல் சார்ந்ததாகவும், உளநலவியல் பெரிதும் போற்றப்பட்டிருந்ததாகவும் சங்க இலக்கியம்வழி அறியமுடிகிறது. உளவியல் கண்ணோட்டம் ஒவ்வொருவரின் தனித்தன்மையுடன், அவர்கள் மற்றவர்களிடம் கொள்ளும் உறவிலும் செலுத்தப் பட்டுள்ளதையும் அறிய முடிகிறது. தாய் என்னும் உறவு மற்ற உறவுகளோடு கலக்கும்பொழுது நிறைவு பெற்றால், அவ்வுறவுகள் எல்லார் உள்ளத்தையும் வளப்படுத்துகின்றன. நிறைவு தராத உறவுகள், வாழ்வின் உயிர்த்தன்மையை மாய்த்துவிடுகின்றன.

எதிர்கால வளர்ச்சிக்கு இன்றைய உரமாகும் குழந்தை வளர்ப்பைத் தான் ஆற்றும் சமுதாயக் கடமையாகத் தாய் மேற்கொள்கிறாள். உண்மையான தாயன்பே, சமுதாயத்தில் அன்பு கொண்ட உயர்ந்த குழந்தைகளை உருவாக்குகிறது என்பதை ஆய்வு புலப்படுத்துகிறது.

இவ்வாய்வுக் களம் மேலும் பல புதிய தலைப்புகளில் ஆய்வு செய்ய வழி அமைத்துக் கொடுப்பதாக உள்ளது. தற்காலத்தில் வளர்ந்து வரும் அறிவியல் துறைகளில் உளவியலில் ஆய்வுகள் பல வெளிவரின் மாநுடம் வளம்பெறும். சங்க இலக்கியத்தில் தந்தை, குழந்தை வளர்ப்பில் உளவியலின் பங்கு, சேய்-இளமை முதுமைப் பருவம், குடும்ப உருவாக்கத்தில் குழந்தையின் பங்கு ஆகிய தலைப்புகளில் இலக்கிய ஆய்வு நடத்தப்பெறலாம். பல்வேறு காரணங்களால் கூட்டுக்குடும்பங்கள் மறைந்துவரும் இக்காலச் சூழலில் தாய், தந்தை, சேய் மட்டுமே உள்ள தனிக் குடும்பங்களே இனி அதிகமாகும். மனித உறவு வளம்பட, ஒருவருக்கொருவர் புரிந்து கொண்டு வாழ்வு நடத்த சங்க இலக்கியம் உளவியல் முறையில் வழிகாட்டியது என்பதை இவ்வாய்வு எடுத்துக்காட்டியுள்ளது. சமுதாயப் பயன்பாட்டுக்கு ஏற்ற முறையில் பல்வேறு இலக்கியங்களிலும் உளவியல் வழி ஆய்வு நடத்தப்படவேண்டும் என்பதற்கு எனது இம்முயற்சி ஒரு தூண்டுகோலாக அமையும் எனில் அதுவே தமிழன்னைக்கு யான் சூட்டும் முத்தாரம் ஆகும்.

*****

## துணைநூற் பட்டியல்

### முதல்நிலை நூல்கள்


சாமிநாதையர், உ.வே., (பதிப்பாசிரியர்) — ஐங்குறுநூறு மூலமும் பழைய உரையும், கபீர் அச்சுக்கூடம், சென்னை, 4-ஆம் பதிப்பு, 1949.

----------------, குறுந்தொகை மூலமும் பழைய உரையும், கபீர் அச்சுக்கூடம், சென்னை, 1953.

----------------, பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், கபீர் அச்சுக்கூடம், சென்னை, 1956.

----------------, பரிபாடல் மூலமும் பரிமேலழகர் உரையும், கபீர் அச்சுக்கூடம், சென்னை, 3-ஆம் பதிப்பு, 1948.

----------------, புறநானூறு மூலமும் பழைய உரையும், டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல்நிலையம், சென்னை, 7-ஆம் பதிப்பு, 1971.

சோமசுந்தரனார், பொ.வே., (உரையாசிரியர்) — அகநானூறு, களிற்றியானைநிரை, கழகம், சென்னை, 1973.

----------------, மணிமிடைப்பவளம், நித்திலக்கோவை, கழகம், சென்னை, 1974.

----------------, பத்துப்பாட்டு-முதற்பகுதி, கழகம், சென்னை, 5-ஆம் பதிப்பு, 1973.

சோமசுந்தரனார், பொ. வே., (உரையாசிரியர்) — பத்துப்பாட்டு-இரண்டாம் பகுதி, கழகம், சென்னை, 1966.

திருவள்ளுவர், — திருக்குறள், கழகம், சென்னை, 20-ஆம் பதிப்பு, 1991.

துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உரையாசிரியர்) — ஐங்குறுநூறு மூலமும் விளக்கவுரையும், முதல் தொகுதி, அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு, 1957.

--------------------, — ஐங்குறுநூறு மூலமும் விளக்கவுரையும், இரண்டாம் தொகுதி, அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு, 1957.

--------------------, — ஐங்குறுநூறு மூலமும் விளக்கவுரையும், மூன்றாம் தொகுதி, அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு, 1958.

--------------------, — பதிற்றுப்பத்து, கழகம், சென்னை, 6-ஆம் பதிப்பு, 1973.

தொல்காப்பியர், — தொல்காப்பியம், இளம்பூரணர் உரை, கழகம், சென்னை, 1982.

----------, — தொல்காப்பியம், நச்சினார்க்கினியர் உரை, கழகம், சென்னை, 1973.

----------, — தொல்காப்பியம், சேனாவரையர் உரை, கழகம், சென்னை, 1973.

தொல்காப்பியர், *தொல்காப்பியம்*, பேராசிரியர் உரை, கழகம், சென்னை, 1973.

நக்கீரர், *இறையனார் அகப்பொருள்*, கழகம், சென்னை, 5-ஆம் பதிப்பு, 1969.

நாராயணசாமி ஐயர், பின்னத்தூர், அ., (உரையாசிரியர்) *நற்றிணை நானூறு*, கழகம், சென்னை, 1967.

நாற்கவிராசநம்பி, *அகப்பொருள் விளக்கம்*, கழகம், சென்னை, 4-ஆம் பதிப்பு, 1971.

பதிப்பாசிரியர் குழு, *பதினெண்கீழ்க்கணக்கு*, கழகம், சென்னை, 2-ஆம் பதிப்பு, 1963.

-------------, *நாலைந்திணை*, *இன்னிலை*, *கைந்நிலை*, கழகம், சென்னை, 6-ஆம் பதிப்பு, 1976.

புலியூர்க்கேசிகன், (உரையாசிரியர்) *ஐங்குறுநூறு*, 3 பகுதிகள், பாரிநிலையம், சென்னை, 1982, 1983.

இராசமாணிக்கனார், மா., (உரையாசிரியர்) *கலித்தொகை*, வள்ளுவர் பண்ணை, சென்னை, 1958.


## இரண்டாம்நிலை நூல்கள்


அரசுமணி, க., *பெண்ணே பெரியவள்*, அருணோதயம், சென்னை, 1961.

